# தரத்தில் உயர்ந்தது

Brooke Bond

Café BRAND

French coffee

NETT WEIGHT WHEN PACKED 100 gm.
BROOKE BOND INDIA PRIVATE LIMITED
COIMBATORE
CODE NO. C-4

ருசிக்கச் சிறந்த வகையில் கலவை செய்த ப்ரூக் பாண்ட் கபே பிராண்டு பிரெஞ்சு காபி இப்பொழுது எங்கும் கிடைக்கும். நறுமணத்தையும் சுவையையும் காக்க இவை ஸெலபோன் பைகளில் விற்பனை செய்யப்படுகின்றன. பிரெஞ்சு காபியில் நல்ல மணம், சுவை இவற்றைப் பெற ப்ரூக் பாண்ட் காபியையே விரும்பிக் கேளுங்கள். இதுவே நீங்கள் கொடுக்கும் பணத்திற்குச் சிறந்தது.



## ப்ரூக் பாண்ட்

# கபே பிராண்டு

## பிரெஞ்சு காபி

JWTBB 403

## பொருளடக்கம்



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

# கல்கி

## 2 - 9 - 1962 இதழில்

பிரபல சரித்திரக் கதாசிரியர்

# ஜெகசிற்பியன்

எழுதும்



# பத்தினிக் கோட்டம்

புதிய வரலாற்று நவீனம்

## ஆரம்பமாகிறது!

வர்ஜீனியா புகையிலை இறக்குமதியாகும் விதேசிப் பண்டமென்றே கருதப்படுகிறது. உண்மையில், நிலமும் சீதோஷ்ண நிலையும் ஒத்துக்கொள்ளுமேயானால், உலகின் எப்பகுதியிலும் உற்பத்தி செய்து கொள்ளக்கூடிய ஒருவகைப் புகையிலையே வர்ஜீனியா. இன்று சிகரெட் உற்பத்தியில் முதன்மையான நாடுகள் இந்தியப் புகையிலையைப் பெருமளவில் வாங்கிச் 'செல்வதைப் பார்க்கையில், இந்தியாவின் வர்ஜீனிய புகையிலை அதி உன்னதமானது 'என்பது நிரூபணமாகிறது.



# வர்ஜீனியா விதேசிப் புகையிலை அல்ல.

Panama 20

CIGARETTES




பம்பாய்—37.

பாரதத்தில் இத்தகைய தேசீய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

## பனமா

ஒரு நல்ல சிகரெட்—
இறுதிவரை இன்பமூட்டுவது

GT. 706-A

Greens' Advtg.



மலர் 22

தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

இதழ் 4

# காங்கிரஸின் தோல்வி

டாக்டர் சுப்பராயன் அவர்களின் ஸ்தானமாகிய திருச்செங்கோடு உப தேர்தலில் காங்கிரஸ் தோல்வி அடைந்ததைப் பற்றிப் பத்திரிகை நிருபர்கள் பிரதமர் நேருஜியை அபிப்பிராயம் கேட்டபோது, "அதற்குக் கொஞ்சம் முக்கியத்துவம் இருக்கிறது; ஆனால் அதைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை" என்று அவர் பதிலளித்தார். இதை மேலும் அவர் விளக்கவில்லை.

உண்மையை உள்ளபடியே விளக்குவதாக இருந்தால் காரமான விஷயங்களைச் சொல்ல வேண்டி யிருக்கும். அது காங்கிரஸ் கட்சிக்கு உகந்ததாக இராது. ஆனாலும் நல்ல ஆட்சி முறை வேண்டும் என்று நாட்டின் நலனில் அக்கறை கொண்டுள்ள எல்லோரும் இந்த உப தேர்தல் கூறும் உண்மையை உணராமலிருக்க முடியாது.

உபதேர்தலைத் தங்களது கௌரவத்தை நிலைநாட்டும் ஒரு சந்தர்ப்பமாகக் காங்கிரஸ் கட்சியும் தி. மு. க.வும் கருதின. பிரசாரங்களும் அந்த முறையில்தான் நடந்தன. காங்கிரஸ் சார்பில் டாக்டர் சுப்பராயன் குமாரரும் கம்யூனிஸ்ட் கட்சித் தலைவருமான திரு மோகன் குமாரமங்கலம் கூடப் பேசினர். சென்னை முதலமைச்சரும் அவருடைய சகாக்களும் தேர்தலுக்கு முன்தினம் வரையில் தீவிரமாகவே பிரசாரம் செய்தார்கள். முதன் மந்திரி காமராஜ் அவர்கள் இத்தொகுதியில் தேர்தல் தேதி வரை முகாம் இருந்தார்.

இவ்வளவு பலமான முயற்சிகளுக்குப் பின்னரும், காங்கிரஸ் அபேட்சகர் தோல்வியே அடைந்தார். வோட்டு வித்தியாசம் கொஞ்சம்தான். ஆனால் இதை மிகைப்படுத்தி உண்மையைக் குறைத்து மதிப்பிடு செய்வதில் பொருளில்லை. சென்ற தேர்தலில் பல வெற்றிகள் சிறுபான்மை வோட்டு வித்தியாசத்தில்தான் கிடைத்துள்ளன. அமைச்சர் திரு பக்தவத்ஸலத்தின் வெற்றி கூடச் சிறுபான்மை வோட்டு வித்தியா சத்தில் கிடைத்ததுதானே!

உபதேர்தலில் வோட்டுச் சாவடிக்குச் சென்று வாக்குப் பதிவு செய்த வாக்காளர்களின் எண்ணிக்கை கூடக் கணிசமாகக் குறைந்திருந்தது. முன் தேர்தலில் 62 சதவிகிதம் வோட்டுக்கள் பதிவாயின. ஆனால் இப்போது 47 சதவிகிதம் வாக்காளர்கள்தான் வாக்குரிமை வழங்கினார்கள். பெரும்பாலும் காங்கிரஸுக்குக் கொடுக்கப்பட்ட வாக்குகள் தான் எண்ணிக்கையில் குறைந்தன. தி. மு. க. வோட்டு அவ்வளவாகக் குறையவில்லை. அதாவது, முன்பு காங்கிரஸுக்கு வோட் செய்தவர்களில் பலர் இந்தச் சமயம் வாக்குப் பதிவு செய்யவில்லை.

ஏறக்குறைய இரண்டு லட்சம் வாக்குகள் பதிவாயின. அப்படியிருந்தும் வெற்றி கிடைக்கவில்லையென்றால், காங்கிரஸ் கட்சியின் நிர்வாகத்தைத் திருச்செங்கோடு வாக்காளர்கள் ஏற்கவில்லை என்பதுதான் அதற்குப் பொருள். அவர்களுடைய அதிருப்தியை ஜனநாயக முறையில் கிடைத்த தருணத்தில் தெரிவித்து விட்டனர்.

காங்கிரஸ் கட்சியின் ஏமாற்று வித்தைகளின் உண்மையையும், அதிகார பலத்தைக் கொண்டு தங்களை நிரந்தரமாகப் பதவியில் இருத்திக் கொள்ள அவர்கள் செய்யும் தந்திரங்களையும் திருச்செங்கோடு வாக்காளர்கள் உணர்ந்துகொண்டதற்கு அவர்களைப் பாராட்ட வேண்டும். காங்கிரஸ் பிரசாரத்தின் மோக வலைக்குள் அகப்பட்டு மயங்காமல் இருந்ததற்கு அவர்களை மெச்ச வேண்டும்.

மற்ற வாக்காளர்களுக்குத் திருச்செங்கோடு வழிகாட்டியிருக்கிறது. அடுத்த உபதேர்தல் ஆகஸ்டு 25ந் தேதி சித்தூரில் நடைபெற விருக்கிறது. ஸ்ரீ அனந்தசயனம்

அய்யங்கார் அவர்கள் இந்தத் தொகுதியிலிருந்து காங்கிரஸ் அபேட்சகராக வெற்றி பெற்றபின் பீஹார் ராஜ்யத்துக்குக் கவர்னராக நியமிக்கப்பட்டதனால், இந்த உபதேர்தல் நடக்கிறது. சுதந்திரக் கட்சித் தலைவர் ஆசாரிய என். ஜி. ரங்காவும், காங்கிரஸ் கட்சியின் சார்பில் திரு விசுவநாத ரெட்டியும் இங்கே போட்டியிடுகின்றனர்.

ஆந்திராவில் நடைபெறும் நிர்வாகத்தின் தன்மையும், போக்கும், நடவடிக்கையும் மற்ற ராஜ்யங்களில் நடக்கும் காங்கிரஸ் நிர்வாகத்தைப் போன்றதே தான். எனவே எந்தெந்தக் காரணங்களுக்காகத் திருச்செங்கோடு வாக்காளர்கள் காங்கிரஸைத் தைரியமாகத் தோல்வியுறச் செய்தனரோ, அதே காரணங்கள் சித்தூரிலும் இருக்கின்றன. கம்யூனிஸ்டு காங்கிரஸ் கூடா நட்புகூட சென்னை மாநிலத்தில் இருப்பதைவிட, ஆந்திரப் பிரதேசத்தில் மிக நெருக்கமாக வேலை செய்கிறது. காங்கிரஸ் மேலிடங்களிலிருந்து பிரசாரங்கள் பலமாக நடைபெறுகின்றன. பணம், பதவி, செல்வாக்கு இவற்றைக் கொண்டு தேர்தல் தந்திரங்கள் எவ்வளவு உண்டோ அத்தனையும் கையாளப்படுகின்றன. இவற்றையெல்லாம் கண்டு சித்தூர் வாக்காளர்கள் மயங்க மாட்டார்கள் என்றே நம்பலாம். திருச்செங்கோடு வாக்காளர்களைவிட அறிவிலும் ஆற்றலிலும் திறத்திலும் அவர்கள் எவ்வகையிலும் குறைந்தவர்கள் அல்ல.

தவிரவும் சித்தூர் வாக்காளர்களுக்கு ஓர் அதிர்ஷ்டம் வாய்த்திருக்கிறது. காங்கிரஸ் கட்சிக்கு எதிராகப் போட்டியிடும் ஆசாரிய என். ஜி. ரங்கா அரசியலில் நீண்டகாலம் ஈடுபட்டு அநுபவம் பெற்றவர். விவசாய மக்களின் வாழ்வையும் நலனையும் தமது வாழ்க்கையாகக் கொண்டவர். காங்கிரஸ் கட்சியில் நெடுங் காலம் நெருங்கிய தொடர்பு கொண்டு பணியாற்றி, அதன் கொள்கைகளும், போக்கும், நிர்வாகச் சீர்கேடும் தமக்குப் பிடிக்காமல் அதைவிட்டு வெளியேறியவர். காங்கிரஸ் கட்சிக்கு எதிராக ஆரம்பிக்கப்பட்ட சுதந்திரக் கட்சிக்குத் தகுதி வாய்ந்த தலைவர் இவரே என்று ராஜாஜியால் தேர்ந்தெடுக்கப்பட்டவர். மக்கள் சபையின் விவகாரங்கள் எல்லாம் இவருக்குத் தலைகீழ்ப் பாடம். அவர் இல்லாத மக்கள் சபை, இப்போதுள்ள ஏகக் கட்சி சர்வாதிகார ஆட்சியில், ஒளியின்றி மங்கியுள்ளது.

---















இத்தகைய ஒப்பற்ற தலைவரைத் தேர்ந்தெடுத்து லோக சபைக்கு அனுப்பும் அரிய வாய்ப்பு சித்தூர்த் தொகுதி வாக்காளர்களுக்கு இப்போது கிட்டியிருக்கிறது. இந்த வாய்ப்பை அவர்கள் நிச்சயம் பயன்படுத்திக் கொண்டு, இரு ரங்காவைத் தங்கள் பிரதிநிதியாக ஆக்கிக் கொள்ளும் கௌரவத்தையும் அடைவார்கள் என்று நம்புகிறோம்.

## வானவெளியிலே

மூன்பு இருவர் வானவெளியிலே உலகத்தைச் சுற்றி வந்த அனுபவத்தைத் தொடர்ந்து இப்போது ருஷ்யா மேலும் இரண்டு ஸ்புட்னிக்குகளை ஆட்களுடனும், மூன்றுவதை ஆள் இல்லாமலும் வான் வெளியில் பறக்க விட்டிருக்கிறது. வான வெளியிலேயே ஒரு ஸ்புட்னிக்கில் உள்ளவர் மற்ற ஸ்புட்னிக்கில் உள்ளவரைப் பார்க்கவும், ரேடியோ மூலம் பேசவும், அங்கிருந்து பூமிக்குச் செய்திகள் அனுப்பவும், பூமியிலிருந்து செய்திகளைப் பெறவும் வசதிகளையெல்லாம் செய்திருக்கின்றனர் ருஷ்ய விஞ்ஞானிகள். இந்தச் சாதனைகளுக்காக ருஷ்ய விஞ்ஞானிகளைப் பாராட்ட வேண்டியதுதான்!

உலகத்தின் கவனமெல்லாம் இந்த அற்புத நிகழ்ச்சியின் மீதே பதிந்துள்ளது. போட்டா போட்டி மனப்பான்மையுடனேயே செயல்கள் நடைபெறும் அமெரிக்காவில் இந்த வானவெளி ஆராய்ச்சிகளிலும் சாதனைகளிலும் ருஷ்யா தன்னை மிஞ்சி விட்டதே என்று ஏக்கம் கூட இருக்கும்.

விஞ்ஞான சாதனை பற்றி மகிழ்ச்சி கொள்ளும் இத்தருணத்தில் ஓர் ஐயமும் ஏற்படுகிறது. பிரபஞ்சத்தின் சூழலைப் பற்றிய ஆராய்ச்சி மனப்பான்மையுடன் மட்டும் இந்த முன்னேற்றங்கள் ஏற்பட்டுள்ளனவா என்பதே அது. இப்போது மேல்நாடுகளில் நடைபெறும் ஆராய்ச்சிகள் இத்தகைய மனப்பான்மையில் நடைபெறவில்லை என்றே தோன்றுகிறது. அணு ஆயுதப் போட்டியின் அங்கமும் உபாங்கமுமே விண்வெளி ஆராய்ச்சிகள். ஆகையால் இவற்

றின் முடிவான பயன் உலக நன்மைக்காக இருக்க முடியாது.

பாரத நாட்டைப் பொறுத்த வரையில் விஞ்ஞானம் பெருமளவில் முன்னேறியுள்ளது என்று சந்தோஷப்படுவதுடன் நிற்க வேண்டும். ''ருஷ்யாவைப் பார், ருஷ்யாவைப் போல நாமும் ஆக வேண்டும்'' என்று உற்சாகமேலீட்டால் நாம் அந்த நாட்டை எல்லா அம்சங்களிலும் 'காப்பி' அடிக்க முற்பட வேண்டியதில்லை. நமது பண்பாட்டு மேன்மைக்கும், சுகவாழ்வுக்கும், ஆன்மீக வளர்ச்சிக்கும் ஸ்புட்னிக்குகளும் வானவெளிப் பயணமும் அவசியமல்ல. இவை இல்லாவிட்டால் நமக்கு எந்த வித ஆபத்தும் நேர்ந்து விடாது.

ஸ்புட்னிக் பறக்க விடுவது போன்ற திட்டங்கள் மிகவும் கவர்ச்சிகரமாக இருக்கின்றனவென்று நாமும் இத்துறையில் இறங்க ஆர்வம் காட்டினால், வல்லரசுகளிடமிருந்து உதவிகள் கூடக் கிடைக்கலாம். ஆனால் இத்தகைய உதவிகளால் நம் நாட்டுக்கு நன்மை கிடைக்காது.

---

சத்தியத்தின் திருக்கோயிலாக விளங்கும் சென்னை உயர்நீதி மன்றத்தின் நூற்றாண்டு விழா வைபவங்களை இங்கு நம் நேயர்களுடன் பகிர்ந்து கொள்கிறோம். (1) புது மெருகு பெற்று விளங்கும் உயர்நீதி மன்றம் (2) பிரதம நீதிபதி ஸ்ரீ எஸ். ராமச்சந்திரய்யர் அவர்களும் விழாவுக்குத் தலைமை தாங்கிய ராஷ்டிரபதி ராதாகிருஷ்ணன் அவர்களும் (3-4) ராஜாஜி, டாக்டர் சி.பி., காமராஜ், பதஞ்சலி சாஸ்திரி, டி. எல். வேங்கடராமய்யர், சி. சுப்பிரமணியம், செரியன் முதலிய பிரமுகர்கள் விழாவுக்கு விஜயம் செய்தார்கள். (5) ஸ்ரீ வி. வி. கோபாலரத்தினம் தாம் எழுதிய நினைவுக் குறிப்பு நூலை ராஷ்டிரபதிக்கு அளிக்கிறார். (6) விழாக் கூட்டத்தினரையும், ராதாகிருஷ்ணன் அவர்கள் உரையாற்றுவதையும் காணலாம்.











ஆசாரிய சங்கரரால் பிரதிஷ்டை செய்யப்பட்டவளும், புலன்களை அடக்கி அவை மீண்டும் வெளிப்போகாமல் காக்கும் ஆற்றல் நிறைந்த துறவிகளால் வணங்கப் படுகிறவளும், அறம் பொருள் இன்பம் வீடு ஆகிய எல்லாப் பேறுகளையும் அளிப்பவளும், உலகைப் படைத்து, காத்து, லயம் செய்து கொள்ளும் சாவித்திரி தேவியும், பரமகுரு உருவில் எங்கும் உலவுபவளுமான சாரதாம்பிகையை, சர்வாங்க சுந்தரியை, சிருங்ககிரியில் உறையும் தாயை, பஜிக்கிறேன்.

—செங்காலிபுரம் பிரம்மஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர் இயற்றிய ஸ்ரீ சாரதாஷ்டகம்.

## 16. துறவும் உறவும்

"சங்கரா!" என்று கூவியபடி ஆசாரியருடைய பின் கழுத்தில் தன் இரு கைகளையும் சேர்த்துக் கட்டிக் கொண்டாள் ஆரியை. அடுத்தகணமே அந்த ஆவேசம் அடங்கியது. அவளது கைகள் துவண்டு விழுந்தன. நாவும் துவண்டு குழறிற்று.

'என்ன கேள்வி கேட்டாய், சங்கரா! உன்னை எனக்குத் தெரியவில்லையா என்று கேட்டாய்? உன்னைத் தவிர எனக்கு வேறென்ன தெரிகிறது; தெரிந்தது? இத்தனை நாளும் உன்னை அன்றி வேறு எதை நான் பார்த்துக் கொண்டிருந்தேன்? உன்னையன்றி வேறெதை நினைத்துக் கொண்டிருந்தேன்? 'எப்போதும் கண்ணனை எண்ணி வா; சாகும் போது என்னை நினைத்தால் வருவேன்' என்றாய் நீ. நான் இருந்த போதெல்லாம் உன் எண்ணமாகவே தான் இருந்தேன். ஆனால் சாகும்போது மட்டும் கோபாலனை ஸ்மரிக்க விரும்பினேன். ஏனென்றால் என் மரண காலத்தில் நான் உன்னை நினைத்தால் நீ என்னிடம் ஓடி வருவாய்; அதனால் உன் காரியங்கள் தடைப்படும் என்பதாலேயே உன் ஞாபகத்தை அகற்றப் பார்த்தேன். காசி போய் வந்தவர்களெல்லாம் நீ எவ்வளவு பெரும்புகழும் பெற்று விளங்குகிறாய் என்று சொன்னார்கள். அவ்வப்போது உன் சாதனைகளைப் பராபரியாகக் கேட்டு, உன்னைப் பெற்றெடுத்தபோதைவிடப் பெருமிதமும் பூரிப்பும் அடைந்து வந்திருக்கிறேன். உலகத்தை உத்தாரணம் செய்வதற்காக ஒவ்வொரு நிமிஷத்தையும் செலவிடும் உன் பொழுதை எனக்காக அபகரிக்கக் கூடாது என்றே இப்போது உன் நினைவை நீக்கப் பார்த்தேன். நீலமேக சியாமளனை தியானிக்க முயன்றேன்.

அது என்னால் முடியவில்லையா? மீண்டும் உன்னையேதான் எண்ணினேனா? நீ என் பக்கத்திலிருக்க வேணுமென என்னை அறியாமல் உள்ளூற ஆசைப்பட்டேனா? நீ ஏன் உன் காரியத்தை யெல்லாம் விட்டுவிட்டு என்னிடம் வந்தாய்?'

சொல்லாலும் ஒலியாலும் ஆரியை இவ்வளவையும் மொழிந்தாள் என்று கூறுவதற்கில்லை தான். உள்ளத்து உணர்ச்சிகளுக்கு உரிய உருக் கொடுக்க வார்த்தைகள் அகப்படாத நிலையில்—அப் படிக் கிடைத்த சொற்களையும் கூட வெளியிட உடல் இடம் கொடுக்காத நிலையில் — இதயத்தின் மொழியால், அன்பின் பாஷையால் இவ்வளவையும், இவ்வளவுக்கு மேலும், கொட்டித் தீர்த் தாள் ஆரியாம்பிகை.

அவளைத் தன் மீது சாய்த்துக் கொண்டு அவளுடைய உடலின் துடிப்பு முழுவதையும் புரிந்து கொண்டாற் போலவே உள்ளத் துடிப்பையும் புரிந்து கொண்டார் சங்கரர். அவருடைய உள்ளமும் துடித்தது.

'அம்மா! நீ என்னைப் பற்றி என்ன எண்ணம் எண்ணி விட்டாய்? உன் இறுதிக் காலத்தில் உனக்கு அருகில் இருந்து பணிவிடை செய்வதைவிட எனக்குப் பிடித்தமான வேறு திருப்பணி யும் உண்டு என்று எண்ணினாய்? உனக்கு நான் சுசுரூஷை செய்வது ஏதோ உனக் குத் தகாத குற்றவேல் என்று நினைத் தாய்? கடைசிக் காலத்தில் பக்கத்தி லிருந்து உனக்கு ஆறுதல் அளிப்பதைத் தவிர உனக்கு நான் வேறென்ன செய் திருக்கிறேன், செய்யத்தான் போகி றேன்? நீ எனக்காக செய்த ஒவ்வொரு தியாகத்தையும், அநுபவித்த ஒவ்வொரு இன்னலையும் எண்ணிப்பார்த்தால் உனக் குப் பிரதியாக நான் செய்யக் கூடியது என்ன இருக்கிறது?' என்றெல்லாம் அன் பின் மொழியிலேயே கேட்டார் சங்கரர்.

உணர்ச்சிகளின் உத்வேகத்தில் ஆசாரி யரின் அந்த அன்பு மொழியே 'மாத்ருகா பஞ்சகம்' என்ற அற்புதமான சுலோ கங்களாக வடிவம் பெற்றது.

''தாயே, நான் உன் வயிற்றில் தோன்றிய நாளாக என் பொருட்டு எத்தனை கஷ்டங்களை இன்பமாகக் கருதி வரவேற்றிருப்பாய்? உண்ண முடியா மல், உறங்க முடியாமல் எவ்வளவு தவித் திருப்பாய்? பிடித்தமான ஆகாரங்களை நீக்கி எவ்வளவோ பத்தியங்கள் இருந் திருப்பாயே! எனக்கு இதமாக இருக்க வேணுமென்பதற்காக மேல் முகமாகப் படுத்து மூச்சுத் திணறியிருப்பாயே! நான் பிறந்த பின்னும் எனக்காக உட லால் எவ்வளவோ பாடுபட்டாயே!

''அவை போதாதென்று உள்ளத்தா லும் எனக்காக எவ்வளவு வேதனைப் பட்டாய்! அன்றைக்கு விடியற்காலே நான் குருகுல வாசம் செய்த ஆசிரமத் துக்கு வந்து அலறினாயே — நான் துறவி யானதாகக் கனவு கண்டு அந்தத் துக்கம் தாளாமல் என்னைத் தேடிவந்து கண்ணீ ரைக் கொட்டினாயே — அது ஒன்றுக்குப் பிரதி செய்யவே என்னால் இயலாதே!''

அவள் கண்ட இக் கனவைப் பிடி வாதமாக நனவாக்கினான் மகன். அவளை ஒரேயடியாக ஏமாற்றி விட்டுப்போயே போய் விட்டான்! ஒரேயடியாக ஏமாற்றி விட்டா? இல்லை. இத்தனை ஆண்டுகளாக அவள் அப்படித்தான் நினைத்தாள். ஆனால் கடைசியில் இதோ அவன் வந்தே விட்டான்! அன்றுபோன குழந்தை சங்கரனுக்கும் இன்று வந் துள்ள இந்த சங்கரனுக்கும் எவ்வளவு மாறுபாடு?

'காஷாயம் உடுத்தி, சிகையைக் களைந்து, வயசில் எவ்வளவோ மாறிவிட் டாலும் அவளைத் தனக்கு நன்கு அடை யாளம் புரிகிறதே! அதுதான் தாயன்பு என்பதா?'

மகனின் துறவறக் கோலத்தை எண்ணியவுடன் மறுபடியும் ஓர் ஆவேசம் ஆரியாம்பிகையைப் பற்றிக்கொண்டது. அந்த ஆவேசத்தாலேயே அவள் வாயும் கூடப் பேசும் திறனைப் பெற்று விட்டது.

''சங்கரா, நீ ஏனடா சந்நியாசி யாகப் போனாய்? உலகமெல்லாம் உன் னைக் கொண்டாடுகிறது என்று தான் கேள்விப்பட்டேன். இருந்தாலும்.... இருந்தாலும்.... நீ ஏன் இப்படித் தலை யும் வேஷமுமாக....

''இந்தக் குடும்பம் இருக்கிறதே, சங்கரா, அது போக போக்கியங்களுக் குப் பேர் போனது. உன் தாத்தாவை ஊரெல்லாம் வித்யாதி ராஜா என்றே தான் அழைத்தது. வெண்பட்டு உடுத் திக் கொண்டு, மகர கண்டியும், காப் பும், குண்டலமும் ஜொலிக்க, உடம்பெல் லாம் சந்தனம் பூசிக் கொண்டு அவர் கட்டுக் குடுமியை ஆற்றிக் கொண்டு நிற்பதைப் பார்த்தால் என்ன ராஜ கம்பீரமாக இருக்கும் தெரியுமா?

''நீ... நீ மட்டும்... ஏன் இப்படி முடியை எடுத்துவிட்டு இந்த முரட்டுத் துணியை உடுத்திக் கொண்டாய்? உடலை யெல்லாம் உறுத்தும் ருத்திராட் சங்களைப் போட்டுக் கொண்டாய்?.... ஏன், சங்கரா! அவ்வளவு வேதனை யுடன் என்னைப் பார்க்கிறாய்? நான் பேசுவது உனக்குப் பிடிக்க வில்லையா? அல்லது என்னை மேலே சாத்திக் கொண் டிருப்பது உனக்கும் கஷ்டமாக இருக் கிறதா? ஆமாம், உன் மடியில் நானா

படுப்பது? என் பேரன் பேத்திகள் அல்லவா விழுந்து புரள வேண்டும்?''

சங்கரருக்குத் துக்கம் மேலிட்டது. அவன் எவ்வளவோ விவேகியாகத் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டிருந்தும் எத்தனை ஆயிரம் ஆசாபாசங்கள் அவன் உள்ளத்தில் கிளர்ந்திருக்கின்றன? அத்தனை ஆயிரம் அபிலாஷைகளையுமல்லவா அவள் புதைத்து வைத்து மறுகிப் போய் இருக்கிறாள்? உருகிப் போயிருக்கிறாள்? சித்தம் தெறிய இந்நிலையில் அந்த எண்ணிறந்த இச்சைகளை யெல்லாம் கொட்டித் தீர்க்கும் பேதைத் தாயை எப்படிச் சமாதானப் படுத்துவது? ஆசாரியர் யோசித்தார். பிறகு கூறினார்:

''அம்மா, நான் எப்படி யெப்படி எல்லாம் இருக்க வேணுமென்று நீ ஆசைப்படுகிறாயோ அப்படி யெல்லாம் கூட வாழ்ந்திருக்கிறேன்.

''தாத்தாவை 'ராஜா' என்று உபசாரமாக அழைப்பார்கள் என்றாய். நான் உண்மையாகவே சிறிது காலம் மன்னனாகி இருந்தேன் அம்மா. தலை நிறைந்த கேசத்தை வாசனை தைலங்கள் இட்டு அலங்கரித்துக் கொண்டதோடு அதில் மணி மகுடம்கூடத் தரித்திருக்கிறேன் அம்மா. உடம்பில் காசிப் பட்டும், காச்மீரச் சால்வையும் அணிந்திருக்கிறேன் அன்னையே! எத்தனையோ ராஜகுமாரர்கள் என் மடியில் விழுந்து கொஞ்சியும் இருக்கிறார்கள் தாயே! அதிலெல்லாம் இல்லாத சுகத்தை இப்படி எல்லாவற்றையும் விட்டு விட்டு இருக்கும் போதுதான் காண முடிகிறது. விளையாட்டுக்குச் சொல்லவில்லை. மெய்யாகவே ஆனந்தம் என்பது நமக்கு வெளியில், மக்களிலும் செல்வத்திலும் அணி பணிகளிலும் இல்லை. நமக்குள்ளேயேதான் ஆனந்தம் இருக்கிறது. நாமே ஆனந்தந்தான்...''

இப்படித் தொடங்கி அன்னைக்கு அத்வைத ஞானத்தை அளிக்க முயன்றார் ஆசாரியர். அவள் அதனை அநுபவித்து அமர வாழ்வுபெற வேணுமென விரும்பினார். ஆனால் அவர் கூறியவற்றை அவள் காதில் வாங்கிக் கொள்வதாகத் தெரியவில்லை. சிறிது சிறிதாக அவளுடைய புலன்கள் கழன்று கொண்டிருந்தன.

ஆசாரியர் அத்வைத உபதேசத்தை நிறுத்தினார். சிவ பெருமானின் திருநாமங்களைக் கூறலானார். அத்வைத பாவனையை அநுபவித்து முக்தி பெற முடியாத அன்னைக்கு அன்பு காட்டித் தாணுகவே கைவல்யமளிக்குமாறு கைலாய நாதனை வேண்டினார்.

ஈசன் அனுப்பி வைத்த பிரமத கணங்கள் ஆரியாம்பிகையை இட்டுச் செல்வதற்காக வந்தன.

மங்கிக் கொண்டிருந்த ஆரியாம்பிகையின் கண்களில் அந்தக் காட்சி மட்டும் பளிரென விழுந்தது. அவளது கண்கள் பயப்பிராந்தியில் மிதந்தன. ''ஐயோ, பூதக் கூட்டமடா, சங்கரா!'' என்று கூவியபடி மகனைக் கட்டிக் கொண்டவள் மறுபடியும் பிரக்ஞை இழந்தாள்.

உடனே ஆசாரியர் நாராயணனைத் துதிக்கத் தொடங்கினார். அந்த வாக்கின் விசேஷமானது பகவானின் பணியாட்களை யெல்லாம் காலடிக்குக் கட்டி இழுத்து வந்தது. பணியாட்கள் என்றால் சிவபிரானது கிங்கரர்கள் போன்றவர்களா அவர்கள்? கிரீடமும், குண்டலமும், பீதாம்பரமும், திவ்ய ஹாரமும் பூண்டு, சாட்சாத் வைகுண்ட நாதனைப் போலவே சங்கமும் சக்கரமும் தாங்கிய சியாமள வண்ண சுகுமாரர்கள் ஆரியாம்பிகையை அணுகினர். ஆரியையின் மனமும் நாரணனை நாடத் தொடங்கியது. அவளுடைய உள்ளத்தில் பாற்கடல் அலை மோதிப் பெருகிற்று. அதன் பரிசுத்தமான நிறம் அவளது உணர்வுகளைப் பாவனப்படுத்தியது. அதன் இன் சுவை அவள் அகமெல்லாம் தித்தித்தது. தண்டிலிருந்து சருகு பதமாக விழுவது போல, செடியிலிருந்து பவள மல்லிகை மலர் சொகுசாக விடுபடுவது போல, முற்றிய கனி காம்பிலிருந்து இற்று விலகுவது போல ஆரியாம்பிகையின் ஆத்மாவை அவள் உடலிலிருந்து மீட்டனர், விஷ்ணு சேவகர்கள்; திவ்விய வடிவமளித்து அவளைப் பல்லக்கில் தாங்கிச் சென்று பக்தவத்ஸலனின் பாத கமலங்களில் சமர்ப்பித்தனர். இறுதியில் தன்னை எண்ணியோருக்குத் தன் நிலையையே அளிப்பதாகப் பார்த்த விடம் உறுதி கூறி 'இதில் சந்தேகமேயில்லை' என்றும் அறுதியிட்டவனல்லவா பரம புருஷன்?

ஆரியாம்பிகையின் சடலம் சங்கரரின் உடலிலிருந்து சரிந்தது. ஒரு முகூர்த்த காலத்துக்கு ஞான விவேகியின் விரக்தியும் கூடச் சரிந்தது. கண்களைத் துடைத்துக் கொண்டார்.

சுற்றுமுற்றும் பார்த்தார். பங்காளிகளைப் பார்த்தார். பங்காளிகளாவது? அவர்களுக்கும் அவருக்கும் எதில் பங்கு? பங்கு போடாத வஸ்து, போட முடியாத வஸ்து ஒன்று தான் அவர் அறிந்தது. ஆனால் அவர்கள் அப்படி நினைக்கவில்லை.

'ஏதேது, கழுகுக்கு மூக்கில் வியர்த்தாற் போல் தாயார்க்காரி மண்டையைப் போடும் சமயம் பார்த்து வந்து சேர்ந்திருக்கிறான்! சொத்துக்குத்தான் அடி போடுகிறானோ?' என்று எண்ணினார்கள்.







உலகமெல்லாம் உறவினராகக் கருதிக் கொண்டாடிய சங்கரரை அவரது ஊரார், உற்றார் மட்டும் புரிந்து கொள்ளவில்லை.

ஆம், நாடு நகரமெல்லாம் முத்துப் பந்தலெடுத்து, மலர்ப் பாதை பாவி, பூரணகும்பமளித்து வரவேற்றாற் போல அவர் சொந்த ஊருக்கு வரவில்லையே! ''மக்களாலும் செல்வத்தாலும் அமரநிலை அடைய முடியாது; தியாகத்தால் தான் அமரநிலை அடைய முடியும்'' என்று முன்பு அன்னையிடம் கூறித் துறவுபெற்ற அவருக்கு அதே வேத வாக்கியங்களால் தான் நாடு நகரமெல்லாம் நல்வரவு கூறின. ''அந்தத் தியாகத்துக்கு இலக்கணமாக, சந்நியாச யோகத்தில் அமிழ்ந்து சுத்த சத்துவமாகத் திகழ்பவர் தாங்கள்'' எனப் பொருள்படும் உபநிஷத வாசகத்தைக் கூறி உலகெலாம் அவரை வரவேற்றது போல் காலடி தான்பெற்ற செல்வரை வரவேற்கவில்லையே, ஏன்?

உலகுக்கெல்லாம் துறவியாக இருந்தவர் இங்கு அந்தத் துறவறத்தையும் துறந்து தமது அன்னைக்கு மட்டும் உறவினராக வந்ததற்காகத் தமக்குத்தாமே அளித்துக் கொண்ட அபராதமோ இது? என்ன! அன்பு செலுத்துவதற்கும் அபராதமா?

ஆசாரியர் இன்றைய சந்நியாச தர்மத்தைவிட அன்றைய பாலப் பருவத்தில் அன்னை காட்டிய அன்பையே பெரிதாக மதித்தார்.

"தகனத்துக்கு ஏற்பாடு செய்யுங்கள்'' என்றார் சங்கரர்.

உடனே கொள்ளி போடுவதற்கு நான், நீ என்று உறவுக்காரர்கள் போட்டி போட்டுக் கொண்டு வந்தார்கள். பொருளாசை செய்யாத காரியமில்லை அல்லவா?



திவலைகள் பரவின. தன்னால் அவனுக்கு ஆற்றக் கூடிய கடன் வேறென்ன இருக்கிறது? 'உலகத்துப் பிள்ளைகள் போல் அவனுக்கு உணவும், உடையும், இருக்கையும் அளித்து ஆதரிக்கவில்லை. இன்று அவன் உடல் ஒன்றுக்கும் உதவாமற் போனபின், அதனை இல்லாமல் செய்யும் பணியையாவது மேற்கொள்ளுவோமே!'

பந்துக்களின் சந்தேகம் வலுத்தது. ''நன்றாயிருக்கிறது உன் பேச்சு! சந்நியாசி

''இல்லை, நானேதான் பிரேத சம்ஸ்காரம் செய்யப் போகிறேன். அந்த உடம்பில் நான் பத்து மாதம் குடியிருந்தேன். வெளி வந்த பின்னும் பத்து மாதம் அந்த உடல் எனக்கு உணவு அளித்திருக்கிறது. எனவே, அந்த உடலை அக்கினி பகவானுக்கு நானேதான் அர்ப்பணிக்கப் போகிறேன்'' என்றார் சங்கரர்.

அவர் கண்கள் கசிந்தன; முகமெல்லாம் வியர்வைத்

தகனக் கிரியை செய்வதாவது? ஊர் சிரிக்கும். ஏதாவது பொன்னோ, பொருளோ வேண்டுமானால் வாயைவிட்டுக் கேள்! காதும் காதும் வைத்தாற் போல் கொடுத்தனுப்புகிறோம்'' என்றார்கள் வியக்தமாக. ஆசாரியருக்கும் இப்படி ஓர் அடி!

அவர்களுக்கு அவர் என்ன விடை சொல்ல முடியும்? துறவிக்கு அபர காரியத்தில் ஏது உரிமை? அதற்காக ஆசாரியர் அன்னைக்குத் தந்த வாக்குறுதியை மறக்கவில்லை. ஓரளவுக்கு மேல் போய் விட்டால் ஆசாரங்களையும்கூட அன்பு வாரியடித்துக் கொண்டு போய் விடும். அன்புருவ மாவதற்கே ஆசாரம் உபாயம் என்பதை உலகு தெரிந்து கொள்ள வேண்டுமென விரும்பினார். எனவே ஊர் அபவாதத்தையும் அவர் பொருட்டாக எண்ணவில்லை.

புத்தர் பிரானும், கர்த்தரும் அன்பைச் சொன்னது போல் ஆசாரியர் சொல்லவில்லை; அநுஷ்டானங்களையே கட்டி அழ வேண்டுமென்பது அவர் கருத்து என்று எண்ணுபவர்கள் இந்தச் சம்பவத்திலிருந்து மனத் தெளிவு பெறவேண்டும். ஆத்மசாதகனுக்குக் கட்டுப்பாடுகள் மிக மிக அவசியமே! மனசு பரிபக்குவம் அடைந்தால் கட்டுகள் தாமாகவே தளரும். இங்கேயே விடுதலை கிடைக்கும். அதன்பின் கட்டுப் போட்டாலும் அது வலி கொடுக்காது. இதனால்தான் ஜீவன் முக்தர்களும் கட்டுப்பாடுகளைக் கைக்கொள்வது. ஆனால் மிகவும் இக்கட்டான சில சந்தர்ப்பங்களில் அக்கட்டுக்களை உதற வேண்டியும் ஏற்படும். அது போன்ற ஒரு சூழ்நிலையில்தான் இப்போது சங்கரரும் இருந்தார். 'கட்டுக்கு உட்படுகிறேன்' என்று கூறி அன்னையைத் தகனம் செய்யாமலே அவர் சென்றிருந்தால் யாரும் பழி சொல்லியிருக்க மாட்டார்கள். ஆனால் அவரோ அன்பு ஒன்றுக்கு மட்டும் கட்டுப்பட்டு இதரக் கட்டுக்களை விலக்க மனம் கொண்டார்.

உலகுக்குப் பாடம் புகட்டுவதற்காக ஆசாரியர் செய்த மூன்றாவது மகா தியாகம் இது. காசியில் சண்டாளன் அணுகியபோது தமக்கு அத்வைத ஞானம் இல்லாதது போல நடித்தது முதல் தியாகம். அமருகன் உடலில் பிரவேசித்து அபவாதத்தை ஏற்கத் துணிந்தது இரண்டாவது தியாகம். சந்நியாச தர்மத்தை உள்ளன்புக்கு அடங்கிப் பணிய வைத்து அவதூறுக்கு ஆளானது மூன்றாவது தியாகம்.

தகனம் செய்வதில் சங்கரருக்கு இருந்த உறுதியைக் கண்டதும் சுற்றத்தார் அவரைப் பகிஷ்கரித்து வெளியேறினர். மறையோர்களையும் அவருக்குக் கர்மாவை நடத்தித் தரக் கூடாது என்று தடுத்தனர்.

அநாதை போல் தாயின் சடலத்துடன் தனித்து விடப்பட்டார் ஆசாரியார். தனக்கு மேல் நாதன் இல்லாத அவரும் அநாதை தானே?

தனி ஒரு மனிதராகத் தாம் மட்டுமே எவ்வாறோ அன்னையின் உடலைத் தூக்கினார். சந்நியாச தர்மங்களைப் பூரணமாகக் கடைப்பிடித்த போது யோக சக்தியால் அற்புதங்கள் புரிந்தவர், இப்போது சாமானிய மனிதனாக - மகனாக - மாறியதற்கேற்பத் தமது அபரிமிதமான சக்தியையும் தாமாகவே உதறித் தள்ளினார். எனவே பெரும் பிரயாசையுடனேயே தாயின் உடலை அவரால் தாங்க முடிந்தது. 'எவ்வளவு தூரம் அவ்வுடலை எடுத்துச் செல்வது? உடம்பு அயர்ந்து போகிறதே!'

வீட்டுத் தோட்டத்திலேயே அன்னையின் சடலத்தை இறக்கினார். சிதை அடுக்குவது யார்? வேத மந்திரங்கள் சொல்வது யார்? சர்வ லோக சரண்யனான அவருக்குச் சகாயமாக ஓர் ஈ, காக்கை இல்லை.

''அக்கினி பகவன்! நான் இல்லறம் ஏற்று உனக்கு நெய்யையும் ஹவிஸையும் ஆஹுதியாக அளித்ததில்லை. ஆனால் அவற்றைவிடப் புனிதமான என் தாயின் உடலை உனக்கு அளிக்கிறேன். அற்புதம் செய்யும் என் ஆற்றலுக்காக இவளை நீ அங்கீகரிக்க வேண்டாம்! அன்பின் பெருமைக்காகவே அவளை எடுத்துக் கொள்!'' என்று வேண்டினார்.

பிரபஞ்சம் தோன்றிய நாளாக யாருக்கும் கிட்டாத பெரும் பேறாக, பரமேசுவரனையே பெற்றெடுத்த பாக்கியவதியின் சரீரத்தை அக்கினிதேவன் அடக்கம் செய்து கொண்டான்.

வட்டிலிலும் தொட்டிலிலும்
மார்மேலும் தோள்மேலும்
கட்டிலிலும் வைத்தென்னைக்
காதலித்து முட்டச்
சிறகிலிட்டுக் காப்பாற்றிச்
சீராட்டும் தாய்க்கோ
விறகிலிட்டுத் தீ மூட்டுவேன்?

என்று அலறியபடி துறவிகளில் தலைசிறந்த பட்டினத்துப் பிள்ளைகளும் தன் அன்னைக்குத் தகனம் செய்தார்.

விடுகிற உறவா அது?

'யாதும் ஊரே' என்று இருந்த சங்கரரைச் சிருங்ககிரி மட்டும் மீண்டும் மீண்டும் ஈர்த்தது. அன்னையின் தேக வியோகத்துக்குப் பின்பும் ஆசாரியர்

சிருங்கிரிக்கே திரும்பினார். அவர் மனத்தில் நீண்ட பல நாட்களாகக் கொண்டிருந்த எண்ணத்தைச் செயலாக்கினார்.

சிருங்கிரி சாரதா பீடத்தில் எந்நாளும் வழிபாடும், அத்வைதப் பிரசாரமும் நடப்பதற்காகச் சிஷ்ய பரம்பரையை — நமக்கெல்லாம் குரு பரம்பரையை — தோற்றுவித்தார். பிருத்வீதவர் என்ற உத்தமமான சீடரை அந்தப் பீடத்தின் முதல் ஆசாரியராக நியமித்தார். ஆசாரியருக்கும் அம்பாளுக்கும் வேறுபாடு இல்லை என்ற உண்மையை உணர்த்த அவருக்கு பாரதி என்ற சந்நியாச நாமத்தைச் சூட்டினார். பா—ரதி என்றால் ஒளியில் களிப்பவர் என்று பொருள். ஞானப் பிரகாசத்தில் ஆனந்திக்கும் துறவி வம்சத்துக்கு இப்பெயரிட்டார் ஜகத்குரு. சுரேசுவராசாரியரை பிருத்வீதவருக்கு மேற்பார்வையாக நியமித்தார்.

ஒரே தலைவரின் கீழ் பயிற்சி பெற்று, அவரது அன்புக்குப் பாத்திரமானவர்களிடையிலேயே மோதலும், உரசலும் ஏற்படுவதை அரசியலில் பார்க்கிறோமல்லவா? இது மனித சுபாவத்திலேயே உள்ளது தான்; மண்ணுக்கும் மனிதனுக்கும் கூடப் பேதமில்லை என்று உபதேசித்த ஆதி ஆசாரியரின் நேர் மாணாக்கர்களிடையிலேயே, அவரது காலத்திலேயே, இவ்வித பேதங்கள் இருந்திருக்கின்றன என்பது நமக்குச் சிறிது ஆறுதல் அளிக்கலாம்.

ஆம், ஏனோ சுரேசுவரரிடம் மற்ற சீடர்களுக்கு அவ்வளவு மனப் பொருத்தம் இல்லாததாகக் காண்கிறது. மாபெரும் பண்டிதரானபடியாலும் வயதில் மற்றவர்களை விடப் பெரியவரானபடியாலும் அவர் சற்றே ஒதுங்கி யிருந்திருக்கலாம்; அல்லது அவரது வித்யையை மதித்து ஆசாரியர் பாரமார்த்திக விவாதங்களில் அவருடன் அதிகமாக ஈடுபட்டிருக்கக் கூடும். எதனாலோ மற்றவர்கள் அவரிடம் மனக்கசப்பு கொண்டிருந்ததாகத் தெரிகிறது. பீடாதிபதி நியமனத்தின் போது இந்த மன வேற்றுமையை வெளியிட அவர்களுக்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்ததாகச் சொல்லப்படுகிறது.

ஏனைய பல சீடர்களைப் போல சுரேசுவரர் அத்வைதத்தால் ஆகர்ஷிக்கப்பட்டு ஆசாரியரை ஆசிரயிக்கவில்லை என்றும், வாதத்தில் தோற்றதாலேயே சிஷ்யரானதாகவும் அவர்கள் கூறினார்கள். மேலும் கிருஹஸ்தாசிரமம் வகித்தவர் அவர் என்பதையும் சுட்டிக் காட்டினர். இதனாலேயே சுரேசுவரர் நேர் முகமாகப் பீடாதிபதிகளாகாமல் பிருத்வீதவருக்கு மேற்பார்வையாக அமர்த்தப்பட்டார் என்று சொல்லப்படுகிறது.

தற்போது நமக்குப் பூரணமாகக் கிடைத்துள்ள சங்கர விஜய நூல்களில் மிகவும் பழையதான ஆனந்தகிரீயத்தின் பிராசீனமான சுத்தப் பிரதிகளில் சிருங்கிரி பீடத்தின் முதல் ஆசாரியர் பத்மபாதர் எனக் கண்டிருக்கிறது.

யார் முதல் பீடாதிபதிகளாக இருந்தால் என்ன? அத்வைதம் யாவரும் ஒன்றே என்கிறது. அந்த அத்வைத தத்துவத்தை நுகர்ந்த பல மகனீயர்கள் சிருங்கிரி பீடத்தை அலங்கரித்திருக்கிறார்கள். இன்று வரை அந்தப் பீடத்து ஆசாரியர்கள் வேத நெறி தழைத்தோங்குவதற்காகப் புரிந்த, புரியும், பேர் உபகாரம் பார் எல்லாம் அறிந்ததே!

துங்காநதி விஷ்ணு ஸ்வரூபமென்றும், பத்ரா நதி சிவ ஸ்வரூபமென்றும் சொல்வார்கள். இரண்டும் சேர்ந்த துங்கபத்ரா தடத்தில் அம்பிகையான சாரதை உறைந்திருக்கிறாள். உள்ளத்தில் அம்பிகையின் தாய்மையும் தூய்மையும் ததும்பும் பகவத்பாதர் — பெயராலும் துறவாலும், விபூதி ருத்திராட்ச தாரணத்தாலும் ஈசனைப் பொலியும் ஆதிசங்கரர் — நாராயணனைப் போல லோக ரட்சணப் பொறுப்பை ஏற்று அவதரித்த ஜகத்குரு — மூவரையும் ஒன்று சேர வைத்து நிர்மாணித்த அத்வைதாமிருத தடாகமே சாரதா பீடம்.

ஆசாரியருடைய பிரம்ம சூத்திர பாஷ்யத்துக்கு சுரேசுவரர் விளக்கவுரை எழுத முன் வந்த போதும் மற்ற சீடர்கள் அதற்கு இணக்கம் தெரிவிக்கவில்லை என்று சொல்லப்படுகிறது. 'பூர்வாசிரமத்தில் மண்டன பண்டிதராக இருந்த போது கர்ம மார்க்கத்தில் மிகவும் தீவிரமான பற்றுக் கொண்டிருந்த சுரேசுவரர் இந்த விளக்கத்தில் மீண்டும் தமது பழைய பூர்வ மீமாம்சையை ஆதரித்தே பல இடங்களில் உரை எழுதக்கூடும். சுத்த அத்வைதபரமாக அவர் கிரந்தம் செய்வார் என்று எவ்வாறு நம்புவது?' என அவர்கள் ஆட்சேபனை தெரிவித்தார்கள்.

உலகெல்லாம் ஒன்றி வாழ வழி கூறிய தன்னைப் பிரியாது சார்ந்திருப்பவர்களிடமே இவ்வாறு பிளவுகள் ஏற்பட்டிருப்பதைக் காண ஆசாரியர் உள்ளத்திலும் வேதனை விரிசலிட்டது. 'சூத்ர பாஷியத்துக்கு விளக்கமே வேண்டாம்' என்று கூறிவிட்டார் அவர்.

எனினும் பத்மபாதர் விளக்கம் எழுதினார். பத்மபாதர் வியாக்யானம் எழுதியது மகத தேசத்தில் என்றும் கூறுவ

துண்டு. ஆசாரியரிடம் அதில் தொடக்கப் பகுதியைப் படித்துக் காட்டினார் பத்மபாதர். ஆசாரியர் முன் கூட்டியே எதனையோ அறிந்தாற் போல அர்த்த புஷ்டியுடன் புன்னகை மட்டும் புரிந்தாரே அன்றி வேறெதுவும் கூற வில்லை. பூசல்களினால் உளம் நைந்து போன பத்மபாதர் ஆசானின் உள்ளக் கருத்தைப் புரிந்து கொள்ள முடியாமல் மேலும் நிம்மதி இழந்தார். ராமேசுவரத்துக்குத் தீர்த்த யாத்திரை புறப் பட்டார். வழியில் திருவானைக்காவில் தமது பூர்வாசிரமத்துத் தாய்மாமனின் இல்லத்தில் தங்கினார். அங்கு தமது சூத்திரபாஷ்ய வியாக்கியானச் சுவடிகளை வைத்து விட்டு சேதுவுக்குச் சென்றார்.

பத்மபாதரின் மாமா கர்ம மார்க்கத்தில் தீவிரமாகப் பற்றுள்ளவர். விளக்கத்தைப் படித்துப் பார்த்தார் அவர். அது கர்ம மார்க்கத்துக்கு மேலானதாக ஞானமார்க்கத்தைக் கூறி விருப்பது அவருக்கு எரிச்சல் உண்டாக்கிற்று. அவர் மனசில் இருந்த எரிச்சல் புறத்திலும் நெருப்பாக எரிந்தது— சுவடிகளையெல்லாம் தீக்கிரையாக்கி விட்டார் அவர். தம்மைக் குற்றவாளி என்று பத்மபாதர் கண்டு பிடிக்கக் கூடாது என்பதற்காகச் சுவடியை மட்டும் எரிக்காமல் அது இருந்த வீட்டையே அக்கினி பகவானுக்கு தத்தம் செய்துவிட்டார் அந்த மகானுபாவர்.

ராமேசுவரத்திலிருந்து திரும்பிய பத்மபாதர் விஷயம் அறிந்தார். ஒருவாறு மனசைத் தேற்றிக் கொண்டு மீண்டும் சிருங்கிரி சேர்ந்தார். குருபிரானிடம் நடந்ததைக் கூறினார்.

"உன் வியாக்கியானத்தில் முதல் அத்தியாயத்தின் நான்கு பாதங்களையும் இரண்டாம் அத்தியாயத்தின் முதல் பாதத்தையும் நீ எனக்குப் படித்துக் காட்டியிருக்கிறாயே! அதை மட்டும் என் நினைவிலிருந்து சொல்கிறேன். எழுதிக் கொள்" என்றார் ஆசாரியர்.

பன்னிரண்டாண்டுகள் பிரம்மசரியம் காத்தவர்களுக்கு மேதை நாடி என்பதாக ஒன்று உண்டாகும் என்றும் அவர்களுக்கு எதுவும் நினைவிலிருந்து அழியாது என்றும் பரமஹம்ஸ ராம கிருஷ்ணர் கூறியிருக்கிறார். இன்றைக்கும் சில மகா புருஷர்கள் தாங்கள் என்றோ எப்போதோ கண்ட சிறியோர்களையும் நினைவில் வைத்திருந்து, அவர்கள் க்ஷேம லாபங்களை வினவும் அதிசயத்தைக் காண்கிறோமே! ஆதி ஆசாரியரின் ஒப்புயர்வற்ற தாய்மைக்கு நாம் சொல்லவும் வேண்டுமா என்ன?

ஆசாரியர் ஞாபகம் வைத்திருந்து பகர்ந்த சூத்திரபாஷ்ய வியாக்கியானப் பகுதி பிரம்ம சூத்திரத்தின் முதல் ஐந்து பாதங்களை விளக்கியதால் பஞ்சபாதிகா எனப் பெயர் பெற்றுள்ளது. தற்போது அதிலும் ஒரு பாகம்தான் நமக்குக் கிடைத்திருக்கிறது.

**மீ**ண்டும் திக்விஜயம் புறப்பட்டார் ஆசாரியர். முன்பே குறிப்பிட்டது போல், அவர் எந்தெந்த ஸ்தலங்களுக்கு எப்போது சென்றார் என்பதைப் பற்றிப் பல சங்கர விஜயங்களும் பலவிதமாகக் கூறுகின்றன. எனினும் அவருடைய பொன்னடிகள் எல்லா க்ஷேத்திரங்களிலும் பதித்தன என்பதில் ஐயமில்லை.

தம்மை அளித்த தமிழகத்திலுள்ள திருக்கோயில்களுக்கெல்லாம் சென்று வழிபட்டார் ஆசாரியர். கோயில் என்றவுடனேயே தில்லை சிற்றம்பலத்தின் நினைவுதானே வருகிறது? தேவாரங்கள் 'கோயில்' என்ற பதத்தாலேயே குறிப்பிடும் மகா க்ஷேத்திரத்திரமல்லவா அது? அங்கு வந்தார் ஆசாரியர். பரப்பிரம்மத்தை நிர்க்குணமான 'ரகசியம்' என்ற ஞான வெளியாகவும், ஸகுணமான ஸ்ரீமன் நடராஜ மூர்த்தியாகவும் காட்டும் அந்த ஆகாச ஸ்தலத்தில் வழிபட்டார். உருவற்ற சித் - அம்பரத்துக்கும் பேரெழில் பொங்கிப் பிரவஹிக்கும் மோகனத் திரு உருவான கூத்தப்பிரானுக்கும் இடையே, உருவு உண்டு என்றும் இல்லை என்றும் கூற வொண்ணாத ஒரு சின்னம் அமைக்க வேணுமென்று அவரது மனசில் தோன்றியது. உடனே அவரது மன மேடையில் வேறோர் அற்புதமான காட்சியும் மின்னியது. தாம் விரும்பும் அந்த ஸகுண — நிர்க்குண மூர்த்தி எங்கிருந்து கிடைக்கப் போகிறது என்பதை ஞான திருஷ்டியால் கண்டு உள்ளம் சிலிர்த்துப் போனார் பகவத்பாதர். (தொடரும்)

---

'ஜய ஜய சங்கர' பதின்மூன்றும் அத்தியாயத்தில் விசிஷ்டாத்வைத மதம் ஸ்ரீ ஆதி சங்கரருக்குப் பிற்பட்டது என்று குறிப்பிட்டிருந்தது அல்லவா? இதனை ஆட்சேபித்து, விசிஷ்டாத்வைத சித்தாந்தம் மிகவும் புராதன காலத்திலிருந்தே இருந்து வந்திருப்பதாகச் சில அன்பர்கள் எடுத்துக் காட்டியிருக்கிறார்கள். நன்றி. எனினும் சித்தாந்தம் வேறு. அந்தச் சித்தாந்தம் மதமாக ஆவது வேறு என்பதை அவர்கள் கவனிக்க வேண்டுகிறோம்.

அத்வைதமும் பகவத்பாதருக்கு முற்பட்டே இருந்து வந்திருக்கிறது; எனினும் ஆசாரியர் தாம் அதனை ஒரு மதமாக நிலைநாட்டியது என்று "ஜய ஜய சங்கர'வில் கூறியிருக்கிறோம். இதேபோல் விசிஷ்டாத்வைதக் கோட்பாடுகள் நீண்ட காலமாக இருந்து வந்தாலும், இந்தக் கோட்பாட்டின் மீது மக்கள் ஒரு மதமாகப் பிரிந்து, திருமணத்தில் கொள்வதையும் கொடுப்பதையும் தமக்குள்ளேயே கட்டுப்படுத்திக் கொண்டது ஆதி சங்கரருக்குப் பலகாலம் பின்னர் தான் என்று சரித்திரம் கூறுகிறது.




# ஜேராட் ரேடியோ அளிக்கும் மனதிற்குகந்த 4 செட்டுகள்

ஒவ்வொன்றும் ஒப்புயர்வற்றது!



● U-125
5 வால்வுகள் 3 பாண்டுகள் AC/DC
ரூ. 125/-



○ U-147
5 வால்வுகள் 3 பாண்டுகள் AC DC ரூ. 185/-



○ A-222
5 வால்வுகள் 3 பாண்டுகள் AC ரூ. 225/-



○ A-152
6 வால்வுகள் 3 பாண்டுகள் AC ரூ. 285/-

○ எக்சைஸ் வரி மற்றும் உள்ளூர் வரிகள் தனி ● உள்ளூர் வரிகள் தனி

**ஜேராட் எலக்ட்ரானிக் இண்டஸ்ட்ரீஸ்**
38, தங்கசாலை வீதி - சென்னை - 3

தசை நோவு, இலவாதம், மார்புச்சளி ஆகிய வற்றை, சீக்கிரமாகக் குணம் பெறச்செய்யவல்லது




# நோபின்

கல்கெமிகோவின் நோவு நிவாரண மருந்து

சொறிசிரங்குகள், பருக்கள், கொப்புளங்கள், கட்டிகள், புண்கள், காயங்கள் முதலியவற்றிற்கு

# மார்க்வென்டம்

நீம் க்ரீம்




“மார்கோ” சோப்பு உற்பத்தியாளரான கல்கெமிகோவின் தயாரிப்புகள்

CF-27M-1

தென் இந்திய ஆபீஸ் 5/149, பிராட்வே, சென்னை - 1

# பொருளாதார நெருக்கடி

கொழும்பு, ஆகஸ்டு 9உ.

இலங்கை அரசாங்கத்தின் இவ்வருட வரவு செலவுத் திட்டம் ஒரு மிகப் பெரிய சூறாவளியைக் கிளப்பி விட்டிருக்கிறது. காரணம் சுமார் ஐம்பது கோடி ரூபாய் துண்டுத் தொகையைச் சமாளிக்கவும் அதளபாதாளத்துக்குப் போய்க் கொண்டிருக்கும் அந்நியச் செலாவணி நிலையைச் சமாளிக்கவும் சில அசாதாரணமான நடவடிக்கையை அரசாங்கம் மேற்கொண்டிருப்பதேயாகும். கடந்த சுமார் பத்து ஆண்டுகளாக அரசாங்கம் அரிசியை அதிக விலைக்குக் கொள்முதல்செய்து குறைந்த விலைக்கு மக்களுக்கு விநியோகித்து வருகின்றது. 1956-ம் ஆண்டு முதல் ஒரு கொத்து, அதாவது பட்டணம் படியில் அரைப்படி 25 காசுகளுக்கு விற்று வருகிறார்கள். இந்த விலைக்கு ஒவ்வொருவருக்கும் வாரம் இரண்டு கொத்து அரிசி பங்கீட்டு முறையின் கீழ் கொடுக்கப்படுகிறது. கொத்து நாற்பது சதத்துக்குக் கொள்முதல் செய்து 25 சதத்துக்கு விற்பனை செய்வதினால் அரசாங்கத்துக்கு நஷ்டம் 22 கோடி 97 லட்சம் ரூ. இதைத் தவிர உள்நாட்டு விவசாயிகளுக்கு உதவிப் பணம் கொடுப்பதற்காக ரூ. 6 மதிப்புள்ள நெல்லை ரூ. 12 விலை கொடுத்து வாங்குகிறது. இவ்விதம் வெளி நாட்டு அரிசியையும் உள் நாட்டு அரிசியையும் அதிக விலைக்கு வாங்கிக் குறைந்த விலைக்கு விற்பதினால் பெரு நஷ்டம் ஏற்படுவது ஒருபுறமிருக்க நாட்டின் மதிப்புமிக்க அந்நியச் செலாவணியும் இதனால் கரைந்து போகிறது. இது ஒரு புறமிருக்க அடுத்த ஆண்டில் ஒப்பந்தப்படி அரிசி விநியோகம் செய்ய முடியாதென்று பர்மா அறிவித்திருப்பதனால் இலங்கை திட்டத்தின்படி தலா இரண்டு கொத்து அரிசி விநியோகிப்பதனால் இன்னும் அதிக விலை கொடுத்து அரிசியை வேறு இடங்களிலிருந்து கொள்முதல் செய்ய வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டிருக்கிறது. இதை முன்னிட்டுப் பங்கீட்டு அரிசியில் அரைக் கொத்து குறைப்பது என்று தீர்மானித்திருக்கிறார்கள். இது நாடெங்கும் கடுமையான எதிர்ப்பைக் கிளப்பி விட்டிருக்கிறது. அரசாங்கக் கட்சியிலேயே பெரும்பாலோர் பங்கீட்டு வெட்டைப் பலமாக எதிர்க்கிறார்கள். இப் பிரச்னையில் அரசாங்கக் கட்சியில் பெரும் பிளவு ஏற்படுமென்று பொதுவாக எதிர்பார்க்கப்பட்டது. இவ்வாரம் நடைபெற்ற அரசாங்க பார்லிமெண்டரி கட்சிக் கூட்டத்தில் இவ்விஷயம் பல மணி நேரம் விவாதிக்கப்பட்டு ஒரு சமரச முடிவு ஏற்பட்டிருக்கிறது. ஆறு மாத காலத்துக்குள் பங்கீட்டு அரிசியை மறுபடியும் முன்போல் இரண்டு கொத்தாக உயர்த்தி விட வேண்டும் என்ற தீர்மானத்தைக் கட்சிக் கூட்டம் நிறைவேற்றியிருக்கிறது.

அனேகம் சாமான்களின் இறக்குமதியை அறவே தடை செய்திருக்கிறார்கள். ஜவுளி இறக்குமதி கோட்டா முறை ஏற்படுத்தப்பட்டு லைசென்சு இல்லாமல் வியாபாரிகள் இறக்குமதி செய்யக் கூடாதென்று உத்தரவிட்டிருக்கிறார்கள். ஜவுளி உள்படப் பல பொருள்களின் விலைகள் உயர்த்தப்பட்டிருக்கின்றன. இம்மாதம் முதல் தேதியன்று திடீரென்று ஏழரை சதவிகித விற்பனை வரியை அமுலுக்குக் கொண்டு வந்தார்கள். முன்னேற்பாடுகளின்றி அவசரக் கோலத்துடன் விற்பனைவரி அமுலுக்குக் கொண்டு வரப்பட்டதால் பெரிய குழப்படி ஏற்பட்டு, சதவிகித வரியை விற்பனை அமுலுக்குக் கொண்டு வந்தார்கள். முன்னேற்பாடுகளின்றி அவசரக் கோலத்துடன் விற்பனை வரி அமுலுக்குக் கொண்டு வரப்பட்டதால் பெரிய குழப்படி ஏற்பட்டு இரண்டே தினங்களுக்குள் அது வாபஸ் பெறப்பட்டது. அதற்குப் பதிலாக இறக்குமதி வரிகளில் இருபது சதவிகிதம் சர்சார்ஜ் விதிக்கப்பட்டிருக்கிறது. ஒரு மிகப் பெரிய பொருளாதார நெருக்கடியில் நாடு சிக்குண்டு தடுமாறுவதைக் காணக் கூடியதாக இருக்கிறது. வருங்காலத்தைப்பற்றிப் பொதுவாக எல்லோரும் கவலை தெரிவிக்கிறார்கள்.

## புதிய வர்த்தக சங்கம்

இலங்கையில் இந்தியப் பிரஜைகளாக இருந்து கொண்டு தொழில் நடத்தும் வர்த்தகர்களுடைய நலவுரிமைகளைப் பாதுகாப்பதற்காகத் திரு வி. எஸ். அருணானந்தம் தலைமையில் இந்தியன் சேம்பர் ஆப் காமர்ஸ் என்ற ஒரு புதிய ஸ்தாபனம் ஆரம்பித்து வைக்கப்பட்டிருக்கிறது. இலங்கை இந்திய வர்த்தகர் சங்கம் என்ற பெயருடன் ஏற்கனவே ஒரு சங்கம் கடந்த பல ஆண்டுகளாகப் பயனுள்ள பணிபுரிந்து வருகிறதென்றாலும் அதில் இந்தியர்களாக இருந்து இலங்கைப் பிரஜைகளாகப் பதிவு செய்து கொண்ட இந்தியப் பிரஜைகளாகவே இருப்பவர்கள், பாகிஸ்தானியர்கள், இலங்கைப் பிரஜைகளாகப் பதிவு செய்துகொண்ட பாகிஸ்தானியர்கள் முதலான பலரும் அங்கம் வகிக்கிறார்கள். எல்லோருக்கும் பொதுவான வர்த்தகப் பிரச்னைகளைப் பற்றி மட்டுமே இத்தகைய சங்கம் கவனிக்க முடியுமென்றும் இந்தியப் பிரஜைகளை மட்டும் பாதிப்பதான பிரச்னைகளை இந்தச் சங்கத்தினால் கவனிக்க முடியாதென்றும் புதிய சங்கத்தை அமைத்திருப்பவர்கள் கூறுகிறார்கள். சமீப காலத்துக் கிடையில் விசாவரி, இலங்கை இந்தியப் பிரயாணம், இறக்குமதி ஏற்றுமதிக் கட்டுப்பாடுகள், விசா வழங்குதல், செலாவணிக் கட்டுப்பாடுகள் முதலான இந்தியப் பிரஜைகளை மட்டும் பாதிப்பதான பல பிரச்னைகள் தலையெடுத்துள்ளனவென்றும் இவற்றை இந்தியப் பிரஜைகளை மட்டுமே கொண்ட ஒரு சங்கத்தினால் மட்டுமே திருப்திகரமாகக் கவனிக்க முடியுமென்றும் இவர்கள் மேலும் சொல்லுகிறார்கள். இந்த நோக்கங்களுடன் அவர்கள் இந்தியன் சேம்பர் ஆப் காமர்ஸ் என்ற ஒரு புதிய சங்கத்தை ஆரம்பித்து அதற்குப் பலம் திரட்டி வருகிறார்கள். இதன் புதிய தலைவர் திரு அருணானந்தம் பழைய இலங்கை இந்திய வர்த்தகச் சங்கத்தில் சுமார் இருபது வருட காலம் நிர்வாக சபை அங்கத்தினராகவும் கடந்த வருடம் அதன் தலைவராகவும் இருந்து அனுபவம் பெற்றவரென்பது குறிப்பிடத் தக்கது. —ரஜனி



*மாடல் A-730

# நீங்கள் தேர்ந்தெடுக்க நேஷனல் எக்கோ ரேடியோக்களின் பல்வேறு மாடல்கள்

நேஷனல்-எக்கோ ரேடியோக்களின் விதவிதமான மாடல்களில் ஒன்று உங்கள் மனதைக்கவரும் என்பது திண்ணம்! நேஷனல்-எக்கோ ரேடியோ, கொடுக்கும் விலைக்கு சிறந்த மதிப்பு; மிகத் தரமாக பல்லாண்டுகள் உழைக்கும்; உங்களுக்கு மணிக்கணக்கில் இசை இன்பத்தை அளிக்கும்.

நேஷனல்-எக்கோ ரேடியோக்களின் 10 அற்புதமான மாடல்கள் உள்ளன...விலை மிகக் குறைவான ரூ.125 லிருந்து ரூ.725 வரை.



மாடல் U-764: ஏஸி/டிஸி செட். 5 வால்வுகள், 3 பாண்டுகள், பிளாஸ்டிக் பெட்டி.
மாடல் B-764: டிரை பாட்டரி செட் 4 வால்வுகள், 3 பாண்டுகள்.
ரூ. 265-00



மாடல் U-755: ஏஸி/டிஸி செட். 6 'நோவல்' வால்வுகள், 3 பாண்டுகள். மரப் பெட்டி.
மாடல் B-755: டிரைபாட்டரிசெட். 5 'நோவல்' வால்வுகள், 3 பாண்டுகள், மரப்பெட்டி.
ரூ. 355-00




மாடல் U-756 (ஜனதா): ஏஸி/டிஸி செட். 3½ வால்வுகள் மற்றும் ரெக்டிபையர், 2 பாண்டுகள், மத்திய அலை, சிற்றலை. அழகிய பெட்டி.

*மாடல் A-730: ஏஸி செட் 9 வால்வுகளின் வேலையைச் செய்யும் 6 'நோவல்' வால்வுகள், 8 பாண்டுகள், மரப் பெட்டி.
மாடல் U-730: ஏஸி/டிஸி செட். 9 வால்வுகளின் வேலையைச் செய்யும் 6 'நோவல்' வால்வுகள், 8 பாண்டுகள். மரப்பெட்டி.
ரூ 570-00



மாடல் A-744: ஏஸி செட். 9 வால்வுகளின் வேலையைச் செய்யும் 6 'நோவல்' வால்வுகள், 4 பாண்டுகள். கண்ணைக் கவரும் பெட்டி.
மாடல் B-751: டிரை பாட்டரி செட். மொத்தம் 9 வால்வுகளின் வேலையைச் செய்யும் 3 டிரான்ஸிஸ்டர்களும், 4 வால்வுகளும். 4 பாண்டுகள். கண்ணைக் கவரும் பெட்டி.
ரூ. 405-00



நேஷனல்-எக்கோ ரேடியோக்கள் சிறந்தவை—அவை [illegible] செய்யப்பட்டவை



எல்லா விலைகளும் எக்ஸைஸ் ட்யூடி உட்பட; வரிகள் தனி
ஜெனரல் ரேடியோ & அப்ளையன்ஸஸ் லிமிடெட்
பம்பாய் . கல்கத்தா . மதராஸ் . டில்லி . பாட்னா . பெங்களூர் . செகந்திராபாத்

JWT/GRA-3470

# சிந்தனை மேடை

## அரவிந்தன்

### 11. மாணவ வாழ்க்கை

இரண்டொரு வாரங்களுக்கு முன் இந்தப் பகுதியில் ஆசிரியர்களின் வாழ்க்கை நிலையைப் பற்றிச் சிந்தித்தோம். சிறிய இடைவேளைக்குப் பின் இப்போது மீண்டும் மாணவர்களின் வாழ்க்கையைப் பற்றிச் சிந்திக்கப் போகிறோம். 'இன்று இந்தத் தேசத்தில் மாணவ வாழ்க்கையைப் பற்றிச் சிந்திக்க ஏதாவது இருக்கிறதா?' — என்று குறும்பு நிறைந்த கேள்வி ஒன்று செவிகளில் விழுகிறது. இந்தக் கேள்வியில் உள்ள குறும்பைப் பொருட்படுத்தாமல் கேள்வியை மட்டுமே பொருட்படுத்திக் கொண்டு சிந்திக்கலாம்.

'இன்று உருவாகிற மாணவர்கள் நாளைக்கு இந்தத் தேசத்தை நிர்வாகம் செய்யப் போகிறவர்கள் என்பதை மறந்து விடக் கூடாது' — என்று பள்ளிக்கூடங்களின் ஆண்டு விழாக்களில் தலைமை வகிக்கிறவர்கள் வழக்கமாகச் சொல்லி வைக்கிற வாக்கியமும் அதன் பொருளும் பொய்யில்லைதான். ஆனால் மேடைகளில் பேசுவதைவிடவும் அதிகமாகக் கவலைப்பட்டுச் சிந்திக்க வேண்டிய பிரச்னை இது.

பள்ளி, கல்லூரிப் படிப்பும் அவற்றோடு இணைந்த ஹாஸ்டல் வாழ்க்கையும் பெரிய நகரங்களில் உள்ள 'போர்டிங் அண்டு லாட்ஜிங்' ஓட்டல்களைப் போல் மாறி வருகின்றன. வசதியும் நவீன நாகரிக அமைப்புக்களும் உள்ள ஓட்டலில் தங்க இடம் கிடைப்பது அரிதாயிருப்பதைப் போலவே மருத்துவக் கல்லூரி, பொறியியற் கல்லூரி போன்றவற்றில் தங்கிப் படிக்க இடம் கிடைப்பதும் அரிதாயிருக்கிறது. மாணவ வாழ்க்கையின் போது அந்த வாழ்க்கை எதைக் கற்பதற்காக அர்ப்பணிக்கப்படுகிறதோ அதை அள்ளிப் பருகி விடுவது போன்ற தாகத்தோடு கற்க வேண்டுமென்று கற்கும் இலட்சணத்தைப் பற்றிச் சொல்லியிருக்கிறார்கள்.



'பருகுவன் அன்ன ஆர்வத்தன் ஆகி' என்று நன்னூல் ஆசிரியர் மாணவர்கள் எப்படி இருக்க வேண்டுமென்பதைப் பற்றி இலக்கணம் வகுக்கும்போது கூறுகிறார். 'பருகி விடுவதைப் போன்ற தாகமும், தவிப்பும்' — இன்று மாணவர்களைப் பொறுத்த வரை எந்தெந்தத் திசைகளிலோ மாறியிருக்கிறதே தவிர நிச்சயமாக ஒரே திசையில் இல்லை. ஆசிரிய வாழ்க்கை பெரு முனிவர்களின் புனிதமான இயக்கமாக இருந்த நிலையிலிருந்து இன்று 'டிரெயினிங்' முடிந்தவுடன் அடைகிற பதவியாக மாறிவிட்டாற் போல் மாணவ வாழ்க்கையையும் இன்ன பயனை எதிர்பார்த்து இத்தனை காலம் படிப்பது என்பது போய் மாறி விட்டது. டாக்டராகத் தொழில் புரிய வேண்டுமென்றால் மருத்துவக் கல்லூரியில் சேர வேண்டுமென்றும், என்ஜினியராகத் தொழில் புரிய வேண்டுமென்றால் தொழிற் கல்லூரியில் சேர வேண்டுமென்றும் பிற்காலத்தில் எப்படி வாழ்ந்து பிழைக்க வேண்டுமோ அப்படிக் கல்வியின் இலட்சியமும் மாறிப் போய்விட்ட நூற்றாண்டில் நாம் வாழ்கிறோம். பிழைப்பையும் வாழ்க்கையையும் வளர்த்துக் காப்பாற்றுகிற கல்வியை நம்முடைய மாணவர்கள் படிக்கிறார்களே ஒழிய மனத்தையும் பண்பாடுகளையும் வளர்த்துப் போற்றுகிற கல்வியைத் தேடித் தவிப்பதில்லை. இந்த நூற்றாண்டின் மாணவவாழ்க்கையின் நோக்கம் வேறு. பழைய நூற்றாண்டுகளில் மாணவ வாழ்க்கையின் நோக்கம் வேறு. இந்த அடிப்படை வேறுபாட்டை முதலில் உணர்ந்துகொள்ள வேண்டும்.

### மாறிய நோக்கம்

எழுத்தையும், மொழியையும், நூல்களையும் கற்கும் பயன் பழைய காலத்தில் எப்படி அளவிடப் பட்டிருக்கிறது என்று பார்க்கலாம்;

'எழுத்தறியத் தீரும் இழிதகைமை,
தீர்ந்தால்
மொழித்திறத்தின் முட்டறுப்பா னாகும்
— மொழித்திறத்தின்
முட்டறுத்த நல்லோன் முதல்
நூல் பொருளுணர்ந்து
கட்டறுத்து வீடு பெறும்.'

என்று இவ்வாறு கல்விக்கும், மாணவ வாழ்க்கைக்கும் முடிவான பயனாக மெய்யுணர்வு சொல்லப்பட்டிருக்கிறது. இன்று ஒரே நோக்கம் பின்னால் எப்படி வாழ்க்கை அமைத்துக் கொள்வது என்பதற்கு ஏற்ற தொழில் உணர்வுதான். 'என்ஜினீயரிங்' துறையில் படிப்பவர்களுக்குக் கலைத்துறைப் படிப்பைப் பற்றிய அக்கறை வேண்டியதில்லை போலவும், கலைத்துறையில் படிப்பவர்களுக்கு 'என்ஜினீயரிங்' பற்றி அக்கறை வேண்டியதில்லை போலவும் படிப்புக்கு எல்லை வகுத்துப் பாத்தி கட்டியிருக்கிற காலம் இது. மனத்தைச் சிறிது சிறிதாய் மலரச் செய்து மணக்க வைக்கிற மாணவ வாழ்க்கை தான் இலட்சிய மாணவ வாழ்க்கை. மாணவர்களின் உலகங்களை வேறு துறைகளில் கவர்ந்து பாழாக்கிவிட முடியாதபடி தனியான மலைச்சாரல்களிலும்

இயற்கையழகு மிக்க ஆற்றங்கரைகளிலும் (Rural Universities) நாட்டுப்புறப் பல்கலைக் கழகங்கள் ஏற்பட வேண்டும். தனிமையின் இனிமையில் ஈடுபட்டுக் கற்க வேண்டுமென்று தவிக்கும் மாணவர்களுக்கு அவை பயன்படும்.

பாரதி, தாகூர், போல் கவிகளையும், விசுவேசுவரய்யா, ஸி. பி. போல் மேதைகளையும் ஏ. எல். முதலியார் போல் மருத்துவ வல்லுநர்களையும், மறுபடியும் இந்த நாட்டுக்கு உண்டாக்கித் தருகிற சக்தி வாய்ந்த மாணவ வாழ்க்கை வேண்டும். வயிற்றை நிரப்பிக் கொள்ள ஹாஸ்டலும், ஆசிரியர்களை விதவிதமாய்க் கேலி செய்ய வகுப்பறைகளும், பறந்து கொண்டு தவிப்போடு போய்ப் பார்ப்பதற்கு ஏராளமான திரைப்பட அரங்குகளும் இருப்பதாக நினைத்துக் கொண்டு மிதப்போடு திரிகிற மாணவ வாழ்க்கை எந்தவிதத்தில் இந்த நாட்டுக்குப் பயன்தர முடியும்? இன்றும் நாளையும், என்றும் இந்தப் பாரத புண்ணிய பூமியும் இதைத் தொழுது போற்றுகிற மற்ற நாடுகளும் பெருமையோடு நோக்கத் தக்க மாணவர்களை நாம் உருவாக்க வேண்டும். நம்முடைய மாணவ வாழ்க்கையின் நோக்கங்கள் முற்போக்காக வளரலாம். ஆனால் ஒரு போக்குமில்லாமல் தளர்ந்து கருகிப் போய்விடக் கூடாது. ஓர் இந்திய மாணவனுடைய படிப்பு அவனுக்குச் சோறு போடுவதற்கு மட்டுமே பயன்பட்டு நின்றுவிடக் கூடியதன்று; அந்தப் படிப்பில் தான் அவனுடைய ஆன்மிக மலர்ச்சியே விளைய வேண்டும் என்ற அடிப்படையில் தான் பாரதத்தின் புராதனமான கல்வி முறையும், மாணவ வாழ்க்கையும் அமைக்கப்பட்டிருக்கின்றன.

### மனத்தின் ஒளி

சராசரி இந்திய மாணவனுடைய பள்ளிப் படிப்புக்கோ, கல்லூரிப் படிப்புக்கோ, இன்றைய நோக்கம் 'கிளார்க்' வேலையாக இருக்கலாம். ஆனால் நலிந்து போயிருக்கும் இந்த நாட்டின் இன்றைய சூழ்நிலையில் இலட்சிய மாணவர்களும் பலர் தோன்றி வளர வேண்டும். ஒவ்வொரு துறையிலும் நாளைய பாரதத்துக்கு வல்லுநர்கள் தேவை. அந்த வல்லுநர்கள் இன்றைய மாணவ வாழ்க்கையிலிருந்துதான் நாளைய பாரதத்துக்குக் கிடைக்க வேண்டும். அப்படிக் கிடைக்க வேண்டுமானால் குழந்தைக்குத் தாய்ப்பால் வலிமை தருவதைப் போல் கல்வியோடு சேர்ந்து நமது பண்பாடுகளையும், அவற்றின் மேல் நம்பிக்கை வளரும் வழிகளையும் கற்பிக்க வேண்டும். மாணவர்கள் தங்களுடைய மாணவ வாழ்க்கையை எப்படிப் பயன்படுத்திக் கொள்ள வேண்டுமென்று விரும்புகிறார்கள் என அவர்களுக்கே அதன் உரிமையைத் தருவதைக் காட்டிலும் இந்த நாட்டின் மாணவ வாழ்க்கை எப்படி அமைந்தால் இதன் எதிர்காலத்துக்கு நல்லதோ அப்படி அதை அமைத்து விடுவதற்குப் பொறுப்புள்ள பெரியவர்கள் முயலவேண்டும். இதன் நோக்கம், மாணவர்களைக் கட்டுப் பெட்டிகளாய் ஆக்க வேண்டும் என்பதாகாது. இன்று விடுதலை பெற்று நிற்கும் இந்த நாட்டை என்றும் நல்லபடி காப்பதற்குத் தக்க பாதுகாவலர்கள் வேண்டுமே என்பது தான் இந்தக் கவலையின் அர்த்தம். மாணவ வாழ்க்கையின்போது பறவைகள் போல் சுதந்திரமாகப் பறந்து கொண்டிருக்கலாம். ஆனால் எங்கே பறக்கிறோம், எதற்காகப் பறக்கிறோம் என்ற விவரம் ஒன்றுமே தெரியாமல் தறிகெட்டுப் பறக்கக் கூடாது. 'இப்படித்தான் இருக்கிறோம்' என்று கட்டுப்பாட்டைப் புரிந்து கொண்டு மகிழ்ந்திருப்பது சுதந்திரமே ஒழிய, 'நாம் நமக்குத் தோன்றியபடி எப்படி வேண்டுமானாலும் இருக்கலாம்' - என்று தான்தோன்றித்தனமாக இருப்பது சுதந்திரமாகிவிடாது. அப்படித் தான்தோன்றித்தனமாக வளர்ச்சி பெற்ற முழு மனிதர்களே இருக்கக் கூடாது என்றால் மாணவர்கள் இருப்பது எந்த விதத்திலும் சாத்தியமற்றது தானே?

வருங்காலத்தில் ஒப்பற்ற நவபாரத சமுதாயம் உருவாகி வலிமை பெற்று நிற்பதற்கு இன்றைய மாணவர்கள்தாம் காரணமாக வேண்டும். தாங்கள் அந்த நல்ல எதிர்காலத்துக்குக் காரணமாகப் போகிறோம் என்ற ஞாபகம் மாணவர்களுக்கு மறந்து விடாதபடி செய்து கொண்டிருக்கிற அளவாவது நாம் பொறுப்பை நினைவூட்ட வேண்டும். இதை விட வெளிப்படையாக எதுவும் விட்டுச் சொல்ல வேண்டியதில்லை. இன்றைய மாணவர்களுக்குத்தான் குறிப்புணரும் திறமை மிகவும் அதிகமாயிற்றே?

அட்டைப்பட விளக்கம்

## ஆயர்குலத்து ஆரமுது

ஜயந்தி என்று கூறினாலே அது கண்ணன் பிறந்த நன்னாளைத்தான் குறிக்கும்; தான் பரம்பொருளே என்பதை இம்மியும் மறவாது மானுடனாகப் பூரணனாய் வாழ்ந்த அவதாரம் கண்ணனுடையதே. தனது எல்லையற்ற மகிமையை அறிந்திருந்தும், மக்கள் யாவரும் தன்னை சர்வ சகஜமாக அணுகிப் பழகுமாறு வாழ்ந்த சுலபன் கண்ணன். மக்கள் மட்டும்தானா? மாக்களும்கூட — மாக்களுடனும் கூட — நேயம் பாராட்டிய கோபாலனல்லவா அவன்? பெரியதற்குள் பெரியதான பரப்பிரம்மம் சின்னஞ் சிறு குழந்தையானதோடு மட்டுமின்றிச் சிறுவர் எல்லோரையும் தன் அன்பு வலையில் ஆட்கொண்டது. அந்தப் பிரேம பாசத்தில் கட்டுண்ட ஒரு சிறுமியையும், ஆயர் குலத்து ஆரமுதையும் ஜன்மாஷ்டமியை ஒட்டி வெளியாகும் இவ்விதழ் அட்டைச் சித்திரத்தில் காண்கிறீர்கள். கண்ணனின் விளையாட்டுக்களையும், அவன் புரிந்த விந்தைகளையும் எண்ணி அந்தச் சிறுமி சொக்குவது போலவே நாமும் வசியமாவோம்; அந்த விளையாட்டும் விந்தையும் விளக்கும் வேதாந்த தாத்பரியங்களை எண்ணியும் மகிழுவோம்.

# இடமில்லை! இடமில்லை!!

எதற்கு இடமில்லை? மூளைக்கு இடமில்லை. அறிவுக்கு இடமில்லை. அதிக மார்க்குகள் வாங்கியிருக்கும் ஒரு வகுப்பாருக்கு, குறிப்பாகப் பிராமண சமூகத்தாருக்கு இடமில்லை. ஒரு பிராமண மாணவன் வைத்தியக் கல்லூரியில் சேர மிகவும் அவசியமான பாடங்கள் இரண்டிலும் ''டி''யும் மற்றச் சாதாரண பாகங்களில் ஏயும், ஏ பிளஸ்ஸும், பி.யு.ஸி.யில் வாங்கியிருந்தால், இவனிடக் குறைந்த மார்க்குகள் வாங்கிய இதர சமூகத்து மாணவர்களுக்கு வைத்தியக் கல்லூரியில் இடம் கிடைத்து விடுகிறது. தேர்ந்தெடுக்கப்பட்ட மாணவர்களில் பலரைக் காட்டிலும் இந்த மாணவனுக்கு அதிக மார்க்குகள் இருந்தும் இவன் தேர்ந்தெடுக்கப்படாததற்குக் காரணம் 'இவன் பிராமணன்' என்கிற காரணத்தைத் தவிர வேறு இருக்க முடியுமா என்பதை, இருக்கும் சூழ்நிலையிலிருந்து யோசிக்க வேண்டும். வைத்தியக் கல்லூரிக்கு மாணவர்களை அனுமதிக்கத் தேர்ந்தெடுப்பதற்கு அடிப்படைக் கொள்கை பிராமண மாணுக்கர்கள் அதிக மார்க்குகள் வாங்கியிருந்தாலும் அவர்கள் உள்ளே நுழையச் சந்தர்ப்பம் அளிக்கக்கூடாது என்பதுதானா? பிற்போக்கு நிலையில் உள்ளவர்களை முன்னுக்குக் கொண்டு வர வேண்டும் என்பதற்காக இம்மாதிரி செய்வது நியாயமாகுமா? இந்திய அரசியல் சட்டம் ஆர்ட்டிகிள் 15 (1)ல் மாகாண சர்க்கார், மதம் ஜாதி காரணமாகப் பிரஜைகளிடம் வித்தியாசம் பாராட்டக் கூடாதென்று சொல்லியிருப்பதும், மேற்படி அரசியல் சட்டம் ஆர்ட்டிகிள் 29 (2)ல் மதம் ஜாதி, வகுப்பு காரணமாக எந்தப் பிரஜைக்கும் கல்விக்கூடங்களில் அனுமதி மறுக்கக் கூடாது என்று சொல்லப்படுவதும் ஏட்டளவில்தானா? பி.யு. ஸி.யில் உள்ள மார்க்கைக் காட்டாமல் - ''கிரேடு சர்ட்டிபிகேட்'' வழங்கியதன் மூலம் அதிக மார்க் வாங்கியதன் முக்கியத்துவம் குறைக்கப்பட்டது. ஜில்லாவாரியாகப் போதிய பிரதிநிதித்வம் அளிக்கப்பட வேண்டும் என்பதற்காக அதிக மார்க்குகள் வாங்கிய அந்தண மாணவர்களுக்கும் மற்ற முற்போக்கு வகுப்பிலுள்ள சில மாணவர்களுக்கும் வைத்தியக் கல்லூரியின் கதவு அடைக்கப்பட்டது. இப்போது புது முறை ஒன்றைக் கடைப்பிடித்து வடி கட்டப்படுவதாகத் தெரிய வருகிறது.

ஜில்லாவாரி பிரிவினைக்குப் பிறகு அந்தந்த ஜில்லாவுக்கும் முற்போக்கு (பார்வேர்டு) பிற்பட்ட (பேக்வர்டு) என்று பிரிக்கப்படுகின்றன என்றும், பின்தங்கிய வகுப்புகளில் அதிக மார்க்குகள் வாங்கியுள்ள மாணவர்களை முற்போக்கு லிஸ்ட்டில் சேர்த்து விடுவதின் மூலம் தகுதி வாய்ந்த அதிக மார்க்குகள் வாங்கிய இதர முற்போக்கு சமூகத்தவர்கள் வைத்தியக் கல்லூரியில் நுழைய முடியாதபடி செய்யப்படுகிறதென்றும் பின்தங்கிய வகுப்பு மாணவர்களில் சாதாரண மார்க்குகள் வாங்கியுள்ளவர்களுக்கும் அதிக இடம் கிடைத்து விடுகிறதென்றும், பொருளாதாரத் துறையில் பின்தங்கிய பிராமண வகுப்பாருக்கு இந்தப் பின்தங்கிய ஜாபிதாவில்கூட இடம் கிடைப்பதில்லை என்றும் தெரிய வருகின்றன. தவிரவும் பின்தங்கிய ஜில்லாவாகக் கருதப்படும் தென்னார்க்காடு ஜில்லாவைச் சேராத, முற்போக்கு ஜில்லா வாசிகளாக உள்ள சில பின்தங்கிய வகுப்பு மாணவர்கள் மேற்படி பிற்பட்ட தென்னார்க்காடு ஜில்லாவைச் சொந்த ஜில்லா என்று கண்டு 'நேடிவிட்டி சர்ட்டிபிகேட்' பெற்று வைத்தியக் கல்லூரியில் நுழைவதற்குத் தேர்ந்தெடுக்கப் பட்டிருப்பதாகவும் தெரிய வருகிறது.

சமீபத்தில் சுகாதார அமைச்சர் சட்டசபையில் தெரிவித்தது போல் பி. யு. ஸி. மார்க்கின் அடிப்படையில் வைத்தியக் கல்லூரிக்கு மாணுக்கர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டார்கள் என்றால், அதிக மார்க்குகள் வாங்கிய மாணுக்கர்களுக்கு இடம் கிடைக்காமல் குறைந்த மார்க்குகள் வாங்கியவர்களுக்கு இடம் கிடைப்பானேன்? எனவே வெளியில் பகிரங்கமாகச் சொல்ல முடியாதபடி வைத்தியக் கல்லூரிக்கு மாணவர்களைத் தேர்ந்தெடுப்பதில் குழப்பமும், குளறுபடியும், ஒழுங்கின்மையும் இருக்க வேண்டுமெனத் தெரிகிறது. இந்தக் கூற்றுக்கு ஆதாரமில்லை என்றும், தேர்வுக் குழுவினர் பி. யு. ஸி மார்க்கின் அடிப்படையில்தான், பிரதேசவாரியாகப் போதிய பிரதிநிதித்துவம் அளித்துத்தான் மாணுக்கர்களை வைத்தியக் கல்லூரிக்குத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள் என்று சொல்லத் தேர்வுக் குழுவினருக்கோ அல்லது சர்க்காருக்கோ தைரியமிருந்தால், வைத்தியக் கல்லூரியில் சேர விண்ணப்பம் போட்ட எல்லா மாணவர்களின் விவரங்கள் முழுவதையும் (அதாவது ஜில்லா, நபரின் பெயர், மார்க்குகள், ஜாதி) கொடுத்து அதில் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களின் விவரங்களையும், மேற்படி தேர்வு எந்த அடிப்படை விதி



யின் கீழ் நடந்தது என்பதையும் புள்ளி விவரங்களுடன் ஒன்றையும் மறைக்காமல் பொது மக்கள் தெரிந்து கொள்வதற்காகப் பத்திரிகையில் பிரசுரம் செய்யட்டும். தேர்வுக் குழு, முறை தவறி நடந்திருந்தால் மாகாண சர்க்கார் அதன் பேரில் நடவடிக்கை எடுத்துக் கொள்ளட்டும். அறிவுக்கு இடமில்லாதபடி அடிப்படையிலிருந்தே செய்து விட்டால், அஸ்திவாரமில்லாத கட்டிடம் கலகலத்து விழுந்துவிடக் கூடும். தொழில் துறையில் தரக் குறைவும், மந்த அறிவும் ஏற்பட்டு இன்னும் சில ஆண்டுகள் கழித்து அதன் பலனை நம் மக்களே அநுபவிக்க வேண்டி வரும்.

பி. கே. தண்டபாணி அய்யர்,
விருத்தாசலம்

முதல் கட்டுரைக்கு இருபத்தைந்து ரூபாயும் இரண்டாம் கட்டுரைக்குப் பதினைந்து ரூபாயும் வழங்கப்பட்டிருக்கிறது. மற்றக் கட்டுரைகள் அடுத்த இதழ்களில் வெளிவரும்.

— ஆசிரியர்

❀

ஆசிரியர் கவலயாகச் சொல்லிவிட்டார் 'அட்மிஷனுக்காக அலைந்தவர்கள்'' என்று. அப்படி அலைந்தவர்களிடமிருந்து தப்பி அலைந்தவர் என் தந்தை. நான் சொல்லுகிறேன் அவர் இன்டாட்டத்தைப் பற்றி!

''யாரோ உங்களைப் பார்க்க வந்திருக்கிறார்கள் அப்பா!''

''யாரென்று விசாரியேன், கொஞ்சம்'' என்று தணிந்த குரலில் கூறுகிறார்.

''யாரோ எச்சுப் பாட்டியாமே, உங்கள் சொந்த ஊரில் அடுத்த வீட்டிலிருந்தாளாம்.''

''அவளுக்கு என்ன?''

''அவளுக்கு ஒன்றுமில்லே. அந்தப் பாட்டியின் பெண்ணோட மாப்பிள்ளைக்குத் தம்பியாம். இன்ஜினியரிங் கல்லூரியில் அட்மிஷனுக்காக உங்களைப் பார்க்க வந்திருக்கிறார்கள், அவனும் அவன் அப்பாவும்.''

என் தந்தை அவர் பிறப்பதற்கு நான்கு மாதங்களுக்குமுன் சொந்த ஊரை விட்டவர். இன்று இன்ஜினீயரிங் கல்லூரியில் செலக்ஷன் கமிட்டி அங்கத்தினர். இவரிடம் இப்படிச் சுற்றி வளைத்து உறவு சொல்லிக் கொண்டு வந்தவர்கள் ஒருவர் இருவர் அல்ல; நூற்றுக் கணக்கானவர்கள். அப்பாவின் மேஜை மீது சிபாரிசுக் கடிதக் குவியல்; டெலிபோன் சதா அலறிக் கொண்டிருக்கும்!

''அப்பாவா? குளித்துக் கொண்டிருக்கிறார். பத்து நிமிஷம் கழித்துப் போன் பண்ணுங்கள்.'' ஒன்பதாவது நிமிஷத்திலேயே வந்துவிடும் அழைப்பு.

'' இப்பத்தான் சாப்பிடப் போனார். உங்கள் நம்பர் சொல்லுங்கள். பிறகு 'போன்' பண்ணச் சொல்கிறேன்.''

அப்பா ஏன் 'போன்' பண்ணப் போகிறார்? வம்பை விலைக்கு வாங்கிக் கட்டிக்கொள்ளவா?

அந்த விடாக்கண்டர் தேரிலேயே கண்டு போக வந்து விடுவார். அப்பா கஷ்டப்பட்டு விளக்கம் தருவார்: ''நான் ஒருத்தன் மட்டுமில்லே சார், கமிட்டியில். நான் மார்க் போட்டாலும் மத்தவங்க போடவேண்டாமா?''

''இவனை எப்படியாவது சேர்த்துட்டா ஒரு குடும்பம் விளங்க வழி செய்த புண்ணியம்!''

''ஆகட்டும், பார்க்கலாம்'' என்று முதன் மந்திரி காமராஜர் மாதிரி பதில் சொல்வார் அப்பா. எல்லாருக்கும் அதே பதில்!

தொல்லை சகிக்காமல் அப்பா 'இன்டர்வ்யூ'வுக்குப் பத்து நாள் முன்பு வெளியூர் சென்று விட்டார். மறு வருடம் அப்பாவே தம்மைக் கமிட்டியில் போட வேண்டாம் என்று கேட்டுக் கொண்டு விட்டார். ஆனால் பத்திரிகைகளில் தவறுதலாக அவர் பெயரைப் போட்டு விட்டார்கள். ஆரம்பித்ததே பார்க்கலாம், தொந்தரவு! பலர், அப்பா தான் கமிட்டியில் இல்லை என்றால் நம்ப மறுத்தார்கள். அப்பாவுக்கே போன் பண்ணி மறு முறை விசாரித்தார்கள். ஒரு பிரமுகர் கைகம்பீரமாக வாசலில் வந்து அமர்ந்து கொண்டு அப்பாவைக் காண வேண்டும் என்றார்.

''ஓய்வு எடுத்துக் கொண்டிருக்கிறார். ஏதேனும் அவசர விஷயமோ?'' என்று கேட்டேன்.

''அவசரமில்லே'' என்றார் அலட்சியமாக.

''இல்லாவிட்டாலும் நான் அப்பாவிடம் போய்ச் சொல்லுகிறேனே, என்ன விஷயம்?'' என்று கேட்டேன். அவர் அழுத்தமாக, ''விஸிட்டிங் கார்டை'' எடுத்து நீட்டினார்.

''ஆபீஸ் விஷயமானால், ஆபீஸில் சந்திக்கலாமே?'' என்றேன். அப்பாவின் வழக்கம் அப்படித்தான்.

அப்பாவிடம் 'விஸிட்டிங் கார்டை'க் கொடுத்தேன். அப்பாவுக்கு அவரை அதிகம் தெரியாது. அட்மிஷன் விஷயமாகத்தான் வந்திருப்பார் என்று ஊகித்து விட்டார்.

நான் போய்ச் சொன்னேன். ''அப்பா இன்ஜினீயரிங் செலக்ஷன் கமிட்டியில் இந்த வருடம் இல்லையே'' என்று.

வந்தவரின் முகத்தில் அசடு வழிந்தது. வந்த விஷயத்தைச் சொல்லாமலே அவர் போய்ச் சேர்ந்தார்.

இந்த வருடம் அப்பாவே வியக்கிறார், போன வருடம் வரை இருந்த நண்பர்களும் உறவினர்களும் இப்போது எங்கே என்று!

பார்வதி ஏகாம்பரம்

சென்னை-6



# சஞ்சலம்

ஜீ. சுவாமிநாதன்

மூர்த்தி ஆபீசுக்குக் கிளம்பி விட்டான். சிலேட்டுப் பலகையில் ஆணியால் கோடு இழுத்தாற் போல் கிறீச்சிட்டுக் கொண்டு வாசற் கதவு திறக்கும் ஒலி மீறிருந்து எட்டியது. சைக்கிளை இறக்கி வைக்கும்போது நிலைப்படி இடித்துக் 'கிணிங்'கென்ற மணியோசை தொடர்ந்தது.

மீனுவுக்கு நரம்புகள் துடித்தன. கோப ஜ்வாலை கண்களில் வீசிற்று. நாக்கிலிருந்து குதிக்க ஒருங்கே ஆயிரம் வார்த்தைகள்; உணர்ச்சிகள் கொதித்தன. தட தடவென்று மாடியிறங்கி வந்தவள் வாசல் நிலை மேல் சாய்ந்தபடி நின்றாள். வேகமாக இறங்கி வந்த சிரமம் தாங்கவில்லை; மூச் இரைத்தது.

மூர்த்தி அவள் வந்ததைப் பார்த்தான். ஆனால் பாராதவன் போல் சைக்கிள் சங்கிலியைக் கறுப்புத் துணியால் துடைத்துக் கொண்டிருந்தான். அந்த அலட்சியமே அவள் சினத்தைத் தூண்டியது.

''உங்களைத்தான்....''

''ஊம்!'' சக்கரத்தின் விளிம்புக்கும் பிரேக்குக்குமிடையே படிந்திருக்கும் தூசியை அகற்றுவதிலிருந்து அவன் கவனம் மாறவில்லை.

''...நான் ராத்திரி வண்டிக்குக் கும்பகோணம் போகப் போகிறேன். அம்மாவுக்கும் அப்பாவுக்கும் அப்படி எழுதிவிட்டேன்.'' அவள் உதடுகள் கோப அழுகையில் நடுங்கின.

''உன் இஷ்டம்...!'' சுருக்கமான பதில். 'ஸ்போக்ஸ்' ஒன்று வளைந்திருந்தது. அதைக் கட்டை விரலால் அழுத்தி நிமிர்த்த முயன்றான்; பயனில்லை.

''திரும்பி இங்கே வருவதாக உத்தேசமில்லை....'' கேவலில் குரல் விம்மினாலும் அவள் சொற்களில் மாற்ற இயலாத கொடுமை ஒலித்தது.

சட்டென்று ஓர் ஊமைத்தனம் அவர்களிடையே தேங்கிற்று. அவன் தலை உயர்த்தி ஒரு கீற்றாய் அவளைப் பார்த்தான். அவள் உள் சுருங்கிப் போயிருந்தாள், அடிபட்ட பறவை போல். மேலும் அவனை வலுச் சண்டைக்கு இழுக்க அவளுக்கு ஆசைதான். ஆனால் அவன் பதில் தராமல் ஒதுங்கி நின்றதால் அவளுக்குப் பிடி கிடைக்காமல் போய் விட்டது.

அவன் சைக்கிளில் அமர்ந்துகொண்டு போய் விட்டான். பாலம் தாண்டும் வரை ரோடின் ஜனநடமாட்டத்தினிடையே ஆவேசமாய் அவன் வாகனத்தை விரைந்து அழுத்துவது தெரிந்தது. அவனுடைய அந்த வெறியைப் பார்க்க அவளுக்கு ஒரு சந்தோஷத்தை அனுபவித்த மாதிரியே தோன்றியது.

காலைக் காற்றில் ஜன்னலின் மேல் படர்ந்திருக்கும் முல்லைக் கொடி மெல்ல இலையசைத்தது. நேற்று மாலை மூத்துக் காம்பு கழன்ற ஓரிரண்டு பூக்கள் தரையில் உதிர்ந்தன. அந்தக் காற்றோடு எத்தனையோ நாட்களாய் மறந்தும் மறைந்தும் போயிருந்த எத்தனையோ மனத்தாங்கல்களும் ஆத்திரங்களும் சூழ்ந்து கவிந்தன.

நேற்று பூத்த பூவின் மணம் இன்று அவர்களிடையே இல்லை. கொடியிலிருந்து காம்பு கழன்று விட்டாற் போல் இப்போது அவன் வேறு, தான் வேறு என்றுதான் அவளுக்குத் தோன்றியது. ஒருவருக்கொருவர் பிரியாமல் இழைந்த அந்நியோந்நியம் மங்கிப் போய்க் கசப்பு படர்ந்து கொண்டிருந்தது.

கணவன்-மனைவியின் சண்டை சச்சரவுகள் இப்போதெல்லாம் இலை மறைவு காய் மறைவாய் இல்லை. நடுக் கூடத்துக்கு அம்பலமாக வந்து எத்தனையோ நாட்களாகி விட்டன. வந்திருக்கும் விருந்தாளிகளும், சிநேகிதர்களும்கூடச் சமயத்தில் சமாதானம் செய்து வைக்கும்படி நேர்ந்து விடும். பின்கட்டில் குடியிருக்கும் லட்சுமி மாமிக்கு இதுவே ஓயாது வம்படிக்கத் தலைப்பாகி விட்டது.

மூர்த்தியை மணக்கும்போது மீனு எதை எதையோ எதிர்பார்த்துக் காத்திருந்தாள். எதை எதை எதிர்பார்க்கிறோம் என்றுகூடத் தெரியாத அளவுக்குக் கனவு கண்டு கொண்டிருந்தாள். ஆனால் கனவுகளுக்கு எல்லையில்லை. கனவுகள் நிஜமும் இல்லை. நினைவில் இருப்பதுதான் கிடைக்கும். அதுவும் இருக்கிற வரையில்தான் கிடைக்கும்.

அதுவே அவள் நெஞ்சில் இடைவிடாது ஏமாற்றமாய் நச்சரித்தது. அவசரத்தில் தவறான துருப்பைத் தேர்ந்தெடுத்துத் தோற்றுப் போன மாதிரி ஏக்கம் வதைத்தது. அதோடு தோற்றுப் போன சீட்டைத் தூக்கி யெறிகிற மனோபாவம் அவளிடம் வந்து விட்டது.

ஆரம்பத்தில் அவர்கள் அவ்வாறு இல்லை. அவர்கள் ஒருவர் மேல் ஒருவர் வைத்திருந்த



பிரேமையில் நெருக நிறைந்தாற் போல் இருந்தது. அவளுடைய பார்வை திரும்பும் பக்கமெல்லாம் மூர்த்தியின் வடிவம்தான் வந்து நின்றது. அவனைச் சந்திக்காமல் அவளால் ஒரு நாள்கூட இருக்க முடியாது. உலகத்தைப் பற்றி யெல்லாம் அவள் அக்கறைப் படவில்லை. உலகத்தின் எல்லையெல்லாம் மூர்த்தியோடு அடங்கி விட்ட மாதிரி இறுமாப்பான எண்ணம். தன்னை அவனிடம் அவ்வளவு தூரம் அவள் பறிகொடுத்துவிட்டாள். அவனுக்காகக் கனவிலும், விழிப்பிலும் தவம் கிடந்தாள்...... இப்பொழுது நினைத்துப் பார்க்கையில் பொய்ம்மை சாய்த் தோன்றினாலும் அப்போது அப்படியல்லை. எங்கோ, எப்படியோ தோன்றிய பரிச்சயம் ஆழ நெஞ்சில் ஆணி வேர் ஊன்றி அடங்காத நேசமாய் அரும்பித் துளிர்த்துவிட்டது.

கல்வியிலும் செல்வத்திலும் அவனும் அவளும் மடுவும் மலையும். அவன் கல்வி உயர் நிலைப் பள்ளியோடு சரி. அந்த வருஷத்தின் 'ஷேக்ஸ்பியர்' பொன் பதக்கம் அவளுக்குக் கிடைத்தது ஆனர்ஸ் வகுப்பில். காரை விட்டு இறங்கித் தெருவில் நடக்க அவளுக்குச் சரியாகத் தெரியாது. பஸ்ஸுக்குப் பணம் இன்றி அநேகமாக அவன் காரியாலயத்துக்கு இரண்டு மைல் தூரம் கால் நடையாகவே செல்வது வழக்கம். இந்த ஏற்றத் தாழ்வுள்ளவர்களை மணமுடிக்க அவளுடைய பெற்றோர் முதன் முதலில் சம்மதிக்கவேயில்லை.

ஆனால் கடலுக்கு அணைபோட இயலுமோ? எப்படியோ அவர்கள் இருவருக்கும் மணம் நடந்தது. அவள் பிடிவாதத்தின் பக்கம் ஜெயம் சேர்ந்தது.

மூர்த்தியே அவளைப் பார்த்து ஒரு நாள் கேட்டான், ''உனக்கு நான் ஈடா? என்னிடம் நீ என்ன கண்டாய்?''

அவள் பதில் தயாராக இருந்தது. ''உங்களிடம் நான் என்னையே கண்டேன். என் வடிவத்தின் நிழலையே கண்டேன். நிழல் இல்லாமல் விளக்குண்டோ? நிழலை விளக்கிலிருந்து பிரிக்க வேண்டும் என்றால் விளக்



கையே அணைக்க வேண்டியதுதான். இல்லையா?''

அவள் உருக்கத்தைக் கண்டதும் அவனுக்கு நெஞ்சை அடைத்தது. கைகளைப் பற்றி ஆதரவாகத் தழுவிக் கொண்டான்.

அவையெல்லாம் அந்த நாட்கள்!

இரவின் தன்மையான இருள் மயக்கில் ஏற்றிய விளக்கின் ஒளி விடிய விடியக் குன்றிப் போகிறது. வெய்யில் ஏறிச் சுற்றிலும் சூடு தகிக்கும் வேளையில் விளக்குக்கு ஒளி ஏது? விளக்கின் நிழல்தான் ஏது?

மீனுவுக்கு மெல்ல மனம் வாட ஆரம்பித்தது. லட்சியம், கொள்கையென்று மூர்த்தி பேசிய பேச்சுக்களில் நம்பிக்கை குறைந்தது. கல்யாணமாகிய ஒரு வருடத்துக்குள் மூச்சுத் திணறிப் போச்சு. தந்தையின் பராமரிப்பில் பணத்தைத் தண்ணீராய் வாரியிட்ட பழக்கம் இப்போதும் போகவில்லை. மூர்த்தியால் அதற்குச் சரியாய்ச் சமாளிக்க முடியவில்லை. நீக்குப் போக்குத் தெரியாமல் அவள் செல்லும்போது தடைபட ஆரம்பித்தான்.

ஊருக்குப் புதிதாக ஒரு திரைப்படம் வந்திருக்கும். ''இன்றைக்குப் போகலாம்! சாயங்காலம் ஆபீஸிலிருந்து சீக்கிரமாய் வந்து விடுகிறீர்களா?'' என்பாள் மீனு, ஆவலாய்.

''இல்லை, மீனு! இந்த மாதத்துக்கு ஒரு சினிமா ஆயிற்று! இன்னொரு சமயம் பார்க்கலாம்!'' என்பான் அவன் பார்வையைத் தாழ்த்திக் கொண்டு. அவள் முகம் ஏமாற்றத்தில் வாடுவதைப் பார்த்துச் சகிக்கும் தென்பு அவனுக்குக் கிடையாது. அதையே அவள் சாதுரியமாகப் பயன்படுத்திக் கொள்வாள். அவள் இமைகள் நனைந்தாலும் அவன் இணங்கி விடுவான்.

இன்னொரு சமயம் விலை உயர்ந்த புடவையொன்றைக் கணக்கில் வாங்கி வந்திருப்பாள். ஆபீஸிலிருந்து வந்ததும் அவனிடம் காட்டி விட்டு, ''...இந்த நீலம் எனக்கு ரொம்பப் பொருத்தமாயிருக்கிறது என்று சிநேகிதிகள் சொன்னார்கள். வாங்கிக் கொண்டேன்....'' என்று சின்னக் குழந்தை மாதிரி பொறுப்பில்லாமல் கூறுவாள்.

''உனக்கு நீலக் கலர் நன்றாகத்தான் இருக்கும். ஆனால் இதே கலரில் ஏற்கனவே ஒன்று வைத்திருக்கிறாயே?'' என்று கேட்டால் கோபம் வந்து விடும்.

''அது பட்டு! இது 'கிரேப்'. உங்களுக்கு விருப்பமில்லாவிட்டால் நேரிடையாகச் சொல்வதுதானே! இதென்ன சுற்றி வளைத்த பேச்சு?'' என்று சீறுவாள்.

''அப்படியில்லை, மீனு! இப்போது கொஞ்சம் கையில் முடை! உனக்குத் தெரியாதா என்ன?'' என்று அவன் சொல்லும்போது கெஞ்சுகிற மாதிரி அவன் குரல் தணிந்திருக்கும்.

''எப்போதுதான் நமக்கு முடையில்லை? நான் இதை வாங்கிக் கொள்ளத்தான் போகிறேன். எனக்கு இது பிடிச்சிருக்கு. மாதா மாதம் கொஞ்சம் கொஞ்சமாய்ப் பணம் கொடுத்து விடலாம். நீங்கள் 'முடியாது' என்று தீர்மானமாய்ச் சொல்லி விடுங்கள். அப்பாவுக்கு எழுதிப் பணம் வரவழைத்து விடுகிறேன்.''

அந்தப் பேச்சு அவனுக்குப் பிடிக்காது. தன் வாழ்வுக்கு யார் கையையும் எதிர்பார்க்கக் கூடாது என்ற வைராக்கியம் அவனிடம் திடமாக ஊறியிருந்தது. ஓட்டுக்குள் நத்தை போல் தனக்குள்ளேயே பாதுகாப்பு வேண்டும், பிறர் தந்து மாளாது என்று உறுதியாய்க் கருதினான்.

ஒரு இயல்பில் அவன் சரிதான். மீனுவைத் தந்த பின்னும் அவனிடம் மீனுவின் தந்தைக்கு மதிப்பு ஏற்படவில்லை. அந்தஸ்து வேறுபாடு இருவரிடையே கோட்டை கட்டிற்று. அவனும் தனித் தன்மையில்லாமல் திரவம் போல் மாற ஒப்பவில்லை. இத்தனை நாட்கள் கழித்து, முற்றுகை தாங்காமல் கோட்டையை விட்டுச் சரணடைந்தது போல் அன்றுடம் அவரிடம் பண உதவியை எதிர்பார்த்து நிற்கத் தயாராயில்லை. முன்பெல்லாம் அவன் எண்ணத்தை மீனுவும் மனத்தளவில் ஆதரித்தாள். இப்போது மீனுவிடம் அந்த உத்வேகமில்லை.

இந்நிலையில்தான் மீனு உள்ளூரில் ஒரு கல்லூரியில் ஆசிரியை வேலைக்கு மனு செய்திருந்தாள். வெகு சுலபமாய் வேலை கிடைத்தது. அதை ஒப்புக் கொள்ள மீனு அவனிடம் சம்மதம் கேட்டபோது அவன் அரை மனத்தோடு ஆமோதித்தான். வேண்டாமென்று சொன்னால் அவள் கேட்க மாட்டாளோ என்ற ஐயம். கூடுதலாகக் கிடைக்கும் இவ்வருமானத்தை வேண்டாமென்று மறுக்கும் நிலையில் குடும்பமும் இல்லை. பூவைப் போல் இதழ் கூட நலுங்காமல் மீனுவைக் காலமெல்லாம் போற்ற வேண்டும் என்று எண்ணியிருந்த எண்ணம் அதோடு நழுவியது.

நாளடைவில் இருவருக்குமே தெரிந்தது. ஒரு வீட்டில் இருவருமே வேலைக்குச் செல்லும் போது வீடு வீடாக இல்லை. வீட்டில் நிம்மதியில்லை; வேலை செய்யும் இடத்தில் சுதந்திரம் இல்லை. கூட்டில் சேர்ந்திருந்த சுகத்தை விட்டு விட்டு, தங்கக் கூண்டென்று ஆசைப்பட்டு இருவருமே வலுவில் சிக்கிக்கொண்ட மாதிரி ஆகிவிட்டது.

அதற்கேற்றாற் போல் வெளியே பறக்க இயலாமல் சிறகுகளும் தளர்ந்து விட்டன. மூர்த்தியின் ஒரே தங்கைக்குச் சமீபத்தில் திருமணம் நடந்ததில் ஏகமாகக் கடன்கள் அவன் மேல் ஏறின. நீண்ட பயணத்தில் சுமை தாங்கியைக் கண்டாற் போல், அந்தப் பாரத்தைத் தாங்க இடையிடையே மீனுவின் உத்தியோகத்தையும் அவன் நம்பி நிற்க வேண்டியதாயிற்று. மெல்ல மெல்ல மனக் கசப்பு அதிகரித்தது.

இந்த வீட்டில் இப்போது சண்டை ஒரு நிமிஷம்கூட ஓய்வதில்லை. அதற்கெல்லாம் ஏன் என்னவென்று கேட்டால் கட்டுப்படியாகாது. எல்லாமே அவளின் நினைப்பில் உரலை இடிக்கிற மாதிரிதான்.

மீனுவால் ஒரு விஷயத்தில் கூடத் தணிந்து போக முடியவில்லை. வேடிக்கையாகவும் கேலியாகவும் தொடங்கும் பேச்சுக்களெல்லாம் கூட எப்படியோ திசை மாறி, அவள் ஒன்று சொல்ல, அவன் ஒன்று சொல்ல, ஒன்று பத்தாகிவிடும். இப்படி ஒருவரோடு ஒருவர் ஒட்டாமல் எத்தனை நாட்கள் போராட முடியும்? அவள் மனம் பிரிவுக்கு ஏங்கியது. பிறந்த வீட்டின் செல்வ சுகத்தைத் திரும்பவும் நினைக்கத் தலைப்பட்டது.

ஆனால் ஊமையின் உணர்ச்சி போல் அதை வாய் விட்டுச் சொல்லவும் அவளால் முடிய

# சென்னை சர்க்கிள் போஸ்டல் கோ-ஆபரேடிவ் பாங்க் லிமிடெட், ரெ. 1031

(ஸ்தாபிதம் : 1913)

45. மூர் தெரு. சென்னை -1

பிக்ஸட் டிபாசிட்டுகள் :

| | | | |
|---|---|---|---|
| 6 | மாதங்களுக்கு | ... | 5% |
| 12 | மாதங்களுக்கு | ... | 5¼% |
| 18 | மாதங்களும அதற்கு மேலும் | ... | 5½% |

**விரும்புவோர் மாதா மாதம் வட்டியைப் பெற்றுக் கொள்ளலாம்**

சேவிங்ஸ் டிபாசிட்டுகள் :

வருடத்துக்கு 3% வட்டி விதம் ஏற்றுக் கொள்ளப்படும்

ரெகரிங் டிபாசிட்டுகள் :

பிரதி மாதம் டிபாசிட் செய்யும் தொகையான ரூ. 1/-
கீழ்க்கண்டபடி பெருகி வரும்

| | | | | |
|---|---|---|---|---|
| 12 | மாதங்களுக்குப் பிறகு | ... | ரூ. | 12 42 |
| 24 | மாதங்களுக்குப் பிறகு | ... | ரூ | 25 50 |
| 45 | மாதங்களுக்குப் பிறகு | ... | ரூ. | 50.00 |
| 84 | மாதங்களுக்குப் பிறகு | ... | ரூ. | 102 50 |

எஸ் பி. ஞானபிபதி, காரியதரிசி

---

## அமிசங்களில் ஓர் தெளிவான மாறுதல்

ஆல்ஸிட் (டேப்லெட்ஸ்) மாத்திரைகள் தலைசோவு, நீர்க்கொள்ளுதல், காய்ச்சல், ஊரிருப்பது போன்ற உணர்ச்சி, தலைவலி ஆகியவற்றை சட்டென்று நிவாரணம் செய்யும். ஒரு பாக்கெட் ஆல்ஸிட் மாத்திரைகள் எப்பொழுதும் வைத்திருங்கள்.

# ஆல்ஸிட்

டேப்லெட்ஸ்







ஓர் பெங்கால் இம்யூனிடி தயாரிப்பு



நீதிபதி ஒருவருக்கு இரவு வெகுநேரம் வரை தூக்கம் வராமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தார் கொஞ்ச நாளாகவே அவர் படுத்த படுக்கையாக வேறு இருந்தார். ''டாக்டரைவரவழைக்கட்டுமா?'' என்று அவர் மனைவி கேட்டாள். ''வேண்டாம் பியூனை அனுப்பி வக்கீல் பராங்குசத்தை உடனே கையோடு அழைத்து வரச் சொல்லு'' என்றார் நீதிபதி. ''ஐயையோ! என்ன இது ஏதேதோ உளறுகிறீரே? உயில் ஏதேனும் எழுதப் போகிறீரா என்ன?'' என்று மனைவி திணறினாள்.

நீதிபதி உடனே அவளைச் சமாதானப் படுத்தி, ''அடி அசடே! வக்கீல் பராங்குசம் வந்து கொஞ்ச நேரம் வாதம் பண்ணிக்கொண்டிருந்தால் நான் தூங்கிவிடுவேன்'' என்றார்.

வில்லை. அப்படிச் சொல்வது தன் தோல்வியைத் தானே ஒப்புக் கொண்டதாக ஆகாதா? லட்சியம், வெற்றி என்று தான் பேசிய பேச்சுக்களைச் சுட்டிக்காட்டி அப்பாவும் அம்மாவும் பரிகாசம் செய்ய மாட்டார்களா?

அவள் உயிர் நலிந்து உறைந்து போனாள். பதுங்கிய விலங்குகள் போல் ஒருவரை யொருவர் ஒளிந்து நோக்கினர். அவள் நெஞ்சில் அலுப்பு வழிந்தது. அடிக்கடி அவனை வலுச்சண்டைக்கு இழுத்து வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்ள ஆசையாய்க் கூட இருக்கும். வாக்குவாதம் முற்றி விட்டால் என்னென்ன பேசுகிறோம் என்றே அவள் அறியாள். மூர்த்தியின் பூஞ்சை மனம் புண்பட்டுப் போகும். அதுவே வெற்றியாக அவள் எண்ணிக்கொள்வாள் — வாழ்வின் பெருந்தோல்வியை மறக்க அவ்வப்போது கிடைக்கும் அர்த்தமற்ற வெற்றிகள் இவை!

தனக்கு அவனுடைய துணை இனியும் தேவையில்லை என்ற கர்வம் அவளிடம் வளர்ந்ததுதான் இதற்கெல்லாம் காரணம். தன் வருமானம்தான் அவனையும் அவன் தம்பி தங்கைகளையும் தாங்குகிறது என்ற அகந்தை கவிந்து அதன் நிழலில் அவளுடைய கனவுகள், பிரேமை, அன்பு, பெண்மை எல்லாமே இருண்டன.

இன்று காலையும் அப்படித்தான். அவனுடைய அம்மா ஊரிலிருந்து பணம் கேட்டு எழுதியிருந்தாள்; அவனுடைய தங்கைக்கு வருடாந்திர சீர் செனத்திக்காகத்தான். ஒரு பெண்ணைக் கலியாணம் செய்து கொடுத்ததுமே ''கடமை தீர்ந்தது'' என்று எங்கே கை கழுவ முடிகிறது?

கடிதத்தைக் கண்டதும் மீனுவின் கண்கள் நெருப்புக் கனிகளாயின. ''கேட்டபோதெல்லாம் கொடுக்க இங்கே என்ன கொட்டியா வைத்திருக்கிறது? கலியாணத்துக்கு வாங்கிய கடனே இன்னும் அடைபடவில்லை. அதற்குள் புதுக் கடனா? இன்று கேட்டு வாங்கிக்கொண்டு போவோர் நாளை வட்டியும் முதலுமாகக் கடன் அடைக்க வருவார்களா?''

மூர்த்தி பரிகாசமாகச் சிரித்தான். சொந்த ஆடம்பரச் செலவுகளுக்காகக் கடன் வாங்குகையில் கவலை உணராத குழந்தை தன் கணவனின் தங்கைக்காக என்று வரும்போது எத்தனை பொறுப்புணர்ச்சியுடன் பேசுகிறது!

சோடா பாட்டிலில் கோலி பிதுங்கிய மாதிரி அவள் விழிகள் மாறி விட்டன. முன்னது, பின்னது, தற்போது என்று எல்லாமே ஒருங்கே மோதும் அதிர்ச்சியில் வார்த்தைகள் வரம்பு மீறின.

''என் ஆடம்பரச் செலவுக்கு யார் பணம் தருகிறீர்கள்? இவ்வீட்டுப் பரம்பரைச் சொத்தா பாழ் போகிறது? நானாக ஈட்டுவதை என் விருப்பப்படி செலவு செய்ய யாரைக் கேட்க வேண்டும்? யாருக்காகவோ வாங்கிய கடனை அடைக்க என்னை ஏன் கசக்கிச் சாறு பிழிய வேண்டும்? 'முடியாது' என்றால் என்னை யார் என்ன செய்துவிட முடியும்?''

அவள் போட்ட கத்தலில் அவன் கைகள் பின்னிப் பிரிந்து தவித்தன.

''இவ்வளவு ரகளை பண்ணுவது உனக்கே நியாயமாயிருக்கா, மீனு? இப்போது என்ன சொல்லி விட்டேன், இப்படி அமர்க்களப் படுத்த?'' என்று சொல்கையில் அவன் குரலும் மனமும் பதறின.

கண்ணீர், கோபம், அகந்தை, அலட்சியம் எல்லாம் ஒருங்கே அவளை அலைத்தன.

''உங்கள் நியாய அநியாயமெல்லாம் எனக்குத் தெரியும். அதெல்லாம் பேச்சிலேதான் இருக்கிறது. செயலிலே காணோம். என்னை இனிமேலும் யாராலும் ஏமாற்ற முடியாது. பட்டதெல்லாம் போதும். என்னை விட்டு விடுங்கள். நான் போய்ச் சேருகிறேன். உங்கள் பாடு, உங்கள் தம்பி தங்கைகள் பாடு. கடன்தான் வாங்குங்கள். கலியாணம்தான் செய்யுங்கள். என்னை மட்டும் வதைக்காதீர்கள். விட்டு விடுங்கள்.''

அவள் வார்த்தைகள் ஏவிய ஈட்டிகளாகத் தாக்கின. அவன் நெஞ்சிலும் கோபம் எல்லை மீறிப் புயல் பிய்த்துக்கொண்டது.

''நீ போவதைப் பற்றி எனக்கு ஆட்சேபனை இல்லை. உன்னை யாரும் இங்கே பிடித்து வைத்துக் கொள்ளவில்லை. ஆனால் ஒன்று மட்டும் சொல்கிறேன். ஏமாந்தது நீயில்லை. நான்தான். தகுதி இல்லாத சம்பந்தம் இப்படித்தான் கவைக்கு உதவாது. உனக்காக என் தம்பி தங்கைகளை என்னால் உதறிவிட முடியாது....''

அவள் மேலே பதில் சொல்வதற்குள் அறையின் கதவை அறைந்து சாத்திக் கொண்டு அவன் சென்று விட்டான்.

மனம் சற்றே ஓய்ந்து மீனு கல்லூரிக்கு வரும் போது மணி பன்னிரண்டு. நல்ல வேளை, அன்று காலை வகுப்பு எதுவும் இல்லை. இருந்திருந்தாலும் அவள் அதிகமாகக் கவலைப் படமாட்டாள். ராஜிநாமா கடிதம் 'டைப்' செய்து தயாராக இருந்தது. 'லீவ்' ஆறும் வரையில் லீவு கேட்டு இன்னொரு கடிதம். பிரின்ஸிபல் இன்னும் வரவில்லை. வந்ததும் தந்துவிட வேண்டும்.

எல்லாவற்றையும் முடித்துக் கொண்டு தன் அறைக்கு வந்து அமர்ந்த பின்னும் ஏனோ அசதியாய் இருந்தது. மேலே சுழலும் மின் சார விசிறியில் அச்சு சரியாய் இல்லாததால் படபடத்தது.

தன்னந்தனியாக இப்படி உட்கார்ந்திருக்கும்போது இதென்ன வேதனை? இனி சண்டை சச்சரவுகளில்லை. மௌனமாகப் போராடும் நிலையும் இல்லை. ஆயுளுக்கும் ஒருவருக்கொருவர் விடுதலையின்றி விதிக்கப்பட்ட சிறை வாழ்க்கை இனி இல்லை. இனி அவரவர் வழியில் அவரவர்! திரும்பவும் சூழ்நிலை சாதகமானால் சேரலாம். இல்லையானாலும் தேவையில்லை..... தனித்து வாழும் சுதந்திரம் இருவருக்குமே உண்டு.

இது வரவேற்கத் தகுந்ததல்லவா? பின் நெஞ்சுக்குள் நெஞ்சாய் இந்தத் துக்கம் ஏன்?

சட்டென்று அவளுக்கு விக்கிற்று. மேஜை மேல் இருந்த மணியை அவசரமாய்த் தட்டினாள். அதற்குள் பணிப்பெண் தங்கம் ஒரு கண்ணாடித் தம்ளரில் நீரோடு நுழைந்தாள்.

அவள் உதடுகள் தம்ளரின் விளிம்பில் அளவாய்ப் படிந்து அழகாய்ச் சிவந்தன. நெஞ்சக் குழலில் ஜில்லென்று தண்ணீர் இறங்கும் கிளுகிளுப்பு ஆனந்தமாக இருந்தது. தாகத்தோடு பருகும் நீரின் முதல்துளி அலாதிதான்!

தம்ளரைத் திரும்பத் தரும் போது தங்கத்தின் கைகளைக் கவனித்தாள் மீனு. நேற்று போட்டிருந்த பொன்காப்பு இன்று அங்கே காணோம். அடிக்கடி இப்படித்தான். பதினைந்து நாட்களுக்கு முன் தங்கத்தின் கழுத்தில் திடீரென்று தங்கச் சங்கிலியைக் காணோம். ஒரு வாரத்துக்கு முன் தோட்டுக்குப் பதில் காதில் குச்சி செருகியிருந்தாள். இப்போது கைக்காப்பு அடகாகியிருக்கிறது.

குளத்தங்கட்டில் சிற்றலைகள் தளும்புவது போல் தங்கத்தின் குரல் தழுதழுத்தது.

''என்ன தங்கம்? காப்பும் பட்டாணிக் காரன் கடையைப் பார்க்கப் போயிடுச்சா? தாலிக் குண்டுதான் பாக்கியாக்கும்?''

''என்னம்மா செய்யறது? நேற்று இரவுக்கு போலீசிலே அவரைப் பிடிச்சுக்கிட்டுப் போயிட்டாங்க! கள்ளச் சாராயத்தை மனசப்படி குடிச்சுட்டுத் தெருவிலே போறவங்க மேலே கல்லை வீசினால் சும்மா விடுவாங்களா? காப்பை வச்சுத்தான் அம்பது ரூபா வாங்கினேன். பார்க்கிறவங்களைப் பார்த்து, கொடுக்கிற இடத்திலே கொடுத்து, அவரை இட்டுக் கிட்டு வர ஆள் அனுப்பிச்சுட்டுவரேன். இதெல்லாம் பணமில்லாமல் நடக்குதா? பணத்துக்கு நான் எங்கே போவேன், சொல்லுங்க?''

அவள் கண்கள் ததும்பின. மீனுவின் மனம் உருகிப்போயிற்று.

சில மாதங்களுக்கு முன்னால், மீனு இக் கல்லூரியில் சேர்ந்த புதிதில் இதே தங்கம் காட்டாறு மாதிரி எவ்வளவு குதூகலமாய் இருந்தாள்! அந்தக் குதூகலம் இப்போது எங்கே? பழைய இளமை அழகு எங்கே?..... ஆண்வர்க்கமே ஒருமிக்கவிரக்கமற்றதுதானோ!

'மாமன் என்னைக் கட்டிக்கச் சம்மதிச்சுட் டாரும்மா, நாளைக்குப் பரிசம் போடப் போகிறாங்க' என்று அவள் நாணத்தோடு தெரிவித்த தினம், மீனுவுக்கு இப்போது நினைவு வந்தது. தன் மாமன் மேல் அத்தனை தூரம் தன் உயிரையே வைத்திருந்தாள்! கலியாணம் ஆன புதிதில் அவர்களிடையே இருள் இரவின் பின்னணியில் நடந்த சிற்சில நேர்த்தியான நிகழ்ச்சிகளைக் கூட வாய்விட்டு வெட்கம் மறந்து சட்டென்று மீனுவிடம் கொட்டி விடுவாள். மீனுவிடம் அவளுக்கு ஏனோ அப்படியொரு நெருக்கம். மீனு அப் போதெல்லாம் மாறாத புன்னகையோடு கேலி செய்வது வழக்கம்.

அந்த மகிழ்ச்சி வெகுநாட்கள் நிலைக்க வில்லை. மாமனிடம் ரகசியமாயிருந்த என்னென்னவோ தூர்ப் பழக்கங்கள் மெல்ல வெளி வந்தன. தங்கம் ஒளியிழந்து போனாள். அதுவே மீனுவின் பரிவைத் தூண்டியது..... 'பெண்களின் வாழ்வே ஒரு கனவுதான்! ஒரு கனவுதானா? எத்தனை எத்தனையோ கனவுகள் அர்த்தமற்ற கனவுகளைத் துடைத்தெறிந்து விட்டுப் பெண்கள் சுதந்திரமாய் வாழக் கற்பதே அறிவுடைமை.

என்றும் இல்லாமல் இன்று ஏனோ நினைத்ததைச் சொல்லி விட்டாள்.

''ஏன், தங்கம், இன்னும் அவனுக்குச் சரி யாய் வளைந்து கொடுத்துக் கொண்டு உயிரை விடுகிறாய்? கொஞ்ச நாட்கள் கம்பி எண்ணி விட்டுத்தான் வரட்டுமே அவன். அப்போதா வது புத்தி திருந்தி வருகிறானா, பார்க்கலாம்!''

தங்கம் பதறிப் போய்த் தலை நிமிர்ந்தாள்.

''அப்படி நெஞ்சைப் பஞ்சைப் போட்டுத் துடைச்சுக்க என்னாலே ஆகாது அம்மா! அவரு இரும்புக் காப்புப் போட்டுக்கிட்டு ஜெயிலிலே கூழு துன்னா உட்டுட்டு எனக்குத் தங்கக் காப்பு என்னுதான் மனசு கிடந்து அடிச்சுக்குது....'' என்றாள் தங்கம்.

மீனாவின் உதடுகள் விஷமமாய் வளைந்தன.

''இன்னொருத்தி எங்கோ இருப்பதாகச் சொன்னாயே, அவள் அவனைப் பார்த்துக் கொள்ள மாட்டாளா, தங்கம்?''

தங்கம் தவித்துப் போனாள். ''அவளும் நானும் ஒண்ணாக ஆகலாமா? அவளுக்குத் தான் அது தெரியலே? நமக்காச்சும் தெரிய வேணும்? எப்படியும் இன்னும் கொஞ்ச நாளிலே இருந்திடுவாருன்னு நம்பிக்கை தோணுது. இருந்தக்கூட வேணும். தாலியைக் கொடுத்தாச்சு. தாலி நிலைச்சாப்போதும். எங்கேயாவது மனசுப்படி அவரு சேமமா இருந்தால் சரி. எனக்கும் அவருக்கும் சேர்த்து எப்படியும் நானே உழைச்சுச் சம்பாரிச்சுப் போட்டுடறேன்...''

அப்படிப் பேசுகையில் தங்கத்துக்கு உணர்ச்சி தொண்டையை அடைத்தது. கன்னத்து மேட்டில் கண்ணீர் வாய்க்காலாய்க் கரை புரண்டது. பளிச்சென்று முகத்தில் பற்றியிருந்த மஞ்சளுடன் நெற்றியில் அகல மாய் இட்டிருந்த குங்குமம் அசாதாரண ஒளி யோடு தகதகத்தது. மீனாவுக்கு மேனி சிலிர்த்தது.

தங்கம் நிறுத்தவில்லை.

''நான் இன்னும் கூடச் சொல்றேன். அவரு கள்ளு குடிக்கிறாரு. இன்னொரு பெண்ணைத் தேடிக்கிட்டுப் போறாருன்னு அது அவரோட குத்தமாக எனக்குப் படலே. அது என்னோட குத்தம்னுதான் தோணுது! அவரைச் சந் தோஷமா வச்சுக்க எனக்குச் சாமர்த்தியம் பத்தலே. அவரை எனக்கு மட்டும் தான் என்று அடக்கத் திறமையில்லேன்னுதான் தோணுது! நம் குறையை நாம்தானே அனுப விக்கணும். அனுபவிக்க நான் தயாராயிட் டேன். அவளோடவாவது அவரு சந்தோஷமா இருந்தா சரின்னு மனசைத் தேத்திக்கிட் டேன்....''

மீனாவின் உடல் கிடுகிடுவென்று ஆடியது. உள் வலியில் புருவங்கள் தொறுங்கிச் சிறுகடு துடித்தது.

நெருப்பில் புடம் போட்ட பொன்னைப் போல், தன் வேதனைக்குத் தன்னையே காரண மாக்கிக் கொண்டு, அந்த வேள்வித் தீயில் குளித்தெழுந்து தங்கம் தூய்மையாய் ஜொலிக் கிறாள். முன் பின் கண்டிராத ஓர் ஒளிவட்டம் அவள் முகத்தில் பொலிகிறது.

மீனாவின் வியப்பு வானமாய் விரிகிறது. படிப்பு வாசனையில்லாத ஒரு பெண்ணுக்கு இவ்வளவு பகுத்தறிவா? இவ்வளவு தன்னல மில்லாத எண்ணமா? இத்தனை தூய்மையா? இத்தனை தியாகமா? ஒரு வேளை, படிப்பு வாசனையில்லாததால் தான் இத்தனை தூய்மை யும், தியாக சிந்தையும் இவளிடம் நிலைத் திருக்கின்றனவோ? படிப்பு வளர்ப்பது அகந்தையைத்தானோ?

தனக்கென்று தங்கம் எதையுமே வைத்துக் கொள்ள விரும்பவில்லை. சம உரிமை என்ற சொல்லை அவள் இதுவரை புரிந்து கொள்ளவே யில்லை. கணவனின் ஆனந்தத்துக்காகத் தன்னையே அர்ப்பணிக்கக் காத்திருக்கிறாள். உண்மையில் இதுதான் பெண்மையா? அதன் உயர்வும் பெருமையும் இதுதானா? அதனால் தான் தெய்வீகம் என்று போற்றப்படுகிறதா?

மீனாவின் விழிகளுக்குள் மூர்த்தியின் வடி வம் வந்தது. தங்கத்தின் மாமனைப் போல் அல்ல அவன். தீச் செயல்கள் தெரியாது. கற்றுத் தந்தாலும் வராது. ஆனால் தங்கை—தம்பிக்கான கடமையை மறக்கவில்லை அவன். அது ஓர் உத்தமமான குணமல்லவா! அதற் காக அவனைப் போற்றி அந்த நற்பணியில் அவனோடு அவள் ஒத்துழைக்க அல்லவா வேண் டும்! மாறாக, அவள் அவனை இப்படிப் புண் படுத்தி விட்டாளே!

தங்கத்தின் சந்நிதானத்தில் தான் தூசி யாக நிற்பது போலிருந்தது மீனாவுக்கு.

மூர்த்தி வீடு திரும்பும்போது இருட்டி வெகு நேரமாகி விட்டது. மீனா இல்லாமல் வீடு வெறிச்சோடிக் கிடந்தது என்ற எண் ணத்தில் எங்கெங்கோ சுற்றிவிட்டுச் சோர்ந்து போய் வீட்டை அடையும்போது வாசற்படியி லேயே அவனுக்காக ஆச்சரியம் காத்திருந்தது.

''அப்படியென்றால் நீ ரும்ப கோணம் போக வில்லையா, மீனா?....'' என்று அவன் கேட்கும் போது சந்தோஷம் எல்லை மீறி, காற்றில் நடுநடுங்கும் அலை நுரை போல், சொற்கள் தத்தளித்து வந்தன.

அவள் நெஞ்சில் இன்னதென்று புரியாத பரவசமான உணர்ச்சி குமிழியிட்டது. அவ னருகே சென்று நின்று ஆசையோடு அவன் கைகளைப் பற்றித் தன் தோள் மேல் அமர்த்திக் கொண்டாள்.

''.....உங்களை விட்டு என்னால் பிரிந்துபோக முடியாது. போகிறேன் என்று நான் சொன்னது எல்லாம் 'போகக் கூடாது' என்று நீங்கள் சொல்ல வேண்டும் என்று தான். திரும்பத் திரும்ப நீங்கள் அதைச் சொல்லிக் கேட்பதில் எனக்கொரு சுகம். என்னை விட்டு விட்டு உங்களால் இருக்க முடியாது என்பதில் எனக்குப் பெருமை. காலையிலே நீங்கள் அப்படிச் சொல்லவில்லை என்றுதான் எனக்குக் கோபம்.''

தான் பேசுவதைக் கேட்கத் தனக்கே ஆச்சரியமாயிருந்தது மீனாவுக்கு.

அவன் சட்டென்று அவளைத் தன்னோடு சேர்த்து அணைத்துக் கொண்டான். ''...அது எனக்கு அப்போது தோன்றவில்லை, மீனா! அவ்வளவு இலகுவாய் என் தோல்வியை உன் னிடம் ஒப்புக்கொள்ள உள்ளூற வெட்கமா யிருந்ததோ என்னவோ!...''

அவள் அவனைக் கவாரசியத்தோடு நோக்கி னாள். அவன் கண் விழிகளிலே அவள் வதனம் சுடர்விட்டுக் கொண்டிருந்தது.

# ஆஹா...

**என்னே ஆரோக்கியமளிக்கும் புத்துணர்ச்சி, கோலினுஸின் பாதுகாக்கும் நுரையிலே!**

சுறுசுறுப்பாக வாழ்பவர்கள் கோலினுஸைத் தேர்ந்தெடுக்கிறார்கள்...ஏனெனில் நுரைக்கும் தன்மையுள்ள கோலினுஸ் மட்டுமே பற்சிதைவு மற்றும் வாய் நாற்றத்திலிருந்து இரவும் பகலும் பாதுகாப்பளிக்கிறது. ஆகையால் கோலினுஸ் சூப்பர் ஒயிட்டை உங்களுடைய பற்பசையென்று நிச்சயப்படுத்திக்கொள்ளுங்கள்.

## தலைநிமிர்ந்த புன்சிரிப்பு–அது கோலினுஸின் புன்சிரிப்பு

அல்லது, வீரியமுள்ள குளோரோபில்லின் களிப்பூட்டும் புத்துணர்ச்சியை நீங்கள் விரும்பினால், கோலினுஸ் குளோரோபில் வேண்டுமென்று கேளுங்கள்.




பற்சிதைவைத் தடுக்கிறது. உங்கள் மூச்சிலே மணம் கமழச் செய்கிறது. உங்கள் பற்களை வெண்மையாக்குகிறது.

Registered User: GEOFFREY MANNERS & CO. LIMITED

# ஓட்டப்பந்தயம்.4

கதை: ஏ.எஸ்.சுந்தரராஜன் — சித்திரம்: செல்லம்

பசுபதியின் அலறலைக் கேட்டு அரண்டு போன நண்பர்களுக்கு ஆறுதல் அளிக்க வருகிறாள் அழகுப் பாவை பாரிஜாதம்.



















அன்றிரவு...
யாரோ வெளியில் முனகுவது போலிருக்கிறதே...


யார், பாரிஜாதமா? ஏன் உடம்புக்கு என்ன?
சாப்பாடும் பிடிக்கவில்லை. தூக்கமும் வரவில்லை டாக்டர். சதா உங்களோடு பேசிக்கொண்டிருக்க வேண்டும் போலிருக்கிறது. இது என்ன வியாதி?


இது 'லவ்வோமியா'வின் அறிகுறி. இதற்கு மருந்து... பாரிஜாதமே உன் ஜாதகமும் என் ஜாதகமும் பொருந்தி வரும் என்று நம்புகிறாயா?
ஏன் சந்தேகப்படுகிறீர்கள்? என் அப்பா தடையாக இருப்பார் என்றா?


உன் அப்பாவைப் பற்றியில்லை. என்னைப்பற்றித்தான். இந்த டாக்டர் வாழ்வு எத்தனை நாளைக்கு நிலைக்கப் போகிறது?— அதாவது எனக்குப் 'ப்ராக்டீஸ்' நடக்காவிட்டால்?
அதனால் என்ன? என்னுடைய பாட்டியின் சொத்து இருக்கிறது. ஒரு லட்சம் தேறும். அதை அப்படியே தூக்கி உங்கள் கையில் கொடுத்துவிடுகிறேன்.


பாரிஜாதம்! எங்கே கையடித்துக்கொடு.


இவர்கள் சம்பாஷணை முழுவதையும் கேட்டுக் கொண்டிருந்த வேலையாள் வீரன் அவசரமாகப் பசுபதியின் அறையை நோக்கி நடந்தான்.
(தொடரும்)

# உங்கள் கூந்தலின் உண்மை அழகை வெளிப்படுத்த

# கால்கேட்

## பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில் உபயோகியுங்கள்



உங்களுக்குப் பிடித்தமான
கூந்தல் அலங்கரிப்பு எதுவாயினும்,
கால்கேட் காஸ்டர் ஹேர் ஆயிலைத்
தவறாமல் தேய்த்து வருவது
கூந்தல் அடர்த்தியாக அழகுடன்
வளர்வதற்கு இன்றியமையாதது!

தினந்தோறும் கால்கேட் காஸ்டர் ஹேர் ஆயிலை மயிர்க்காலிலும், கேசத்திலும் தேய்த்துக் கொள்வது லக்ஷக்கணக்கான குடும்பங்களில் இப்பொழுது குளிக்குமுன் செய்யும் அவசியமான பழக்கமாகிவிட்டது. இவ்வெளிய பழக்கத்தினால் உங்கள் கூந்தல் அடர்த்தியாக நீண்டு பளபளப்புடன் வளருவதுடன், இளமைத் துடிப்பின் காந்தியோடும் அற்புத ஜ்வலிப்போடும் விளங்குவதைக்கண்டு நீங்கள் பரவசமடைவீர்கள்.

எல்லோரும் அதிசயிக்கும்
வண்ணம் உங்கள் கூந்தலின்
உண்மையழகை வெளிப்படுத்த
கால்கேட் உதவுகிறது.








மகிழ்ச்சிதரும் நறுமணம்
உங்கள் குடும்பம் முழுவதும் அதை விரும்பும்!

# கால்கேட்

## பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில்

ECHO-G-4.TAM.

# போர்முனை

## இரண்டாம் பாகம்

### எங்கள் கதை

**உமாகாந்த் :**

ஒத்துழையாமை இயக்கம் தீவிரமாக நடைபெற்ற காலம் அது. நாடு முழுதும் சூறாவளி வீசியதென்றால் வங்கம் எரிமலையாகக் கொந்தளித்துக் கொண்டிருந்தது. சுபாஷ் போஸின் தலைமையில் நடைபெற்ற சுதந்திர தின ஊர்வலத்தில் கலந்து கொண்டேன்; தடியடி பட்டேன். முதுகெலும்பு முறிந்து போக ஆறு மாதங்கள் ஆஸ்பத்திரியில் கிடந்து அவஸ்தைப்பட்டேன். தாய்நாட்டுக்காக நான் அடைந்த இன்னல்கள் இன்னும் எத்தனை எத்தனையோ! சுபாஷ் பாபு தேகத்தை சொஸ்தப்படுத்திக் கொள்வதற்காக அயல் நாடு சென்றார். துடுப்பில்லாத தோணி போலானேன் நான். புயலுக்குப் பின் அமைதி போல் சுதந்திரப் போரின் வேகமும் வெகுவாகத் தணிந்து போயிருந்தது. வாழ்க்கையில் முன்பு இருந்த பரபரப்பு இல்லை, ஊக்கமோ உற்சாகமோ இல்லை. கான்பூர் திரும்பினேன், பெற்றவர்களைப் பார்க்க. அங்கே தாரா எனக்கு அறிமுகமானாள். தேசம் விடுதலை பெறும் வரை விவாகத்தைப் பற்றிக் கனவில்கூட நினைப்பதில்லை என்று என் அருமைத் தலைவரைப் போலவே நானும் சபதம் எடுத்துக் கொண்டுதான் இருந்தேன். ஆனால் தாராவின் யௌவன அழகு என்னை நிலை தடுமாற வைத்து விட்டதே?

**தாரா :**

உமாகாந்தின் சபதத்தைப் பற்றிக் கல்யாணமாகிப் பல நாட்கள் வரையில் எனக்கு ஒன்றும் தெரியாது. ஆனாலும் அவர் ஏதோ ஒரு மன வேதனையுடன் போராடுவது மட்டும் எனக்குப் புலனாயிற்று. மன உறுதி குலைந்து அவர் என்னைக் கரம் பிடித்தார் என்பதைப் பின்னால்தான், அவருடன் சில நண்பர்கள் அளவளாவுவதை ஒட்டுக் கேட்டபோது அறிந்து கொண்டேன். இவர் திடீரென்று அவர் இந்தத் தோல்வி மனப்பான்மைக்கு உள்ளாகி நடுங்குவார். அந்தச் சமயங்களில் உடலால் நான் அவருக்கு மிக அருகில் இருந்தாலும் உள்ளத்தால் இருவரும் இரு துருவங்களில்தான் வாசம் புரிந்தோம். உமாகாந்த் நாட்டுக்காக எவ்வளவோ துன்பங்களைச் சகித்தும் பலனென்ன? சுதந்திர சூரியன் உதயமாவதைக் காணக் கொடுத்து வைக்கவில்லை அவருக்கு. சொந்த முறையில் பேரும் பெயரும் புகழும் ஈட்ட முடிந்ததா? அவையும் கைகூடவில்லை. இதனாலும் அவர் விரக்தியடைந்து வந்தார். எல்லாரும் தலைவர்களாகிவிட முடியாது என்பதைச் சுட்டிக் காட்டினேன். ''குடும்பத்தைப் பாதுகாப்பதும் உங்கள் கடமைதான்; உங்களுக்கு மிகவும் பிடித்தமான தேச சேவையை எனக்காகத் துறந்து விட்டால் அதுதான் உண்மையான தியாகம். அதுவன்றி அதையே பின்பற்றிச் சென்றால் அது முழுக்க முழுக்கச் சுயநலம்'' என்றெல்லாம் வாதாடிப் பார்த்தேன். அவர் கேட்கவில்லை. சுபாஷ்பாபு ஐரோப்பாவில் தங்கியிருந்தவரை வாளாவிருந்தவர், தலைவர் தாய்நாடு திரும்புகிற அன்றைக்கு வஞ்சகமாக என்னைப் பம்பாய்க்கு அழைத்துப் போனார். அங்கே வெள்ளையனின் குண்டாந்தடி என் கணவரின் முதுகைப் பதம் பார்த்தது. முதுகெலும்பு மீண்டும் முறிந்து அதனோடே செல்லும் நரம்புக் குழாய்கள் நசுங்கிச் சிதைந்து விட்டன. மரணத் தறுவாயில் அவர், ''தாரா! நாட்டுக்கு நான் தியாகி! உனக்கு நான் துரோகி! என்னை மன்னித்தேன் என்று வாய் திறந்து சொல்லு'' என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டார். அந்தக்

கி. ராஜேந்திரன்



கணத்தில், குடும்பப் பொறுப்பின்றித் தன்னலம் கருதித் தன் இச்சைப்படி செல்லுவதாக அவர் மீது குற்றம் சாட்டியது என்னுடைய சுயநலம்தான் என்பதை நன்கு உணர்ந்து கண்ணீர் பெருக்கினேன்.

### வடிவேலு :

உற்றார் உறவினர் யாரும் அருகில் இல்லாத சமயத்தில் சற்றும் எதிர்பாராத விதமாகக் கணவன் கண் மூடியதைக் கண்டு தாரா ஆவி துடிக்க அழுது அல்லலுற்ற தருணத்தில் அவளுக்குத் தேறுதல் கூறி என் தோள்களில் தாங்கினேன். கலாசாலையில் தங்கை பாருவும் தாராவும் இணை பிரியாத தோழிகளாக இழைந்து படித்த காலத்திலேயே தாராவை எனக்குத் தெரியும். அந்தப் பழக்கம்தான் இன்று வேறு ஒருவனுக்குச் சொந்தமான அவளுக்கு ஆறுதலளித்துச் சமாதானப்படுத்தத் தெம்பு அளித்தது. நன்றிப் பெருக்கோடு அவளும் என் ஆறுதல் மொழிகளை ஏற்றுக் கொண்டாள். தாராவைக் கான்பூரில் அவள் தகப்பனாரிடத்தில் ஒப்படைத்து விட்டுத் திரும்புகையில் மாயவரம் சந்திப்பில் அத்தான் சிங்காரமும் கலகக்காரச் சீமாச்சுவும் எதிர்ப்பட்டார்கள். கும்பகோணம் போய்க் கொண்டிருக்கிறார்கள் என்பதை அறிந்தேன். அவர்களுடைய நடையுடை பாவனைகள் சந்தேகத்தைக் கிளப்பவே சட்டென்று ரயிலின் கடைசிப் பெட்டியில் தொத்திக் கொண்டு அவர்களைப் பின் தொடர்ந்தேன். கும்பகோணத்தில் சாரங்கதரா நாடகம் பார்த்து விட்டு அதில் இளையராணியாக நடித்த சக்குபாயின் இல்லத்துக்கும் விஜயம் செய்யத் திட்டம் போட்டார் அத்தான் சிங்காரம். அவரை முந்திக் கொண்டு நான் சக்குவைக் காணச் சென்றேன். என் தங்கை பாரு கண்ணீர் விட்டு அழுகிறாற்போல நடந்து கொண்டாள் அவள் தலையைத் திருப்பிவைத்து விடுவதாய் மிரட்டினேன். அத்தானைக் காப்பாற்றி விட்ட பெருமையோடு சக்குபாயின் விழிச் சுழலில் விழுந்தேன் நான். தப்பி மீளமுடியாதவாறு சிக்கிக் கொண்டேன்.

### சக்குபாய் :

ஜமால் பாட்சாவின் திவ்வியமான யோசனை அது. என் கட்டுப்பிடியிலே கட்டுண்ட வடிவேலுவுக்குச் சிங்காரத்துக்கு உள்ளது போல் கால் கட்டு என்பதாக ஒன்றும் கிடையாது; 'மைனர்' பேர்வழி; ஏராளமான சொத்துள்ளவன்; அப்பாவுக்கு ஒரே பிள்ளை; பணத்தைத் தாராளமாக வாரி இறைக்கத் தயங்க மாட்டான் என்றெல்லாம் ஆசை காட்டினார் ஜமால். எனக்கும் சம்மதந்தான். பெயருக்கேற்ப வடிவேலு ஆஜானுபாகுவாக, எடுப்பான தோற்றம் கொண்டவராக வேறு இருந்தார். 'எதற்கு இந்த மானம் கெட்ட பிழைப்பு? சுகபோகத்துடன் சௌகரியமாக வாழலாமே' என்ற ஆவலுடன் கலியாணப் பேச்செடுத்ததும் 'சரி' என்றேன்.' ஆனால் என்ன ஏமாற்றம்? மருமகளென்று என்னை ஏற்க மறுத்தார் மூத்தையா; உற்றார் உறவினர் ஒதுக்கித் தள்ளினார்கள்; ஊரார் காறி உமிழ்ந்தார்கள். இந்த அவமானத்தைத் தாள முடியவில்லை எனக்கு. ஆகவே ஜமால் பாட்சாவின் உதவியுடன் சிங்கப்பூருக்குக் கப்பலேறி விட்டேன்.

### பொன்னம்பலம் :

அந்த நாடகக்காரியை இழுத்து வந்து கூத்தடித்த வடிவேலுவை ஊரிலே பெரிய மனிதன் என்கிற முறையிலே கண்டித்தேன் நான். ஆனால் அதையே எத்தனை நாட்களுக்கு, மாதங்களுக்குச் சொல்லிக் கொண்டிருப்பது? மறந்து மன்னிக்கிற இதயமும் மனிதனுக்கு வேண்டாமா? அவனை என் மகளுக்குக் கட்டிக் கொடுக்க வேண்டும்; பிறக்கப் போகிற என் பேரன் இரண்டு குடும்பங்களுக்கும் உள்ள குபேர சம்பத்தை ஒன்றாக இணைத்து ராஜா போல் ஆள வேண்டும் என்கிற ஆசையும் எனக்கு இல்லாமல் போகவில்லை. பாருக்குட்டியின் கல்லூரித் தோழி தாரா மூத்தையாவின் வீட்டுக்கு வந்து தங்கியிருந்தாள். பெரிய தியாகியுடைய மனைவியாகிய அவளுடைய வருகை, வடிவேலுவுடைய நடத்தையால் அந்தக் குடும்பம் இழந்து விட்டிருந்த கௌரவத்தை மீட்டுத் தந்திருந்தது. ஆகவே என் விருப்பம் நிறைவேற அந்த வகையில் தடையேதுமில்லை. செல்லத்தின் கல்யாணத்தை நடத்தி வைக்கத் தாராவின் தயவை நாடினேன் நான். அவளும் தன்னால் இயன்றதைச் செய்வதாய் வாக்களித்தாள். ஆனால் வடிவேலுவோ பட்டாளத்தில் சேருவதில் மிகவும் தீவிரமாக இருந்தான். "செல்லத்தை அவருக்குக் கொடுப்பதில் எனக்கு ஏன் சிரத்தை இல்லை என்பது இப்போது புரிகிறதா?" என்று தாரா கேட்டது ரொம்பவும் நியாயமாகத் தோன்றியது எனக்கு. ஆனால் சீமாச்சு இதற்கு வேறு ஒரு காரணத்தைக் கற்பித்தான். தாரா வடிவேலுவுடன் சேர்ந்து கொண்டு காதல் நாடகம் ஆடுவதாகத் தூஷித்தான். சீமாச்சுவை அதட்டி உருட்டி அடக்கிவைத்தேன். பள்ளியொன்றை ஆரம்பித்து, குழந்தைகளையெல்லாம் தாய் போலப் பராமரித்துப் பாடம் போதித்து வந்த தாரா, கிராம மக்களுக்கெல்லாம் தெய்வமாகவே விளங்கினாள். அவளைக் குறித்து சீமாச்சு கூறியது எதையுமே நான் நம்பவில்லை. சுபாஷ் பாபுவினால் ஏதோ ஓர் உள் நோக்கத்தோடு அனுப்பி வைக்கப்பட்டு அவள் வந்திருக்கிறாள் என்று நான் சந்தேகித்ததுதான் உண்மையாயிற்று. விரைவிலேயே அவளுக்கு விலங்கு பூட்டி அழைத்துப் போய் விட்டனர் போலீஸ்காரர்கள்.

### இன்ஸ்பெக்டர் துரைசாமி :

வடிவேலுவுடைய நெடு நாள் நண்பன் நான். அபலைப் பெண் ஒருத்தியைக் கெட்ட பெயர் சூழாமல் தடுக்க நான் உதவ வேண்டும் என்று அவன் கேட்டுக் கொண்டான். தாராவின் மீது அபாண்டப் பழி சுமத்தப்பட்டதால் அவள் மனமுடைந்து தேனூரை விட்டுக் கிளம்பிக் கான்பூர் போய்விட விரும்பினாளாம். ஆனால் அப்படி செய்தால் அவள் அபவாதத்துக்கு அஞ்சி ஓடியதாக ஆகிவிடுமாம். அவப் பெயர் அப்படியே நிலைத்து விடு

# ஆனந்தமான வாழ்க்கைக்கு




**காட்பரீஸ்**
**சாக்கலேட்...**

**மிட்டாய்**
**மட்டுமல்ல-**
**ஒரு**
**உணவும்கூட**



மாம். அனைவரும் போற்றுகிற விதத்தில் தியாகியாக அவன் வெளியேற என் ஒத்துழைப்பை நாடினான் வடிவேலு. பேதை ஒருத்திக்காக இரங்கினேன்; நண்பனின் வற்புறுத்தலுக்கு இசைந்தேன். கண் துடைப்புக்காகத் தாராவை ராஜாங்க விரோதமான காரியங்களில் இறங்கி யிருப்பதாகக் கூறிக் கைது செய்தேன். மாயவரத்துக்கு அழைத்து வந்து என் வீட்டில் ஒளிந்திருக்கச் செய்தேன். இரண்டு நாட்கள் கழித்து அவளைத் தேடி வந்த வடிவேலுவிடம் ஒரு நிபந்தனையையும் போட்டேன். யாருக்காக நான் கிராம மக்களின் கண்களில் மண்ணைத் தூவ முன்வந்தேனோ அவர்கள் அதற்கு நிஜமாகவே தகுதி உள்ளவர்களாக இருக்க வேண்டும்; அதாவது சிமாச்சுவுடைய கூற்றிலே சிறிதளவும் உண்மை இருக்கக் கூடாது என்றேன். இந்தக் கோரிக்கையை அவர்கள் ஒப்புக் கொண்டார்கள். ஒருவரை ஒருவர் விட்டுப் பிரிந்து இரண்டு போர் முனைகளுக்குச் செல்வதென்று முடிவு செய்தார்கள். உலக அரங்கிலே மூண்டிருந்த யுத்தத்தில் பங்கு கொள்ள வடிவேலு விரைந்தான். சுதந்திர இயக்கத்தில் முழுமூச்சுடன் இறங்கத் தாரா தீர்மானித்தாள். அவர்களுடைய காதலுக்கு இனி சோதனைக் காலமாம்! சொன்னார்கள்.



## அத்தியாயம் 1

## "ஸ்ரீதர்"

சிங்கப்பூர் துறைமுகத்தில் வடிவேலு பாரத நாட்டுக்குத் திரும்பவிருந்த ராணுவ வீரர்களுக்கிடையில் வளைய வந்துகொண்டிருந்தான். கப்பல் புறப்படுகிற நேரம் நெருங்கி விட்டதால் சிநேகிதர்களை ஆலிங்கனம் செய்துகொள்வதிலும் முதுகில் தட்டிக் கொடுப்பதிலும் கை குலுக்குவதிலுமாக அவர்கள் கொஞ்ச நஞ்சம் பாக்கி யிருந்த பொழுதைக் கழித்தார்கள். ஆயிற்று. இன்னும் பத்தே நிமிஷங்கள்தான். பின்னர் நாய் குரைப்பது போல் உத்தரவுகளைப் பிறப்பிப்பார்கள் ஜமேதார்கள். ஒவ்வொரு சிப்பாயும் தன் காலடியில் இப்போது இறக்கி வைத்திருக்கும் பெரிய மார்வாரி திண்டு போன்ற உருளையான மூட்டையை ஒரு 'தம்' கட்டித் தூக்கித் தோளுக்கு மேலாக எறிந்து முதுகிலே தாங்குவான். துப்பாக்கியை உடலோடு ஒட்டியது போல் செங்குத்தாகப் பிடித்துக் கொண்டு அவர்கள் வரிசையாக அணிவகுத்து நிற்பார்கள். தலைவன் மறுபடியும் கக்கப் போகிற கட்டளையை எதிர்பார்த்து அசையாதிருப்பார்கள். அதைச் செவியுற்றதும் எறும்புச் சாரிபோல் நடந்து சென்று கப்பலில் ஏறுவார்கள். மேல் தளத்தில் நின்று கரங்களை உயர்த்தி அசைப்பார்கள். 'ஹோ' வென்று அவர்கள் எழுப்பும் சத்தத்துக்கும் மேலாகக் கப்பல் 'கூ' வென்று அலறும் ஓசை கேட்கும். அப்புறம் அது மெல்ல நகரும், துறைமுகத்தை விட்டு விலகிச் செல்லும். அலைகடலின் மேல் ஆனந்தமாய் மிதக்கும். அதிர்ஷ்டக்காரர்கள்! இன்னும் சில தினங்களில் அவர்கள் தாய்நாடு சென்றடைந்து விடுவார்கள்!



அவர்களைச் சுமந்து செல்லக் காத்திருக்கும் கப்பலை ஆர்வத்தோடு பார்த்தான் வடிவேலு. அதன் ஒரு முனையில் பக்கவாட்டில் பிரம்மாண்டமான எழுத்துக்களில் எச்.எம்.ஐ.எஸ். ஸ்ரீதர் என்று எழுதப்பட்டிருந்தது.

நங்கூரம் பாய்ச்சி நின்ற அந்தக் கலத்தை நெருங்கினான் வடிவேலு. வீட்டில் வளரும் நாயையோ, பசுவையோ அன்போடு கொஞ்சுவது போல் இரும்பினாலான அதன் வயிற்றைத் தடவிக் கொடுத்தான்.











மலாயாவுக்கு வந்து சேர்ந்த ஒரு மாதத்துக்குள்ளாகவே வடிவேலு இந்திய மண்ணை என்று மிதிக்கப் போகிறோமோ என்று ஏங்கத் தொடங்கி விட்டான். அதனால்தான் அவனுக்கு இப்போது அந்தக் கப்பல் மீதும், அதில் பிரயாணம் செய்யப் போகிறவர்கள் மீதும் பொறாமை. இந்த மனப் புகைச்சலோடு அலாதியான ஒரு பாசமும் கலந்திருந்தது. தன்னால் இந்தியாவுக்கு இப்போதைக்குப் போக முடியாது. அந்தப் பாக்கியத்தைப் பெற்றுள்ள மற்றவர்களையாவது கண் குளிரப் பார்க்கலாமே? அவர்களுடன் கரம் கோத்து மகிழலாமே? இந்த எண்ணத்துடன் அவன் பலரிடமும் வலியச் சென்று தன்னைத் தானே அறிமுகப் படுத்திக் கொண்டான்.

இவ்வளவுக்குமிடையில் அவன் கண்கள் வெறுமனே இங்குமங்குமாய்ச் சல்லடை போட்டுச் சலித்தன. 'இன்னும் ஏழெட்டு நிமிஷங்கள் தானே இருக்கின்றன? அதற்குள் அவனைச் சந்தித்தால்தான் உண்டு. ஒருவேளை அவனை இன்று பார்க்க முடியாமலே போய் விடுமோ?'

வடிவேலு கால்சராய்ப் பைக்குள் கையை விட்டுத் துழாவி சிகரெட் பாக்கெட்டை எடுத்தான். அதனுள்ளிருந்து ஒன்றை உருவி எடுத்து உதடுகளுக்கிடையில் செருகினான். ஏதோ நினைத்துக் கொண்டவனாகக் கையிலிருந்த சிகரெட் பெட்டியை வைத்த கண் வாங்காமல் உற்று நோக்கினான். அவன் அதரங்கள் மென்னகையில் நீண்டன. பட்டாளத்திலே சேர்ந்த பிறகு ஏற்பட்டிருந்த புதிய பழக்கம் அது. தேனூரிலுள்ளோர் இப்போது என்னை இதே கோலத்தில் காண முடியுமானால் என்ன சொல்லுவார்கள்? 'என்ன தம்பி! ரயில் இஞ்சின் போல் புகையைக் கக்க ஆரம்பிச்சுட்டே?' என்பார் வெங்கிட்டு வாத்தியார் வேடிக்கையாக. 'இந்தக் கண்ணறாவியெல்லாம் கத்திக்கிடுவான்னு எனக்கு அன்றைக்கே தெரியும். அதனால்தான் வேண்டாம் வேண்டாம் என்று அடிச்சுக்கிட்டேன்!' என்று இரைவார் முத்தையா, ஏதோ பெரிய அக்கிரமம் நடந்து விட்டாற்போல. என் தோற்றத்தைக் கண்டு பூரித்துப் போய்விடுவாளில்லையா பாரு?

பொன்னம்பலம்? — அவரென்ன கூறுவார்? 'இவன் பொடிப் பயலா இருக்கிறப்போ, பள்ளிக்கூடத்துக்குப் போடான்னு தினம் உதை கொடுத்து அனுப்புவார் முத்தையா. இவன் டவுனுக்குப் போய்ச் சேருவதற்குள்ளாற உண்டி வில் ஒண்ணு தயாரிச்சுக்கிடுவான். இத்தனை கூழாங் கற்களைப் பொறுக்கி மடியிலே கட்டிக்கிடுவான். ஜன்னல் வழியே குறி பார்த்து ஸ்கூல் கடிகாரத்தை அடிச்சு உடைச்சுடுவான். அப்பவே, ஒருநாள் இல்லையானால் ஒருநாள் இவன் பட்டாளத்திலே சேருவான்னு நான் தீர்மானிச்சுட்டேன்!' வடிவேலு தனக்குள் சிரித்தபடியே சிகரெட்டைப் பற்ற வைக்க நெருப்புப் பெட்டியைத் தேடினான். அந்த முயற்சியில் தன் ஆடையில் இருந்த நான்கு பைகளையும் தட்டிப் பார்த்துக் கொண்டிருந்தபோது அவனுக்குப் பின்னாலிருந்து ஒரு கரம் நீண்டது. அதன் விரல்களுக்கிடையில் பிடித்திருந்த 'லைட்டர்' எரிந்து கொண்டிருந்தது. இருந்த இடத்தை விட்டு அசையாமல், சிகரெட்டைக் கொளுத்திக் கொண்டான் வடிவேலு. ''தாங்ஸ்.''

''தாங்ஸ், என்னடா தாங்ஸ்? நன்றி என்று சொல்லேன்!''

''சிவராமா!'' அப்படியே திரும்பி நண்பனைக் கட்டி அணைத்துக் கொண் டான் வடிவேலு. ''சிவராமா! உன் னைப் பார்க்கவே முடியாமல் போய் விடுமோ என்று தவித்துக் கொண்டிருந் தேன் நான்!''

''அரை மணி நேரமாக இங்கேயே தானே நான் சுற்றித் திரிந்து கொண் டிருக்கிறேன்?''

''சிவராமா! எங்கு பார்த்தாலும் ஒரே தலைகள் மயம். நான் யாரைப் போய்க் கேட்பது? எப்படித் தேடுவது?''

''வாஸ்தவம்தான். நீ துறைமுகத் துக்கு வருவாய் என்று நானும் எதிர் பார்க்கவில்லை.''

''உன்னை வழியனுப்பி வைப்பதை விட எனக்கு வேறு என்ன வேலை!''

''ஏண்டா, தடிமாடு! நான் இங்கே யிருந்து தொலைந்து போகிறேன் என் ஹல் உனக்கு அத்தனை சந்தோஷமா? கர்ம சிரத்தையாக வந்து விட்டான் விடை கொடுத்து அனுப்ப!''

''அடேடே! நான் அந்த அர்த்தத் தில் சொல்லவில்லை அப்பா!''

''வேறு எந்த அர்த்தத்தில் சொன் ஞய்? ஓகோ! நீ என்னிடம் கொடுத் திருக்கும் பொருள்களெல்லாம் பத்திர மாய் அவரவர்கள் கைக்குப் போய்ச் சேர வேண்டுமே என்ற கவலையில் ஓடி வந்தாயாக்கும்!''

''உன்னை மறுபடியும் என்றைக்குப் பார்க்கப் போகிறேனே? கடைசிச் சந் தர்ப்பம் இல்லையா இது? சிவராமா! நான் கூறியதை யெல்லாம் மறந்துவிட மாட்டாயே?''

''நீதான் ஒன்று பாக்கியில்லாமல் என்னை உருப்போட வைத்திருக்கிறாயே? பள்ளிக்கூடத்தில்கூட நான் இத்தனை கஷ்டப்பட்டதில்லை ! இன்னும் ஒரு தடவை ஒப்பிக்கட்டுமா?''

''உம்!'' என்று தலையாட்டினான் வடி வேலு.

''கான்பூரில் நீ எழுதிக் கொடுத் திருக்கும் விலாசத்தில்—''

''அந்தச் சீட்டைத் தொலைத்து விட் டுத் திண்டாடாதே! விலாசத்தையும் மனப்பாடம் செய்து விடு!''

''பரவாயில்லை, அது எங்கேயும் ஓடிப் போய் விடாது!''

''கப்பலில் போகும்போது என்ன கிழிக்கப் போகிறாயாம்?''

''நீ விலாசம் எழுதிக் கொடுத்திருக் கும் காகிதத்தை வேணுமானால் சுக்கு நூறாகக் கிழித்துக் கடலில் எறிந்து விடுகிறேன்!''

''விளையாடாதே, சிவராமா! முன் னெச்சரிக்கையாக ஒன்றுக்குப் பத்துத் தரம் அதைப் படித்து மனத்தில் பதிய வைத்துக் கொள்!''

''அப்படியே ஆகட்டும்; விலா சத்தை விட்டு விட்டு அடுத்த விஷயத் துக்குப் போகலாமோ?''

''உம்!''

''அந்த வீட்டை அடைந்ததும் தாரா என்று கேட்க வேண்டும். வேறு யாரிடமும் எதுவும் பேசக் கூடாது. அவளைத் தனிமையில் அழைத்துப்போய், நீ என்னிடம் அளித்திருக்கும் கவரை அவளிடம் ஒப்படைக்க வேண்டும். அதை அவள் பிரித்துப் பார்க்கு முன் னரே, 'சோதனையில் வெற்றி பெற இது உதவட்டும்' என்று சொல்லி வடி வேலு அதைக் கொடுத்ததாகத் தெரி யப்படுத்த வேண்டும். ஆமாம், அந்த உறைக்குள்ளே என்ன இருக்கிறது?''

''ஏன் அவசியம் தெரிந்து கொண்டு தானக வேண்டுமோ?''

''ராணுவ உடையில் உன் போட்டோ!''

''அடேடே! எப்படிக் கண்டுபிடித் தாய்?''

''இதென்ன சிரமம்? கவரை உடைத் துப் பார்த்தேன்.''

''சேச்சே! ஆனாலும் சுத்த மோசம் நீ.....!''

''மோசம் செய்யாமலிருக்கிறாயா என்னை என்றுதான் ஆராய்ந்தேன். இந்த யுத்த காலத்தில் நான் எதைக் கொண்டு போகிறேன் என்பதில் கண் ணும் கருத்தும் இருக்க வேண்டும் ! நீ பாட்டுக்கு ராணுவ ரகசியங்களை எழுதி வைத்து என் மூலம் எதிரியின் ஒற்றர் களுக்கு அனுப்பினாயானால் தூக்குத் தண் டனை பெறப் போவது நான்தானே?''

''போதும் வாயை மூடு! எவனா வது கேட்டு வைக்க அது விபரீதமாகி விடப் போகிறது.''

''தமிழில்தானே பேசுகிறோம்?''

''மலாயாவில் தமிழர்களுக்கும் தமிழ் அறிந்தவர்களுக்கும் என்ன குறைச்சல்? அவர்களில் எத்தனை பேர் களை வெள்ளைக்காரன் வேவு பார்ப்பதற் கென்று அமர்த்தியிருக்கிறானே? யார் கண்டார்கள் ? இங்கிலீஷ்காரனுக்கு இடுப்புப் பிடிக்கிறவன் எவனாவது நாம் ஏதோ விளையாட்டாகப் பேசுகிறோம் என்பது புரியாமல் புகார் பண்ணி வைத் தானானால் ஆபத்தாக முடியும்!''

அக்கம் பக்கம் பார்த்து விட்டு அவர்கள் மீண்டும் அளவளாவத் தொடங்கினார்கள்.

''அது சரி, வடிவேலு! உனக்காக நான் யாரிடம் தூது போகிறேனே, அவள் அழகாயிருப்பாளா?''



''அழகு தாராவைப் போலிருக்குமா என்று கேள். அவள் கால் தூசுக்குச் சமமாகாது என்று சுலபமாகக் கூறி விடலாம்!''

''நீ இந்தியாவுக்கு வந்து சேரு முன்னர் அவள் மனத்தைக் கலைத்து, நான் உன்னிடமிருந்து அவளைத் திருடிக் கொண்டு விடுகிறேன், பார்!''

''உன்னைப் போன்ற அசடுகளை அவள் லட்சியம் செய்யவே மாட்டாள்!''

''அடேயப்பா! நீ ஒருத்தன்தான் ஏதோ காதல் நிபுணன் மாதிரி பெருமையடித்துக் கொள்கிறாயே? சிங்கப்பூரில் தங்கியிருந்த ஏழெட்டு மாதங்களுக்குள்ளாக எத்தனை பெண்களை நான் காதலித்து விட்டேன், எண்ணிச் சொல்லட்டுமா? விரலைச் சொடுக்கினால் போதும், காதல் என்னிடம் துள்ளிக் குதித்துக் கொண்டு ஓடி வரும், நாய்க் குட்டியைப் போல!''

குபீரென்று சிரித்தான் வடிவேலு. ''அப்பனே! கூப்பிட்ட குரலுக்குக் கை கொடுக்கும் காதலை நீ குறிப்பிடுகிறாய்! காதல் என்ற சொல்லை எப்படி அர்த்தம் செய்து கொள்வது என்பதில் நம்மிடையே கருத்து வேற்றுமை நிறைய இருக்கிறது. அது எப்படியோ போகட்டும்; சீக்கிரம் சொல்லு, மேலே என்ன செய்ய வேண்டும் நீ?''

''கான்பூரிலிருந்து கிளம்பி மதுரையில் என் வீட்டுக்குப் போவதற்கு முன்னால் முதலில் மாயவரத்தில் இறங்கித் தேனூரை அடைய வேண்டும். அங்கே உன் மருமானுக்கு ரயில் வண்டியைப் பரிசாகத் தர வேண்டும்; அக்காளுக்கு 'பவுடர் பப்'பைக் கொடுக்க வேண்டும்; அத்தானின் கரத்தில் கைக்கடிகாரத்தைக் கட்டி விட வேண்டும் அம்மாவுக்கும் அப்பாவுக்கும்.... நீ கொடுத்திருக்கும் சாமான்களே என் சாக்கு மூட்டையில் பாதியிடத்தை நிரப்பிக் கொண்டு விட்டன. கொஞ்சமாவது யோசனை வேண்டாம் உனக்கு?''

''ஒரு சமாசாரத்தை மறந்து விட்டாயே? செல்லத்துக்குக் கல்யாணம் ஆகி விட்டதா என்று விசாரித்துக் கடிதாக போட வேண்டும்!''

''ஆகட்டுமய்யா, ஆகட்டும்! இவ்வளவெல்லாம் காரியங்களை என் தலையில் கட்டுகிறாயே? ஆரம்பத்தில் திட்டமிட்டிருந்தபடி நான் ஆஸ்திரேலியாவுக்குப் போக இப்போது கப்பலேறிக் கொண்டிருந்தால் என்ன செய்வாய்?''

''ஆமாம், சிவராமா! இந்தியாவுக்குத் துருப்புக்களைத் திருப்பி அனுப்புவதில்லை என்று மேலிடத்தில் முடிவாகியிருந்தால் நான் என்ன செய்திருக்கப் போகிறேன்? என்னதான் கடிதங்கள் எழுதினாலும், என்னுடன் ஒட்டி உறவாடிய நண்பனை நேரில் காணும்போது பெற்றவர்களுக்கு உண்டாகும் திருப்திக்கு ஈடாகுமா? புண்ணியவான்கள்! மகாராஜர்களாயிருக்கட்டும்!'' என்று தனக்குச் சாதகமான தீர்மானத்துக்கு வந்த ஆங்கிலேய அதிகாரிகளை வாழ்த்தினான் வடிவேலு.

''மகாராஜாக்களைப் போல் தான் அவர்கள் ஏற்கனவே இருந்து வருகிறார்கள்; இன்னும் நீ வேறு ஆசீர்வாதம் செய்ய வேண்டுமாக்கும்? ஒவ்வொரு ஐரோப்பிய சிப்பாயும் நம்மைக் காட்டிலும் மூன்று மடங்கு அதிகமாகச் சம்பளம் வாங்குகிறானே! காரணம் என் தோல் கருப்பு அவன் தோல் வெளுப்பு! சாப்பாடு, இருப்பிடம், நடத்தப்படும் விதம் என்று எதை எடுத்துக் கொண்டாலும் வெள்ளையனுக்கு விசேஷச் சலுகைகள்தான்! மகாராஜனாய்த்தான் இருக்கிறான்....!''

''அப்பனே! நீ ரொம்பவும் தீவிரவாதியாகி விட்டாய்! கொஞ்சம் தணிந்து போ!''

''வடிவேலு! உனக்கு இன்னும் சரியாக இங்கே அனுபவம் ஏற்பட வில்லை. நிற வேற்றுமையினால் போதுமான அவமானத்தை நீ அடையவில்லை. வெள்ளைக்காரன் குடித்துவிட்டுக் கூத்தாடுகிற கிளப்புக்குள்ளே, அவன் வளர்த்து வருகிற நாய் செல்லலாம்! அது கருப்பு நாயாக இருந்தாலும் பரவாயில்லை! தாராளமாகப் போகலாம்! ஆனால் நாம் நுழையக் கூடாது! ஏனென்றால் நாம் கருப்பு நாய்களல்ல; கருப்பு மனிதர்கள்! வெள்ளையன் உட்கார்ந்திருக்கிற ரயில் பெட்டிக்குள் நாம் ஏறக் கூடாது. எஞ்சினிலிருந்து கிளம்புகிற புகையையும் கரியையும் அவன் சகிப்பான்; ஆனால் கருப்பு மனிதனுடன் பிரயாணம் செய்ய அவனுக்கு அருவருப்பாக இருக்கிறது! அவன் எதிரே நாம் கூனிக் குறுகிக் கூசி ஒதுங்க வேண்டும்; ஏனென்றால், நீ சொன்னது போல் அவர்கள் புண்ணியவான்கள்!''



அவன் வாயைப் பொத்தினான் வடிவேலு. ''போதும்! ஆவேசமே வந்து விட்டதே உனக்கு? ''

நண்பனின் கரத்தை விலக்கிவிட்டுத் தொடர்ந்தான் சிவராமன்: ''ஜப்பானியத் தாக்குதல் என்று ஏற்பட்டால் மலாயாவாழ் இந்தியர்களைக் காப்பாற்றுவதற்காக என்றுதானே திட்டவட்டமாகச் சொல்லி எங்களை அழைத்து வந்தார்கள்?''

''ஆமாம். எங்களையும் அதே நோக்கத்துடன்தான் அனுப்பி வைத்திருக்கிறார்கள் இங்கே!''

''நீ வந்ததனால்தான் எனக்கு விமோசனம்! நீயும் உன்னோடு நூற்றுக்கணக்கான சிப்பாய்களும் இங்கே வந்து சேர்ந்ததும் பல மாதங்களாக மலாயாவில் தங்கியிருக்கும் என்போன்றவர்களை இங்கிருந்து கிளப்ப எண்ணியது நியாயம்; அதை மறுக்கவில்லை. குறை கூறவில்லை. ஆனால் ஆஸ்திரேலியாவுக்கு எங்களை அனுப்புவானேன்?''

''இதென்ன கேள்வி? ராணுவத்தில் சேர்ந்த பிறகு ஏன் எதற்கு என்றெல்லாம் கேட்டுக் கொண்டிருக்கலாமா? கண்களை மூடியபடி அதிகாரிகளின் கட்டளைகளை நிறைவேற்றிக் கொண்டே போகவேண்டியதுதான் சிப்பாய்களின் கடமை!''

''ஞானச் சூன்யங்களாக இருந்தால் அப்படி செய்வார்கள். ஆனால் பாமர இந்தியனுக்கு, செயல் திறமையுடன் பகுத்தறிவும் சாமர்த்தியமும் இருந்து தொலைக்கின்றன. மானம் மரியாதையைப் பெரிதாக எண்ணி இழுவெடுக்கிறான். எதையும் அலசி ஆராய்வதில் முனைகிறான்; என்ன செய்ய?''

''அடிக்கடி அறிவை முடுக்கி விட்டதில் என்ன அனர்த்தத்தைக் கண்டு விட்டாய், அவர்கள் போக்கில்?''

''ஆஸ்திரேலியாவுக்கு எங்களை ஏற்றுமதி செய்வதில் ஏமாற்று வித்தையைத் தவிர வேறெதுவும் இருப்பதாய்த் தோன்றவில்லை. இங்கே உள்ள இந்தியர்களைப் பாதுகாக்கும் வேலை இந்தியச் சிப்பாய்களுக்கு இல்லையானால் இந்தியாவுக்கே எங்களைக் கொண்டு போய் விட்டு விட வேண்டியதுதானே?''

பிறந்த மண்ணை மீண்டும் போய்த் தரிசிக்க வேண்டும் என்கிற ஆர்வத்தில் மேலிடத்துக் கட்டளையை மீற ஏதோ ஒரு நொண்டிச் சமாதானத்தைச் சிவராமன் கற்பனை செய்து கொண்டதாகத்தான் நினைத்தான் வடிவேலு. ''சிவராமா! அதிகாரிகளின் மனமாற்றத்தை எப்படி உருவாக்கினீர்கள்?'' என்று அவனுடன் ஒத்துப் போவது போலக் கேட்டான்.

''பிரமாதமாக ஒன்றையும் செய்து விடவில்லை நாங்கள். 'பரேடு'க்கு அனைவரும் ஒருமுகமாகத் தாமதித்து வருவோம்; எல்லாரும் முன்கூட்டியே பேசி வைத்துக்கொண்டு ஒருநாள் இரவு சாப்பாட்டுக்குச் சாப்பிடப் போகாமலே இருந்து விடுவோம்; வீணாகிப் போன அத்தனை உணவையும் சாக்கடையில் கொட்ட நேரிடும்; யாரேனும் தட்டிக் கேட்டால் ஆஸ்திரேலியாவுக்கு எங்களை விரட்டி அடிப்பது அக்கிரமம் என்பது போல் எதையாவது முணுமுணுத்துக் கொண் டிருப்போம். இது போன்ற சிறு சிறு சலசலப்புக்கள்.

''யுத்த காலத்தில் ஒரு பட்டாளத்தில் இத்தகைய அதிருப்தி நிலவினால் அது ராணுவத்தின் மற்ற பகுதிகளுக்கும் பரவ எத்தனை காலமாகும்? இறுதியில் அது எதில் கொண்டு போய் விடும் என்பதெல்லாம் அந்த ஆங்கிலேயக் குள்ளநரிகளுக்கா தெரியாது? வழிக்கு வந்தார்கள். அந்தத் தீவுக் கண்டத்துக்குப் போகும் கண்டத்துக்கு உட்பட விரும்பாதவர்கள் இந்தியாவுக்கே திரும்பலாம் என்று அறிவித்தார்கள்!''

''அட்டேன்ன்ன்....ஷன்!'' — அதிகார ஆணவத் தொனியில் ஒரு கட்டளை பிறந்தது.

''போய் வருகிறேன், வடிவேலு!'' என்றான் சிவராமன்.

''கல்கத்தாவில் கப்பல் கரை தட்டியதும் நேராகக் கான்பூர்! ஞாபகமிருக்கட்டும்! லீவுதானே உனக்கு?''

''ஆமாம். இரண்டு மாதங்களுக்கு எழுதிக் கொடுத்திருக்கிறேன். கவலைப்படாதே, வடிவேலு! நான் கவனித்துக் கொள்கிறேன்!'' என்று வாக்களித்தான் சிவராமன். ''வரட்டுமா?''

தன் சகாக்களுடன் அவன் போய் நின்று கொண்டதையும் பின்னர் வரிசைக்கிரமமாக அவர்கள் கப்பலில் ஏறியதையும் பொறுத்திருந்து பார்த்தான் வடிவேலு. எச். எம். ஐ. எஸ். ஸ்ரீதரின் மேல் தளத்தில் குழுமியிருந்த நூற்றுக்கணக்கானோருக்கு இடையில் அவன் ஒன்றி விட்டான். அந்தக் கும்பலில் நண்பனின் முகத்தை அடையாளம் கண்டு கொள்வது அசாத்தியம் என்பதால் துறைமுகத்தை விட்டு வெளியே வந்தான் வடிவேலு.

இன்னும் சற்று நேரத்தில் பாரத நாட்டுக்குப் பயணமான அந்த நூற்றுக்கணக்கான இந்திய வீரர்கள் ஆழ்கடலுக்குள் அமிழ்ந்து அங்கே சுழன்று வரும் சுறு மீன்களுக்கு ஆகாரமாகப் போகிறார்கள் என்பது வடிவேலுவுக்கு அப்போது தெரியாது. (தொடரும்)

# ரூ.5,395 பரிசுகளாக வெற்றி பெறுங்கள் 'ஆஸ்ப்ரோ' திறமைப் போட்டி

## முதற்பரிசு:



12 வருட தேசிய திட்ட சேமிப்பு பத்திரம். தற்போதைய மதிப்பு ரூ.2,000. 12 வருடங்களுக்குப் பின் ரூ.3,300.

## இரண்டாவதுபரிசு:



பா.9 ரேடியோ மதிப்பு
மதிப், ரூ 865.00

## மூன்றாவதுபரிசு:



உஷா தையல் மிஷின் மதிப்பு ரூ 530.00

## தகுதிப்பரிசு:



50 பார்க்கர் பால்பாயிண்ட் பேனாக்கள், மதிப்பு ஒவ்வொன்றும் ரூ 14.00

**இந்த கண்ணாடி ஜாடியில் எவ்வளவு 'ஆஸ்ப்ரோ' வில்லைகள் அடங்கும் என்பதைக் கணக்கிடுங்கள்!**

ஜாடியின் பரிமாணங்கள்:–
26 செ.மீ. x 52 செ.மீ.
நான்கு 'ஆஸ்ப்ரோ' வில்லைகள் கொண்ட ஒவ்வொரு பட்டையின் பரிமாணங்கள்:
13 செ.மீ. x 3·9 செ.மீ.



அருகாமையிலிருக்கும் உங்கள் ஆஸ்ப்ரோ வியாபாரியிடம் எல்லா விபரங்களும், பிரவேசக் கூப்பன்களும் பெற்றுக்கொள்ளவும்.




**தலைவலி, ஜுரம், ஜலதோஷம் மற்றும் ப்ளூவிற்கு 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள் - மீண்டும் நிச்சயமாக சுகம் பெறுங்கள்**

ஒரு நிக்கோலஸ் N தயாரிப்பு.

தரத்திற்கும் தூய்மைக்கும் நிக்கலஸ் பெறும் உத்தரவாதம்.

L.G.190 TML

# ஓடி விளையாடு பாப்பா



குழந்தை உலகம் எப்படியெல்லாம் விளையாடிக் களித்து மகிழ வேண்டும் என்று பாடியிருக்கிறார் பாரதியார். குழந்தைகள், உலகின் எந்தப் பகுதியில் இருந்தாலும் அங்கு விளையாட்டு உண்டு. இந்தப் பகுதியில் உங்களுக்கு உலகத்துக் குழந்தைகளின் விளையாட்டுக்களை யெல்லாம் ஒவ்வொன்றாகச் சொல்லப் போகிறேன்.

ஆப்பிரிக்கா தேசத்து அம்பிகள் விளையாடும் விளையாட்டுக்களில் சிலவற்றைக் கூறுகிறேன். விளையாடும் குழந்தைகள் இரண்டு கட்சிகளாகப் பிரிந்து கொள்ளுவார்கள். கட்சிக்கு ஐந்திலிருந்து ஒன்பதுபேர் வரை இருக்கலாம். பதினைந்திலிருந்து இருபது அடி இடைவெளி விட்டு இரு கட்சிக்காரர்களும் எதிரும் புதிருமாக மண்டியிட்டு அமருவார்கள்! ஒவ்வொருவரின் முன்னாலும் ஒரு டப்பாவோ, பாட்டிலோ இருக்கும். ஒவ்வொருவரிடமும் ஒரு பந்துமிருக்கும்.

சமிக்ஞை கொடுத்ததும் ஒவ்வொருவரும் தங்கள் முன்னுள்ள எதிர்க்கட்சிக்காரரின் பாட்டிலை நோக்கிப் பந்தை வேகமாக உருட்டி அதைக் கீழே தள்ள முயற்சி செய்ய வேண்டும். அதேபோல எதிர்க் கட்சிக்காரரும் செய்வார்கள். அவர்கள் உருட்டிய பந்து இங்கு வந்ததும் அதை எடுத்து மறுபடி முயற்சி செய்ய வேண்டும். ஒரு கட்சியின் பாட்டில்களெல்லாம் உருளும் வரை இப்படிப் பந்தை உருட்ட வேண்டும். எந்தக் கட்சியின் பாட்டில்களெல்லாம் கவிழ்க்கப்பட்டனவோ அந்தக் கட்சிக்காரர்கள் இருபது முப்பதடி தூரத்திலுள்ள 'கோலை' நோக்கி ஓடுவார்கள். எதிர்க் கட்சிக்காரர்கள் அவர்களைக் கோலுக்குப் போகவிடாமல் துரத்துவார்கள். பிடிபட்டவர்களை (போலியாக) நையப் புடைப்பார்கள். ஆகவே அவர்களிடம் அகப்படாமல் குறியிடத்தைத் தொட்டு விட வேண்டும். இவ்விளையாட்டுக்கு முலாம்பில்வா (Mulambilwa) என்று பெயர்.

## முயன்றால் முடியாததுண்டோ ?

இங்கு ஒன்பது கட்டங்களில் மூன்றில் மட்டும் எண்கள் உள்ளன. மற்ற ஆறு வீடுகளிலும் பொருத்தமான ஆறு எண்களை அமைக்க வேண்டும். அதன் பெருக்குத் தொகையிலிருந்து மேலிருந்து கீழாக இடமிருந்து வலமாகக் குறுக்கும் நெடுக்குமாக எப்படிப் பெருக்கினாலும் விடை ஆயிரம் வரவேண்டும். 1-லிருந்து 100 முடிய எந்த எண்ணையும் அந்த ஆறு கட்டங்களில் எழுதலாம்.

| | | |
|---|---|---|
| 50 | | |
| | 10 | |
| | | 2 |



? ? ? ?

1 2 3 4

மேலேயுள்ளது நம்முடைய புழக்கத்திலுள்ள நயாபைசா நாணயங்கள்தான். இவைகளைப் பார்க்காமல், ஸ்பரிசிக்காமல் இவை என்ன மதிப்புடையவை, அவைகள் எந்த வரிசையில் வைக்கப்பட்டிருக்கின்றன என்பதை இங்குள்ள குறிப்புக்களிலிருந்து மட்டும் கண்டு பிடித்துச் சொல்ல வேண்டும். ரெடியா? வரிசையின் முதலிலுள்ள நாணயம் 3, 4 இவைகளின் மதிப்பில் மூன்றில் ஒரு பாகம். நான்காவது நாணயம் இரண்டாவதில், ஐந்தில் ஒரு பாகம். 3,4 நாணயங்களின் கூட்டுத் தொகை முதல் நாணயத்தின் மதிப்பில் 5-ல் மூன்று பாகம் எங்கே, உங்கள் முன்னால் நான் வைத்துள்ள நாணயங்களின் மதிப்பைச் சொல்லுங்கள். பார்க்கலாம்.''

''இதோ உங்கள் திறமைக்கு இன்னொரு சோதனை'' என்று சவால் விடுகிறான் ரமணி. ''இங்குள்ள படத்தில் வெளி வட்டத்திலுள்ள காலி வளையங்களுக்குள் — ஐந்தின் பெருக்குத் தொகையாகத் தொடர்ச்சியாக — சில எண்களை எழுத வேண்டும். ஒரே நேர்கோட்டிலுள்ள எந்த ஐந்து வளையங்களின் கூட்டுத் தொகையும் 340 வரும்படியாக இருக்க வேண்டும். எத்தனை விரைவாக, காகிதம், பென்சிலின் உதவியில்லாமல் எண்களை — அமைக்கிறீர்களோ அவ்வளவுக்கு நீங்கள் திறமைசாலிகள். அம்புக் குறியிட்ட வட்டத்திலிருந்து பிரதட்சிணமாக எண்களை எழுதுங்கள். மறக்க வேண்டாம் கூட்டுத் தொகை 340.''




(விடைகள் அடுத்த இதழில்)





## பனிப்பிரதேசக் காலணிகள்

ஆற்று மணலில் நடந்திருக்கிறீர்களா? கடற்கரை மணலில் ஓடிப் பிடித்து விளையாடிய பழக்கமுண்டா உங்களுக்கு? அப்படியானால் உறுதியான தரையில் நடப்பதற்கும் மணலில் செல்லுவதற்கும் உங்களுக்கு வித்தியாசம் தெரிந்திருக்கும். மணலில் கால் புதையும். வேகமாக நடக்கவோ ஓடவோ முடியாது. கண்ணுக் கெட்டிய தூரம் வரை ஒரே மணல் வெளியாக உள்ள ஸஹாரா பாலைவனத்தைக் கடக்கவேண்டுமென்று வைத்துக் கொள்ளுங்கள். அது எத்தனை பெரிய காரியம்?

பாலைவனங்களைப் போலத்தான் பனிப் பிரதேசங்களிலும். மணலைப் போல, பொடியான பனித்தூள் மூடிய இந்தப் பிரதேசங்களிலும் சுலபமாக நடக்க முடியாது. உடலின் பளுவால் கால்கள் புதைந்து கொள்ளும்.

இன்றைக்கு மனிதன் பாலைவனத்தையும் பனிப் பிரதேசத்தையும் சுலபமாகக் கடக்க வழி கண்டுபிடித்து வெற்றி கண்டு விட்டான். எப்படி? இந்த வெற்றிக்கு வழி கோலியது எது? கேவலம் பிராணிகள். முயலும் எலியும் ஒட்டகமும்தான். மெத்தென்ற அகலமான பாதங்கள் ஒட்டகங்களுக்கு இருப்பதால் பயங்கரமான மணல் வெளியை இவை சுலபமாகக் கடக்கின்றன என்பதைக் கண்டான் மனிதன். பாலைவன எலிக்கு-ஜெர்போ ரோமம் அடர்ந்த பெரிய பாதங்கள் இருப்பதால் அது மணலில் அழுந்தி விடுவதில்லை. பின்னங் கால்களை அழுத்தித் தாவிச் செல்லவும் அந்தக் கால்களின் அமைப்பு உதவியாக இருக்கிறது என்பதைக் கண்டான் மனிதன். அந்த அடிப்படையில் பாலைவனப் பிரயாணத்துக்கென்றே பெரியதும் குறைவான காற்றின் அழுத்தமும் கொண்ட சக்கரங்களை உடைய மோட்டார்களைத் தயாரித்து விட்டான்.

பனிப் பிரதேசத்தில் வாழும் ஒருவகை முயல்களுக்குப் பின்னங்கால்கள் மிகப் பெரியதாக, அகலமாக, ரோமம் அடர்ந்து இருப்பது அதைப் பனிக்குள் அழுந்தி விடாமல் காப்பாற்றி லாகவமாக ஓடியாடித் திரிய உதவுகிறது. இன்று பனிப் பிரதேசத்தில் பிரயாணஞ் செய்யப் பல வழிவகைகளை மனிதன் கண்டுபிடித்திருந்தாலும் ஆதியில் இந்த முயலின் கால்களைப் பார்த்துத் தான் மனிதன் பனிப் பாதுகைகளைத் தயாரித்தான்.

### சின்ன விஷயம்தான், ஆனால்...



1. நமக்குத் தேவையான போது இதை வீசி எறிவோம். வேண்டாத போது உள்ளே எடுத்து வைத்துக்கொள்ளுவோம். அதுஎன்ன?

2. ஒரு குட்டி மீனும் ஒரு பெரிய மீனும் சந்தித்துக் கொண்டன. அப்போது பெரிய மீன், குட்டிமீனிடம் என்ன சொல்லியிருக்கும்?

3. கிட்டு தன் படுக்கை அறையில் கட்டிலின் அருகே தனது சைக்கிளையும் வைத்துக் கொண்டு தூங்கினான். ஏன்?

4. இது நம் தலைக்கு மேலே இருக்கும் போது நமக்கு ரொம்பத் திருப்தியாக இருக்கும். அது என்ன?

5. கெட்டிக்காரன் கிட்டு. எந்தக் கேள்வி கேட்டாலும் 'டக் டக்கென்று' பதில் சொல்லுவான். ஆனால் ஒரு சமயத்தில் மட்டும் அவனால் பதில் சொல்ல முடியாது. எப்போது?





6. இது கதவின் ஊடே போகும். ஆனால் வெளியேயும் போகாது, உள்ளேயும் வராது.

7. ஆயிரம் ஊசி உண்டு, ஆனால் தைக்க முடியாது. அது என்ன?

8. கிட்டு தன் பென்ஸிலைத் தரையில் வைத்தான். ஆனால் அதை யாராலும் தாண்ட முடியவில்லை. ஏன்?

9. கிட்டு அறையை விட்டு இரண்டு—காலோடு போனான். திரும்பி வந்த போது ஆறு கால்களோடு வந்தான்! என்ன விந்தை?

10. ஒரு கிழவர் இரவு வெகு நேரமாகியும் சுவாரசியமாக ஒரு புத்தகத்தைப் படித்துக் கொண்டிருந்தார். திடீரென்று மின்சார விளக்குகள் அணைந்தன. ஆனால் கிழவர் கொஞ்சமும் பரபரப்படையவில்லை. படித்துக் கொண்டேயிருந்தார். எப்படி?

(விடைகள் விருந்தின் கடைசிப் பக்கத்தில்)



## தெரிஞ்சுக்கோ !

ஆஸ்திரேலியாவில் ஒருவகை வான்கோழிகள் இருக்கின்றன. உருவத்தில் நம் நாட்டில் காணப்படும் வான்கோழிகளைப் போலத்தான் அவை இருக்கும். ஆனால் இவைகளின் பழக்க வழக்கம் விநோதமானது. இலை, தழை, கிழங்கு முதலிய தாவரப் பொருள்களைக்கொண்டு இவை ஒரு (மேடு) வீடு தயாரிக்கின்றன. சில சமயங்களில் இந்த மேடு கட்டச் சேமிக்கும் பொருட்களின் நிறை 5 டன் வரை கூட இருக்கும். இந்த மேடு 90 அடி சுற்றளவும் 30 அடி உயரமும் உடையதாக இருக்கும்.



இப்படிப்பட்ட குப்பைக் குவியல் மேட்டின் உச்சியில் பெண் வான்கோழி ஏழு அல்லது எட்டுமுட்டைகளை இடுகின்றது. அழுகும் இலை தழைகள் உற்பத்தி செய்யும் உஷ்ணத்தினால் இந்த முட்டைகள் பொரிந்து குஞ்சுகள் வெளி வருகின்றன. இதில் விநோதம் என்ன தெரியுமா? குஞ்சுகள் முட்டையிலிருந்து வெளி வரும் போதே பூரண வளர்ச்சியடைந்து உடனே பறக்கும்படியாகத்தான் வெளி வருகின்றன — அதாவது உருவத்தில் மட்டும் சிறியதாக.



ஃ வாழ்நாளில் பெரும்பகுதி சூரியனையே பார்த்துக் கொண்டு வாழும் பறவை ஒன்று இருக்கிறது. இதற்கு 'டெர்ன்' என்று பெயர். இது துருவ மண்டலத்தில் வசிக்கிறது. கோடை முழுவதும் வட துருவத்தில் நல்ல சூரிய வெளிச்சத்திலேயே வாழும். இருட்டைக் கண்டால் இதற்குப் பிடிப்பதில்லை. சூரியன் வட துருவத்தை விட்டுக் கிளம்பும் சமயத்தில் இதுவும் கிளம்பி விடும். பன்னிரண்டாயிரம் மைல்கள் பறந்து தென் துருவத்துக்கு வந்து இருளையே காணாமல் சூரிய ஒளியிலேயே தொடர்ந்து வாழுகிறது. தென் துருவத்தை விட்டுச் சூரியன் கிளம்பும் போது இந்தப் பறவையும் தனது பன்னிரண்டாயிரம் மைல் பிரயாணத்தைத் தொடங்கி விடுகிறது. சோர்வின்றி வெகு தூரம் பறக்கக்கூடிய பறவைகளில் ஒன்றாகும் இந்த 'டெர்ன்'

---

### சின்ன விஷயந்தான் — விடைகள்

1. கப்பலில் உள்ள நங்கூரம். 2. 'கண்ட பொருளுக்கு ஆசைப்படாதே! தூண்டிலில் சிக்குவதிலிருந்து தப்பிக்கலாம்' என்று புத்தி மதி சொல்லி இருக்கும். 3. முதல்நாள் நெடுந் தூரம் நடந்து களைத்துப் போவதாகக் கனவு கண்டாலும், அன்றைக்கு முன் ஏற்பாடாக சைக்கிளை அருகில் வைத்துக் கொண்டு தூங்குகிறான்! 4. குடை. 5. தூங்கும்போது. 6. சாவித் துவாரம். 7. முள்ளம்பன்றி. 8. சுவரின் ஓரமாக வைத்து விட்டால் தாண்டுவது எப்படி? 9. நாற்காலியைத் தூக்கிக் கொண்டு வந்தான். 10. கிழவர் குருடர். பிரெய்லி ஙமையில் படிக்கக் கொண்டிருக்கார்.

ஃ பசிபிக் மகா சமுத்திரத்தில் 'ரெமோரா' என்று ஒருவகை மீன்கள் வசிக்கின்றன. இவைகளின் ஆற்றல் அற்புதமானது. இவற்றின் தலையில் ஒருவித உறிஞ்சும் கருவி இருக்கிறது. இக்கருவியின் பலமோ அபாரமானது. இதற்கு ஒரு கப்பலையே நிறுத்தும் சக்தி உண்டு என்று பண்டைக் காலத்தில் நம்பினார்கள். ரெமோரா மீன்களின் இருப்பிடம் எது தெரியுமா? சுறா மீனின் வாய்தான்! சுறாமீன் எந்த ஆகாரத்தை உட்கொண்டாலும் அதை முதலில் ருசி பார்ப்பது இந்த ரெமோராதான். இதன்பிடி ரொம்ப உறுதியானது. ஆகவே சுறா மீனின் வாயின் பக்க வாட்டில் தனது உறிஞ்சு கருவியை அழுத்தி ஒட்டிக் கொண்டு விட்டால் சுறா மீனினால் இதை விழுங்க முடியாது. சுறா மீனின் வாயை விட்டு இது வெளி வர விரும்பினால் தனது உறிஞ்சு கருவியின் பிடிமானத்தைத் தளர்த்தி வெளியே நீந்தி வந்து விடும். மடகாஸ்கர் தீவு வாசிகள் இந்த ரெமோராவைப் பிடித்து அதன் வாலில் ஒரு வளையத்தை இணைத்து அத்துடன் ஒரு நூலைக்



கட்டி மறுபடியும் தண்ணீரில் தூக்கி எறிந்து விடுவார்கள். இந்த ரெமோரா ஏதாவது பெரிய மீன் அல்லது பெரிய ஆமை இவைகளின் முதுகில் போய் ஒட்டிக் கொள்ளும். அப்போது கயிற்றைப் பிடித்து இந்த ரெமோராவையும் ஏஅது ஒட்டிக் கொண்டுள்ள ஜந்துவையும் சேர்த்து இழுத்துக் கொள்ளுவார்கள். இப்படி உயிருள்ள தூண்டிலாக இந்த ரெமோரா பயன்படுகிறது. இதன் உறிஞ்சு கருவிக்கு 40 பவுண்டு எடையுள்ள ஜந்துவைக் காக்கும் வலிமை உண்டு.

ஆகஸ்ட் 24ம் முதல்

சென்னை

மற்றும்

தென்னகமெங்கும்

ஆர்.ஆர்.பிக்சர்ஸ்

# பாசம்

டைரக்ஷன் ராமண்ணா






கதை-வசனம்: வலையூர் K.மூர்த்தி • பாடல்கள் கவிஞர் கண்ணதாசன் • இசை: விஸ்வநாதன்-ராமமூர்த்தி •

# நந்தவனம்

## சோ

### முன்கதைச் சுருக்கம்

திருநெல்வேலி 'லக்ஷ்மி விலாஸ்' மிட்டாய்க் கடையில் பொட்டலம் போட்டுக் கட்டுவதற்காக வந்த' பழைய காகிதங்களோடு சித்திரக்காட்சிகள் அடங்கிய ஒரு காகித மடல் வந்ததைப் பார்த்த லாலா ராம்ஸிங் அதை என்னிடம் கொடுக்கிறார். அந்தச் சித்திரங்கள் அனைத்திலும் மீண்டும் மீண்டும் ஒரே பெண்ணின் முகம் காணப்படுகிறது. லாலாவுக்கும் எனக்கும் திகைப்பு ஏற்படுகிறது. தாமிரவருணி நதியின் கரையிலுள்ள சீனிவாசமண்டபத்தில் தினந்தோறும் உட்காருகிற ஒரு வாலிபனின் முகத்தைப் போல் அப்படியே இருக்கிறது அந்தச் சித்திர மடலில் உள்ள பெண் முகம்! இளைஞனைப் பற்றி அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவல் அதிகரிக்கிறது. ஒரு நாள் சித்திரமடலும் கையுமாகச் சென்று அந்த மண்டபத்து இளைஞனைச் சிநேகம் பிடிக்கிறோம். சித்திரமடலைப் பார்த்ததும் அவனுடைய கண் கலங்குகிறது. தனது முகத்தை அப்படியே பெயர்த்து எழுதியது போல் சித்திரத்திலே காணப்படும் அந்தச் சுந்தரியின் வரலாற்றைக் கூறத் தொடங்குகிறான் வாலிபன்.

சிங்கம்புத்தூர் ஜமீந்தார் அனவரதபுவனபதிக்கு ஒரே மகள் தாமரைச் செல்வி. அவளுடைய அத்தை மகன் பொன்னுத்துரை.

இளமையில் இந்த இருவரும் ஒன்றாகவே வளர்ந்த போதிலும், இருவருடைய மன இயல்பும் வெவ்வேறு விதமாக இருப்பது கண்டு, ஜமீந்தார் கலியாணத்தைப் பற்றி யோசிக்காமல் மகளுக்குக் கலைக் கல்வி போதிக்க விரும்புகிறார். ஜமீந்தாருக்குச் சொந்தமான செண்பகநாயகி கோவிலில் பழைய சுவர் ஓவியங்கள் மங்கி யிருப்பதால் அவற்றைப் புதுப்பிப்பதோடு தமது மகளுக்கும் சித்திரக் கலை கற்பிக்க வேண்டும் என்று, சென்னைக்கு வந்து ஓவிய ஆசிரியர் சிவகாமிநாதனைக் கேட்கவே, அவர் தமது வயதுக்கு மீறிய பொறுப்பு என்று மறுக்கிறார். ஜமீந்தாரின் கட்டாயத்தின் பேரில் கிழவர் தமது மகன் வில்வநாதனை அனுப்ப இசைகிறார். ஆனால் அந்த வாக்குறுதியின் போது, ஏதோ ஒரு பெரிய வாழ்க்கை இரகசியத்தை ஜமீந்தாரிடம் சொல்ல ஆரம்பித்தவர் மனத்துக்குள் அடக்கித் தடுமாறுகிறார். உயிர் போய் விடுகிறது.

சிங்கம்புத்தூர் வந்து சேர்ந்த வில்வநாதன் தாமரைச்செல்விக்குச் சித்திரம் கற்பிக்கிறான். அவளுக்கு இந்த ஓவியனிடம் காதல் அரும்புகிறது. வில்வநாதன் குழம்புகிறான். பொன்னுத்துரையின் நெருங்கிய உறவினரும் சிங்கம்புத்தூர் ஜமீனின் முக்கிய நிர்வாகிகளில் ஒருவருமான வல்லாளவேலர் வில்வநாதனைத் தீர்த்துக் கட்டத் திட்டம் போடுகிறார். வேலுலிங்கம், கடலைபாண்டி என்ற இரண்டு கொள்ளைக்காரர்கள் தோன்றி வல்லாளவேலருக்கு எதிராக வில்வநாதனுக்கு உதவ முன்வருகிறார்கள்.

வில்வநாதன் செண்பகவனத்துக்கு வந்து சுவர் ஓவியங்களைப் புதுப்பிக்கத் தொடங்குகிறான். ஆனால் அங்கே செண்பக சுந்தரி என்ற நடன நங்கை மாலை வழிபாட்டுக்காகச் செண்பகநாயகி கோவிலுக்கு வரும் போது, அவளைக் கண்டு காதல் கொள்கிறான்! இருவரும் இதயம் கலந்து பழகுகிறார்கள். ஒரு நாள் ஜமீந்தார் திடீரென்று அங்கே வந்தவர் இக் காதற் காட்சியைக் கண்டு விடுகிறார்.

தான் மனப் பூர்வமாக நேசித்த ஓவியன் மற்றொருத்தியைக் காதலிக்கிறான் என்று தெரிந்து துணுக்குற்ற தாமரைச் செல்வி, தனது அத்தான் பொன்னுத்துரையையே, மணப்பதாகத் தந்தையிடம் உறுதி கூறுகிறாள். திருமண ஏற்பாடுகள் நடக்கின்றன.

வல்லாளவேலர் இப்பொழுது புதிய ஊக்கத்தோடு சூழ்ச்சியிலே ஈடுபடுகிறார். செண்பக சுந்தரி என்ற நடன குலத்து நங்கையின் தாயான குமுதவல்லியைத் தமது சூழ்ச்சிக்கு உடந்தையாக்கி, ஒரு வஞ்சகம் புரிகிறார். இதன் விளைவாகச் செண்பகசுந்தரி காணாமற் போகிறாள். அவளை அபகரித்துச் சென்றதாக வில்வநாதனின் பேரில் பொய் வழக்குத் தொடுக்கப்படுகிறது. சுந்தரியைத் தேடிக் கொண்டு குமுதவல்லியின் வீட்டுக்கு வந்த வில்வநாதனைப் போலீஸ்காரர்கள் வந்து கைது செய்து கொண்டு போவதற்கு முன்பு, வேலுவும் கடலைபாண்டியுமே போலீஸ் உடையில் வந்து வில்வநாதனைக் கொண்டு போய்க் காட்டிலே தங்கள் வன வீட்டில் குடியேற்றுகிறார்கள்!

வட்டப்பாறை என்ற ஒரு காட்டுப்பாறையில் உட்கார்ந்து, வில்வநாதனுக்குக் குமுதவல்லியின் வரலாற்றைச் சொல்லுகிறான் வேலுலிங்கம்.

வழி வழியாகச் செண்பகநாயகி கோவிலுக்குக் கலைத் தொண்டு புரிந்து வந்த இசைக் குடும்பத்தில் தோன்றிய பால்வண்ணனும் அவன் தங்கை குமுதவல்லியும், சிறு வயதில் பெற்றோர்களை இழந்து உறவினரின் மேற்பார்வையில் வளர்கிறார்கள். பால்வண்ணனுக்குத் தானும் தனது தங்கையும் பரம்பரைப் பழக்கங்களை மறந்து புதிய முறையில் உன்னத வாழ்க்கை நடத்த வேண்டும் என்று ஆசை. சிவசங்கரன் என்ற இன்னொரு இசைக் குடும்பத்து வாலிபனும் இதே நோக்கங்கள் கொண்டவன். அவனுக்குக் குமுதவல்லியைத் திருமணம் செய்து கொடுத்து.

அவன் தங்கையைப் பால்வண்ணன் மணந்து கொள்கிறான். இல்லறம் நடக்கிறது. பால்வண்ணன் மனைவி ஓர் ஆண் குழந்தையைப் பெற்று மறு ஆண்டில் இந்த உலகிலிருந்து மறைகிறாள். குமுதவல்லிக்கு ஒரு பெண் குழந்தை பிறக்கிறது. சிவசங்கரனுக்கும் குமுதவல்லிக்கும் இந்நிலையில் அடிக்கடி மனத் தாங்கல் வருகிறது. கலை வாழ்விலே தோய்ந்த உள்ளத்தை அதிலிருந்து பிரிப்பதால்தான் இந்த விபரீதம் என்கிறான் பால்வண்ணன். சிவசங்கரன் மறுபடியும் அவளை நடன வாழ்விலே ஈடுபடுத்துகிறான். தஞ்சாவூரிலிருந்து வந்த ஒரு வித்துவானான சின்னமுத்துக் குமரனின் உதவியோடு, அவன் நிர்வாகத்தில் தஞ்சையிலே சரபேந்திர பூபாலக் குறவஞ்சி என்ற நாட்டிய நாடகத்தில் குறவஞ்சியாக வேடம் தாங்குகிறாள் குமுதவல்லி. இந்நிலையில் சிவசங்கரனுக்குக் குமுதவல்லியின் போக்குப் பிடிக்காமல் விரக்தி உண்டாகிறது. நாடகம் தஞ்சையிலே நடக்கும்போது அதே இரவில் யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் சிவசங்கரன் அங்கிருந்து மறைகிறான் என்று வேணுலிங்கம் குமுதவல்லியின் கதையை வில்வநாதனுக்குச் சொல்கிறான்.

## 34. மலையில் நெருப்பு

சிவசங்கரன் தஞ்சாவூரிலிருந்து நள்ளிரவிலே இரகசியமாக மறைந்தான் என்ற செய்தியைச் சொல்லி விட்டு வேணுலிங்கம் குமுதவல்லியின் வரலாற்றை அந்த இடத்திலே நிறுத்தியதும், வில்வநாதனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. அவனுடைய முகத்திலே பொங்கிய ஆவலையும் துயரத்தையும் மௌனமாக நோக்கினான் வேணுலிங்கம். அப்போது வில்வநாதன் கேட்டான்:



''என்ன இப்படி என் முகத்தையே பார்க்கிறீர்கள்? குமுதவல்லியின் வரலாற்றை முக்கியமான இடத்திலே கொண்டு வந்து நிறுத்தி விட்டீர்களே! சிவசங்கரன் காணமற் போனவர் என்ன ஆனார்? தயவுசெய்து மேலே சொல்லுங்கள்!'' என்று ஆவலோடு வேண்டினான் வில்வநாதன்.

''சிவசங்கரன்தானே? காணமற் போனவர் காணமற் போனவர்தான்! அவர் திரும்பி வரவே யில்லை. குமுதவல்லியையும் அவளுடைய ஒரே குழந்தையான பெண் மகளையும் மறந்து அவர் வடக்கே எங்கோ போய் விட்டார்! யாரெல்லாமோ எங்கெல்லாமோ வலை போட்டுப் பார்த்தார்கள். அவர் அகப்படவே இல்லை. வாழ்க்கையில் அவருக்கு ஒரு விரக்தி ஏற்பட்டு விட்டது. நம் வாழ்நாளில் எத்தனையோ மனிதர்கள் சந்நியாசம் வாங்கிக் கொண்டு போய் விடுவதை நாம் பார்த்ததில்லையா? பார்த்திருக்கிறோம் அல்லவா! அப்படி அவரும் போய் விட்டார்!'' என்றான் வேணுலிங்கம்.

''என்ன! சிவசங்கரன் சந்நியாசம் வாங்கிக் கொண்டாரா என்ன?'' என்று கேட்டான் வில்வநாதன்.

''அது யாருக்குத் தெரியும்? அவர் என்ன ஆனார், இப்பொழுது உயிரோடு இருக்கிறாரா அல்லது மடிந்து போய்விட்டாரா என்பதே யாருக்கும் தெரியாது!'' என்றான் வேணு.

''அடாடா! அப்படியானால் பால்வண்ணன்தான் என்ன ஆனார்? அவர் இப்போது எங்கே இருக்கிறார்? அவருக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்தது என்றும், அந்தக் குழந்தை பிறந்த மறு ஆண்டிலே அவருடைய மனைவி இறந்து விட்டாள் என்றும் சொன்னீர்களே. பால்வண்ணனும் அவருடைய பையனும் இப்போது எங்கே இருக்கிறார்கள்? அதாவது தெரியுமா?''

''தம்பி! அப்படிக் கேளுங்கள். பால்வண்ணனைப் பற்றிக் கேட்டீர்களே, அது முக்கியமான கேள்வி. சொல்லுகிறேன். நீங்கள் கட்டாயம் தெரிந்து கொள்ள வேண்டிய செய்தி அது!'' என்று கூறி மறுபடியும் சற்று நேரம் மௌனமாக இருந்தான் வேணுலிங்கம். பிறகு, தொடர்ந்து பேச ஆரம்பித்தான்:—

''சிவசங்கரன் காணமற் போன பிறகு, குமுதவல்லியும் அவளுடைய தமையன் பால்வண்ணனும் தஞ்சாவூரிலேயே சில நாள் இருந்தார்கள். குமுதவல்லிக்குப் பேரும் புகழும் வந்ததோடு ஏராளமான செல்வமும் வந்து குவிந்தது. ஆனால் நாளாக நாளாகப் பால்வண்ணனுடைய மனப் போக்கிலும் ஒரு விரக்தி உண்டாகத் தொடங்கியது. நாட்டியம் முதலிய கவின் கலைகள் எல்லாம் இறைவனுக்கு மட்டுமே அர்ப்பணமாக வேண்டிய புனிதமான கலைகள் என்று அடிக்கடி கூற ஆரம்பித்தார் அவர்! தங்கள் தங்களுடைய ஆத்ம திருப்திக்காக நாட்டியம் ஆடவேண்டுமேயல்லாமல், பிறரது திருப்திக்காக நாட்டியம் ஆடினால் அது கலையில்லை, அது ஒரு வியாபாரம் என்பார். இந்த வார்த்தைகள் உலகத்துக்கு ஒத்து வராத உபதேசமாகப் படும் கலையன்பர்களுக்கு! குமுதவல்லிக்கோ என்றால் கோபமே வரும். இப்படியிருக்கும் போது ஒரு நாள் ஊருக்குப் போய் வரலாம் என்று தங்கையையும் குழந்தைகளையும் அழைத்துக் கொண்டு இங்கே வந்தார். ஊரிலே கொண்டு வந்து குமுதவல்லியையும் அவளுடைய பெண் குழந்தையையும் விட்டு விட்டு, அன்றிரவே யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல், பால்வண்ணன் தமது குழந்தையை மட்டும் தூக்கிக் கொண்டு ஓடிவிட்டார்! அப்போது அந்தக் குழந்தைக்கு இரண்டரை அல்லது மூன்று வயது இருக்கும். இங்கிருந்து புறப்பட்ட பால்வண்ணன், தமது மைத்துனரைப் போலவே தாமும் வடக்கே நெடுந்தூரம் போய் விட்டார். ஏற்கனவே தஞ்சாவூரில் சித்திரக் கலையிலே கொஞ்சம் பயிற்சி பெற்றிருந்தார் அல்லவா? இப்போது கல்கத்தாவுக்குச் சென்று ஒரு பெரிய சித்திரக் கலைஞரின் ஓவியப்பள்ளியிலே சேர்ந்தார். புதிய புதிய ஓவிய உத்திகளையெல்லாம் கற்றார். வங்காளிகளைப் போல் உடை உடுத்திக் கொண்டு வங்காளி மொழியும் நன்றாகக் கற்றுக் கொண்டு, வங்காளிகளிலே ஒருவராகவே வாழ்ந்தார் பால்வண்ணன். தாம் கற்ற சித்திரக் கலையைத் தம்முடைய மகனுக்கும் கற்பித்தார். சில ஆண்டுகள் கழித்துச் சென்னைக்கு வந்தார். தமது பழைய பெயரை மாற்றி வைத்துக் கொண்டார். தாடியும் மீசையுமாக ஒரு சாமியாரைப் போலவே வாழ்க்கை நடத்தினார் பால்வண்ணன்! தங்கை குமுதவல்லியைப் பார்க்க வேண்டும் என்றோ, தங்கையின் மகளான செண்பகசுந்தரி என்ற குழந்தையைக் காண வேண்டும் என்றோ நினைப்பே இல்லாமல், யாரிடமும் பாசமின்றி, உள்ளத்தின் ஆசைகளை யெல்லாம் வென்று ஒரு துறவியாகவே வாழ்ந்தார்! தாம் துறவியாக வாழ்ந்ததோடு நில்லாமல், தமது பையனுக்கும் துறவு முறைகளையே அடிக்கடி போதித்தார். வாழ்க்கை என்பது ஒரு பெரிய காடு என்று சொல்லுவார். மனித சமூகம்

என்ற முள்ளடர்ந்த காட்டிலே, காலில் முள் தைக்காமல் நடந்து செல்ல வேண்டும் என்று மகனுக்கு நூறாயிரம் தடவை எடுத்துக் கூறுவார். மற்ற எல்லாப் பாசபந்தங்களையும் இதயத்திலிருந்து களைந்துவிட முடிந்தது அவருக்கு! ஆனால் அத்தனை பாசத்தையும் சேர்த்து ஒரே மொத்தமாகத் தமது அருமை மகன் மீது சொரிந்தார். இந்த மட்டற்ற அன்பு காரணமாக, மகனை இதய பாசம் என்ற சிறையிலே பூட்டி வைத்து வளர்த்தார்! கடைசியில் அவருடைய வாழ்வும் எதிர்பாராதவிதமாகச் சென்னைக் கடற்கரையிலே ஜமீந்தார் அனவரத புவனபதியின் முன்னிலையிலே, திடீரென்று முடிவடைந்தது! எந்தப் பையனுக்காக இந்தப் பாடுபட்டாரோ, எந்தப் பையனின் எதிர்கால வாழ்வுக்காக இத்தனை கண்டிப்பும் பாதுகாவலும் செய்தாரோ, அந்தப் பையனை ஜமீந்தாரிடமே ஒப்படைத்துவிட்டு, இந்த உலகிலிருந்து மறைந்தார் அந்த ஓவியக் கலைஞர்! எந்த ஊரையும், எந்தத் துயரமான சூழ்நிலையையும் காணவே கூடாது என்று அந்த ஓவியத் தந்தை ஒரே உறுதியாக இருந்தாரோ, அந்த ஊரில் அதே சூழ்நிலையில் அவருடைய அருமைப் புதல்வன் வந்து சேர்ந்து, ஏதேதோ பெரிய சிக்கல்களுக்கெல்லாம் உள்ளாவான் என்று அவர் எதிர்பார்த்தாரா? இல்லை! என்ன செய்வது! இதுதான் பால்வண்ணன் என்று ஒரு காலத்தில் அழைக்கப்பட்ட ஓவியமணி சிவகாமிநாதனின் கதை! இதுதான் குமுதவல்லியின் கதை! இதுதான் செண்பக சுந்தரியின் கதை. இதுதான் வில்வநாதனின் கதையும்கூட!''

இந்த வார்த்தைகளை வேணுலிங்கம் சொல்லிக் கொண்டு வரும்போதே, வில்வநாதனுடைய பார்வை கலங்கிக் கண்ணீர் பொழிய ஆரம்பித்தது. உள்ளத்தில் தாபமும் ஆவலும் அலைமோதின.

''ஐயா, என்ன சொல்லுகிறீர்கள் நீங்கள்? இது வரை நீங்கள் கூறி வந்த வரலாறு என் தந்தையின் வரலாறு? அப்படியானால் இத்தனை சோக நிகழ்ச்சிகளுக்கும் காரணமாக அமைந்த குமுதவல்லி என் தந்தையின் தங்கையா? உடன்பிறந்த சகோதரியா? ஐயோ, இதெல்லாம் உண்மைதானா? உண்மையென்றால், என் இதயத்தில் ஒரு பக்கம் வேதனையும், மற்றொரு பக்கம் ஒரு விநோதமான திருப்தியும் உண்டாகின்றனவே! இது என்ன விந்தை! ஒரு பக்கம் மகிழ்ச்சியும் மறு பக்கம் ஆழமான துயரமும் இரண்டும் உண்டாகின்றனவே! ஐயா, தயவுசெய்து சொல்லுங்கள். நீங்கள் யார்? இத்தனை வரலாறும் உங்களுக்கு எப்படித் தெரியும்? சற்று விளக்கமாக எனக்குச் சொல்லுங்கள். என்னிடம் பேசும்போது இத்தனை திருத்தமாகவும் இவ்வளவு மெய்யன்போடும் பேசுகிற நீங்கள், ஒரு கொள்ளைக்காரர் என்று எப்படி நம்புவது? என்னிடம் இத்தனை பண்போடு பேசுகிற நீங்கள், கடலையாண்டியிடம் பேசும்போது மட்டும் வேறு விதமான பாஷையிலே பேசுகிறீர்களே. இதெல்லாம் என்ன மாயம்? இது என்ன நாடகம்? தயவுசெய்து என்னிடம் எதுவும் ஒளிக்காமல் சொல்லுங்கள். இதுவரை வேறு யாரோ ஒருவருடைய வரலாறு என்று நினைத்து, நீங்கள் சொன்ன கதையைக் கேட்டுக் கொண்டிருந்தேன். இனி அப்படியில்லை. இப்போது நான் என்னைப் பற்றியே உங்களிடம் கேட்கிறேன். மேலே சொல்லுங்கள். வெறும் ஆவல் காரணமாகக் கேட்கவில்லை. என் உள்ளத்தின் வேதனை இதயத்தைக் குத்துகிறது. அந்த வேதனையைத் தணிக்க வேண்டும் என்று உங்களைப் பணிவோடு கேட்டுக் கொள்கிறேன். தயவுசெய்து பேசுங்கள். ஒளிவு மறைவு இல்லாமல் கூறுங்கள்!''

இவ்வாறு பணிவோடு கேட்டான் வில்வநாதன். அப்போது வட்டப் பாறையிலே மாலை நேரம் மயங்கிக் கொண்டு வந்தது. மேற்கு வானத்தில் பொன் மயமாக உருண்டு சுழன்று கொண்டிருந்த சூரியன், பொதிகைமலையிலே சென்று மறைந்தான். மலைக்கு மேலே காட்டுக்குள்ளே நெருப்பு எரிவது தெரிந்தது! அதைக் காண்பித்துக் கொண்டே வேணுலிங்கம் சொன்னான்:

''அதோ பார்த்தீர்களா தம்பி, மலையிலே தெரிகிற அந்த நெருப்பு. இது வரை ஏன் நம்முடைய கண்ணுக்குத் தெரியாமல் இருந்தது? யாரோ இப்பொழுது போய் அந்த மலைக் காட்டுக்குள்ளே நெருப்பு வைத்தார்களா? இல்லை. பகலிலும் இதே நெருப்பு எரிந்து கொண்டுதான் இருந்தது! சூரிய வெளிச்சத்தில், அந்த வெய்யிலில் இந்த நெருப்பு மங்கியிருந்தது. நம்முடைய கண்ணுக்குத் தெரியவில்லை. இப்போது வெய்யில் மறைந்ததும், இருள் கவிந்ததும் அந்த நெருப்பு நம்முடைய கண்ணுக்குத் தெரிகிறது. இப்படித்தான் மனித வாழ்க்கையின் புதிர்! இரகசியங்கள் வெளியாவதும் இவ்வாறுதான்! அதோ நம்முடைய கடலையாண்டி வந்து விட்டான் போல் இருக்கிறதே!''

இப்படி வேணுலிங்கம் சொல்லிக் கொண்டிருக்கும் போதே, 'டக், டக்' என்ற மிதியடி ஓசையோடு கடலையாண்டி வட்டப் பாறையிலே வந்து சேர்ந்தான்!

''என்ன மாப்பிளே!'' என்று சொல்லி வேணு அவனை வரவேற்பதற்குள், கடலையாண்டி வில்வநாதன் பக்கமாகத் திரும்பிச் சொல்லுவான்:

''தம்பி, கதை கேட்டீர்களா? கேட்டு முடித்து விட்டீர்களா? இனி மேல் சித்திரங்கள் வரைய ஆரம்பிக்கலாம் நீங்கள். அதுக்கு வேண்டிய மடல்கள், வர்ணங்கள் எல்லாம் கொண்டு வந்து விட்டேன்!''

இவ்வாறு சொன்னான் கடலையாண்டி.

''அது சரி, மாப்பிளே! மேற்கொண்டு தடயம் ஏதாவது கிடைச்சுதா...?''

''அது கிடைக்காமல் நான் திரும்பி வருவேனா? அது அது அந்த அந்த இடத்திலே பத்திரமா இருக்குது!'' என்றான் கடலையாண்டி.

''சேதாரம் எதுவும் இல்லியே மாப்பிளே?'' என்று கேட்டான் வேணு.

''அதெல்லாம் ஒண்ணுமில்லே. நம்ப ஆசாமிகளும் சுத்தி வளைச்சுக் கண்காணிக்கிறானுக!'' என்று பதில் சொல்லி விட்டு, பிறகு பலமான சிரிப்புச் சிரித்தான் கடலையாண்டி.

வேணுலிங்கம் வில்வநாதனைப் பார்த்தான் மிகுந்த பரிவோடு.

''தம்பி! உங்களுடைய சந்தேகங்களில் முக்கால்வாசி தீர்ந்து விட்டன. மீதி உள்ள சந்தேகங்களும் தெளிவாக வேண்டிய காலம் வந்து விட்டது. அதனால் நீங்கள் இனிமேல் கவலையே படக்கூடாது. 'அஞ்சும் மூணும் எட்டு, அத்தை மகளைக் கட்டு' என்று இந்தத் திருநெல்வேலி மாவட்டத்திலே ஒரு சொலவடை இருக்கிறது அல்லவா! அதற்கு இணங்க நீங்கள் உங்கள் அத்தை மகளைக் கலியாணம் செய்து கொள்ள வேண்டியது முறையான காரியமும், அவசியமான காரியமும் ஆகும். அதை உடனிருந்து நடத்தி வைக்க வேண்டியது என்னுடைய பொறுப்பு; கடலையாண்டியின் பொறுப்பு. என்ன மாப்பிளே?'' என்று கேட்டான் வேணு.

''அதுலேயும் சந்தேகமா? அதுக்காகத்தானே இத்தனை பாடும் பட்டுக்கிட்டிருக்கோம் நாம்ப?''

''இத்தனை பாடும் படுத்திக்கிட்டு இருக்கோம் அப்படீன்னு சொல்லு மாப்பிளே!'' என்று கூறிச் சிரித்தான் வேணுலிங்கம்.

வில்வநாதனுக்கு வியப்பும் ஆவலும் ஒன்றோடொன்று போட்டியிட்டன. தன்னிடம் பேசும்போது வேணுலிங்கத்தின் சுருதி வேறு, கடலையாண்டியிடம் பேசும்போது அந்தச் சுருதி வேறு! பாட்டுக்குச் சுருதி இருப்பது போல, பேச்சிலும் இத்தனை விதமான சுருதி பேதங்களா? இத்தனை நாடகமும், இத்தனை வேட மாறுதல்களும் எதற்கு?

இப்படி யோசித்துக் கொண்டே ஒரே மௌனமாக அமர்ந்திருந்த வில்வநாதனைப் பார்த்துக் கடலையாண்டி கூறுவான்:

''தம்பி, பாறையிலேயிருந்து எழுந்திருங்க. தெளிஞ்ச ஓடைத் தண்ணீரிலே முகத்தைக் கழுவுங்க. கவலையெல்லாம் தண்ணீரிலே கழுவி விட்டுப்புட்டு, எங்களோட இருந்து சாப்பிடுங்க. இந்தக் காட்டு வாழ்க்கை கொஞ்ச நாள் இப்படி நடந்தாத்தான், பிறகு நாட்டு வாழ்க்கையிலே ருசி தெரியும். புரிஞ்சுதா? எழுந்திருங்க!'' என்று சொல்லித் துரிதப்படுத்தினான் கடலையாண்டி.

**வ**ட்டப்பாறைக்குச் சற்றுத் தொலைவிலே பனை மரங்கள் அடர்ந்திருந்த ஒரு பெரிய வட்டத்துக்குள்ளே, அழகானதொரு தென்னந் தோப்பிலே இருந்தது வேணுலிங்கத்தின் வன வீடு! சற்றுத் தூரத்தில் ஒரு பெரிய ஆலமரம். அதற்கு அப்பால் முள் அடர்ந்த உடை மரக் காடு. அருகிலே ஒரு பெரிய ஓடை சலசல வென்று வேகமாக ஓடிக் கொண்டிருந்தது. மனித நடமாட்டமே இல்லாத அந்தப் பிரதேசத்தில், எதற்காக இப்படி ஒரு நாடக வாழ்வை மேற்கொண்டான் வேணுலிங்கம் என்பது, ஒரு காட்டுப் புதிராகவே நின்றது வில்வநாதனுடைய கண்களுக்கு முன்னால்! பரம்பரை ஆண்டியா அல்லது பஞ்சத்துக்கு ஆண்டியா என்று வசனம் கேட்பது போல, கொள்ளைக்காரர்களிலும் பல ரகம் உண்டு போலும்' என்று நினைக்க நினைக்க, வில்வநாதனுக்கு ஒரே ஆச்சரியமாக இருந்தது! ஆனால் ஒன்று நிச்சயமாகத் தெரிந்தது அவனுக்கு. வேணுலிங்கம் மற்றக் கொள்ளைக்காரர்களைப் போல் பணத்துக்காகத் திருட ஆரம்பித்த கள்வர்களிலே ஒருவனில்லை! கடலையாண்டி எப்படியோ தெரியாது. ஆனால் வேணுலிங்கம் சம்பந்தப்பட்ட வரை, இந்தக் கொள்ளைக்கார வாழ்வு என்பது ஒரு வேடமே தவிர, அவன் உண்மையான கொள்ளைக்காரன் இல்லை என்று தீர்மானமாகப்பட்டது வில்வநாதனுக்கு! அந்த விவரங்களைத் தெரிந்து கொள்வதற்கு முன்னால், கடலையாண்டி வந்து குறுக்கிட்டு விட்டானே என்று மனசில் ஒரு வேதனை ஏற்பட்டது. ஆனாலும் அந்த வேதனைக்கு மத்தியிலும் ஒரு திருப்தி முளைத்தது. அவரவர் அந்தந்த இடத்தில் சேதம் இல்லாமல் இருப்பதாகக் கூறினானே கடலையாண்டி? ஒரு வேளை செண்பகசுந்தரியைப் பற்

றிந்தான் அப்படிச் சொன்னனே! அவள் சௌக்கியமாக இருக்கிறள் என்பதைத் தான் அவ்வாறு பரிபாஷையில் எடுத்துக் கூறினனே ?

இப்படிப் பல எண்ணங்கள் எண்ணிக் கொண்டே வேணுலிங்கத்தோடு உட்கார்ந்து சாப்பிட ஆரம்பித்தான் வில்வநாதன். அந்தக் காட்டுப் பிரதேசத்துக்கு எந்த விடுதியிலிருந்து இத்தனை நேர்த்தியான அறுசுவை விருந்து வந்ததோ என்று ஆச்சரியப்படும்படியான சாப்பாடு அது!

''தம்பி, யோசனை எல்லாம் பிறகு யோசியுங்கள். சாப்பிடுங்கள். நன்றாக ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள். ஒழிந்த நேரங்களில் எல்லாம் சித்திரம் வரையுங்கள். இப்பொழுதுதான் சித்திரம் வரைவதற்கு நிறைய எண்ணங்கள் வருமே உங்களுக்கு ! யாருடைய முகத்தை வரைந்தாலும், அது சென்பககந்தரியின் முகமாகவே இறகிலே வந்து குதித்து நிற்கும்! அப்படித்தானே? சொல்லுங்கள். வெட்கப்படாதீர்கள். அதில் தவறு ஒன்றும் இல்லே. சித்திர மடல் முழுவதும் வரைந்து தீட்டுங்கள்! எங்கோ காட்டுக்குள்ளே போய்ச் சுவரிலே ஏதேதோ வரைந்தீர்களே! நம்மோடு அதை யெல்லாம் கையிலே எடுத்துக்கொண்டு போக முடியுமா? மடலிலே வரைந்து வைத்தால், போகிற இடம் எல்லாம் கொண்டு போய்க் கையிலே வைத்துப் பார்த்துக் கொண்டே யிருக்கலாம்! அப்படித் தானே....?''

வேணுலிங்கம் இப்படிக் கேட்டதும் வில்வநாதனுல் ஒன்றும் பதில் பேச முடியவில்லே. துக்கம் நெஞ்சை அடைத்தது. இதைக் கவனித்த வேணுலிங்கம் கூறுவான்:

''அதெல்லாம் சரி தம்பி, கோவிலின் சுவரிலே எல்லாச் சித்திரங்களும் வரைந்து முடித்து விட்டீர்களா? அல்லது ஏதாவது மிச்சம் சொச்சம் வைத்திருக்கிறீர்களா?''

இந்தக் கேள்வியை வேணுலிங்கம் கேட்டதும், வில்வநாதனுக்கு ஆச்சரியத்தினல் உடம்பு படபடத்தது!

''என்ன தம்பி இப்படி ஆச்சரியப்படுகிறீர்கள்? சுவரிலே ஒரே ஒரு இடம் மட்டும் காலியாக விட்டிருக்கிறீர்கள் என்பது எனக்கு எப்படித் தெரிந்தது என்று நினைக்கிறீர்கள்! அப்படித்தானே? அது எனக்கும் தெரியும்; நம்முடைய மாப்பிள்ளை கடலையாண்டிக்கும் தெரியும். அதைப் பூர்த்தி பண்ணி விட்டீர்களானல், நீங்கள் சென்னையிலிருந்து இந்த ஊருக்கு வந்த நோக்கம் பூர்த்தியாகி விடும். சரிதானே?'' (தொடரும்)

## செல்வீர் கிழக்கே



அலுவலோ, உல்லாசப் பயணமோ,
ஐரோப்பாவுக்குச் செல்ல
இரு வழிகளுண்டு—
வழித்தங்கும் வசதியோடு.

வேறு வழியாகத் திரும்பி வர விரும்பினீர்
களானல், உலகஞ்சுற்றும் சிக்கனச்
செலவு டிக்கட்டின் கட்டணம்:

| | |
|---|---|
| பம்பாயிலிருந்து | ரூ. 6,173.00 |
| கல்கத்தாவிலிருந்து | ரூ. 6,093.00 |
| டெல்லியிலிருந்து | ரூ. 6,119.00 |

தவணை முறைப்படி டிக்கட் வழங்கும்
திட்டத்தைப் பயன்படுத்திக்கொள்ளுங்கள்.

**பயணம் முந்தி, பணம் பிந்தி!**

உங்கள் பி.ஓ.ஏ.ஸி. ட்ராவல் ஏஜெண்டையோ,
உலகெங்கிலுமுள்ள பி.ஓ.ஏ.ஸி. அலுவலகங்களையோ
அணுகுங்கள்—பணிபுரியக் காத்திருக்கிறார்கள் அவர்கள்.

உலக முழுவதும்

# B·O·A·C

உங்களைப் பேணுகிறது.

கூட்டமைந்த பிரிட்டிஷ் ஓவர்ஸீஸ் ஏயர்வேஸ் கார்ப்பொரேஷன்



# உள்ளமும் உடலும்

கோமதிகுமார்

அண்ணனை அலுவலகத்தில் கண்டால் தம்பியை வேறு தனியாகப் பார்க்க வேண்டியதில்லை என்ற புதுமொழி அவர்களால் மிகப் பிராபல்யம் அடைந்து விட்டது.

அவர்கள் தோற்றத்தில் அசல் அச்சு ஒரே மாதிரியாக இருந்தார்கள். மூத்தவன் பெயர் இராமன். இளையவன் பெயர் இலக்குவன். அவர்கள் இரட்டையர்.

தோற்றத்தைக் கண்டு ஆளை மதிப்பிடும் உலகம் அவர்களின் குணமும் ஒரே மாதிரியாகத்தான் இருக்கும் என்று எண்ணியது. ஆனால் அவர்களுக்குள்தான் எத்தனை வேறுபாடு இருந்தது!

இராமனை அவனது தந்தை வாஞ்சையுடன் அழைக்கும் பெயர் இராமச்சந்திரன் என்பது. சில சமயம் இராமச்சந்திரமூர்த்தி என்று இன்னும் இழைந்து கூப்பிடுவதும் உண்டு. இராமச்சந்திரனும் இராமனும் ஒரே பெயர்தானே என்பதல்ல அவர் அவ்விதம் அழைப்பதற்குக் காரணம். தனது மகன் இராமன் தசரதகுமாரன் இராமனைப் போல் பொறுமையின் திருவுருவம் என்பது அவர் எண்ணம்.

இளையவனை இலக்குவன் என்றுதான் அவர் அழைத்தார். செல்லப் பெயரோ! பட்டப் பெயரோ அவனுக்குக் கிடையாது. அவனைச் செல்லப் பெயரிட்டு அழைத்தாலும் அவன் மகிழ்ந்துவிடப் போவதில்லை; பட்டப்பெயர் வைத்து அழைத்தாலும் அவன் கோபப்படப் போவதில்லை. ஒருவித அலட்சியப் போக்கு அவனுக்கு.

இலக்குவன் அண்ணனை அடிக்கடி கேலி செய்வதுண்டு. "பரவாயில்லை. தம்பிதானே!" என்று பெரும் போக்காக இருந்து விடுவான் இராமன். "இப்படி இருக்கக் கூடாது. அண்ணா! எல்லாருமாகச் சேர்ந்து உனக்கு அசட்டுப் பட்டம் கட்டி விடுவார்கள்" என்று தம்பி எச்சரிக்கும் பொழுது, "அதுவும் ஒரு பட்டம்தானே?" என்று சொல்லிச் சிரிப்பான் இராமன்.

அவர்களது அன்னை மக்கள் இருவரையும் அருகில் அமர்த்திக்கொண்டு அடிக்கடி புத்திமதிகள் கூறுவது வழக்கம். இராமனது பொறையுடைமையைப் பற்றி ஓர் அதிகாரம் பாடி விட்டுச் சின்னவனிடம் "பொறுத்தார் பூமி ஆள்வார் என்ற பொன்மொழி பொய்க்காது அப்பா!" என்று முத்தாய்ப்பு வைப்பாள். இலக்குவன் சிரித்துக் கொண்டே எழுந்து சென்று அன்னையின் கைக்கு எட்டாத

படி நின்று கொண்டு ''மூத்தது மோழை: இளையது காளை'' என்று உரத்த குரலில் கூறிவிட்டு ஓடி விடுவான்.

இலக்குவனின் அலட்சியம் மற்றவர்களுக்கு அவன் மீது ஆத்திரத்தை ஏற்படுத்தும். பதிலுக்கு அவனும் துள்ளிக் குதிப்பான். விஷயம் தெரிந்து இராமன், தம்பியிடம், ''இந்தச் சிறு விஷயத்துக்கா தம்பி இத்தனை கோபம்?'' என்று சாந்தமாகக் கேட்கும்போது ''கோபமாவது ஒன்றாவது! குறைந்தபட்சம் கோபப்படுவது போல் நடிக்கவாவது வேண்டும். இல்லாவிட்டால் நம்மை இளிச்சவாயர்கள் என்று எண்ணி விடுவார்கள். தண்ணீர்ப் பாம்பிடம் நெருங்கும் மக்கள் நாகப் பாம்பு இருக்கும் திசைக்காவது போகிறார்களா?'' என்று சிரித்து மழுப்புவான்.

தண்ணீர்ப் பாம்பு, நாகப் பாம்பு உதாரணம் இலக்குவனுக்குத் தண்ணீர் பட்டபாடு! எண்ணி மாளாத அளவுக்குச் சொல்லி விட்டான். இனியும் சொல்லத்தான் போகிறான். அது அவன் இயல்பு.

மக்களைப் பற்றிப் பேசத் தொடங்கி விட்டால் தேன் கடி சம்பவம் ஒன்றை விரிவாக எடுத்துச் சொல்வது இந்த இரட்டையரின் தந்தைக்குக் சுவையான பொழுதுபோக்கு. அப்பொழுது அவர்கள் சிறுவர்கள். ஒரு நாள் அன்னைக்கு உதவி செய்ய, அடுக்கி வைத்திருந்த விறகை எடுத்துக் கொண்டிருந்தான் இராமன். விறகுக் கட்டுக்குள் இருந்த தேன் ஒன்று அவனது இடது கை மணிக்கட்டில் கொட்டி விட்டது. 'அம்மா!' என்று கத்திக் கொண்டு கையில் எடுத்த விறகுகளைக் காலில் போட்டுக் கொண்டான். கையிலும் வலி; காலிலும் வலி.

சத்தம் கேட்டு ஓடி வந்த அன்னை, மகன் நிலை கண்டு பதறினாள். தந்தை ''என்ன? என்ன?'' என்று நேர்ந்த நிலைமைக்குக் காரணம் அறியத் துடித்தார். ''ஒன்றும் இல்லை. தேன் கொட்டி விட்டது'' என்று அமைதியாகப் பதில் அளித்தான் இராமன். ஓட வழியில்லாது ஒரு மூலையில் நின்று கொண்டிருந்த தேனை இலக்குவன் விறகுக்கட்டை ஒன்றால் அடித்துக் கொன்றான்.

தேன் கொட்டி விட்டது. அது ஏற்படுத்திய வலி இன்னும் இருபத்து நான்கு மணி நேரத்துக்குச் சாகாதே! இராமனது இடது கையில் மணிக்கட்டுக்கு மேல் இறுக்கமாகக் கட்டுப் போடப்பட்டது. மந்திரம், மருந்து என்று பழமையும் புதுமையுமாக என்னென்னவோ செய்து பார்த்தார்கள். பல்லைக் கடித்துக் கொண்டு பொழுதைக் கடத்தினான் இராமன். அவன் அழவில்லை; முனகவில்லை.

''இது மாதிரி இலக்குவனைத் தேன் கொட்டியிருந்தால் வீட்டைத் தான் படுத்தியிருப்பான்'' என்றார் தந்தை.



"என் பக்கத்திலேயே தேள் வராது. என்னை இதுவரையில் தேள் கொட்டியதில்லை. இனி கொட்டவும் கொட்டாது" என்றான் இலக்குவன்.

"அப்படியெல்லாம் சொல்லாதேடா. அப்படிச் சொன்னால் அது கொட்டி விடும்" என்றாள் அன்னை.

அவள் சொல் உடனே இல்லாவிட்டாலும் ஒரு வாரத்துக்குப் பின்பு பலித்தது. இலக்குவன் தரைக்கும் முகட்டுக்குமாகக் குதித்தான். "என்ன வீடு? கொஞ்சமாவது சுத்தம் இல்லை. தேள் என்ன, பாம்புகூடத்தான் வீட்டில் குடியிருக்கும்" என்று கத்தினான். அவனுக்குப் பணிவிடை செய்ய அவனது பெற்றோர், அண்ணன் ஆகிய மூவராலும்கூட இயலவில்லை.

"ஏனப்பா, நிஜமாகத்தான் இவ்வளவு வலிக்கிறதா? அல்லது வேண்டுமென்றே நீ கத்துகிறாயா?" என்று கேட்டுவிட்டார் தந்தை.

"உங்களுக்குக் கொட்டினால் தெரியும்" என்று மிகுந்த ஆத்திரத்துடன் இரைந்தான் இலக்குவன்.

"நிஜமாகவே அழுகிறாயா? அல்லது அழுவதுபோல் நடிக்கிறாயா?" என்று தம்பியைச் சீண்டினான் இராமன். தம்பியின் அழுகை அதிகப்படியாகத் தோன்றியது அவனுக்கு.

"தேள் கொட்டினால் வலிக்காதா?" என்று கேட்டான் இலக்குவன்.

"வலிக்கத்தான் செய்யும்" என்றான் இராமன்.

"வலித்தால் அழக் கூடாதா?" என்றான் தம்பி.

"அழுதால் வலி நிற்குமா?" என்று அண்ணன் எதிர்க் கேள்வி போட்டான்.

அந்த வயதில் முறையாக விவாதிக்க இலக்குவனால் முடியவில்லை. "அழுதால் வலி நிற்குமா, நிற்காதா என்று உன்னிடம் யாரும் கேட்கவில்லை. வலித்தால் அழ வேண்டும்; வலி இல்லாவிட்டால் சிரிக்க வேண்டும். உன்னைப்போல் வலிக்கிற பொழுது வலி இல்லாதது போல் பாசாங்கு செய்ய எனக்குத் தெரியாது. என்னை நடிக்கிறாயா என்று கேட்ட நீதான் அண்ணா கைதேர்ந்த நடிகன்" என்று விக்கலுக்கும் விம்மலுக்கும் இடையில் பேசினான்.

தம்பியின் வார்த்தைகளில் நியாயம் இருப்பதாகத்தான் தோன்றியது இராமனுக்கு. ஆனாலும் மேலுக்குச் சிரித்து விட்டு, "என்ன செய்வது? என்னைப் பாம்பு கடித்தால்கூட என்னால் சிரிக்கத்தான் முடியும். அழத் தெரியாது" என்றான்.

"கடித்தால் தெரியும்!" மேலும் இலக்குவன் ஏதோ சொல்வதற்குள் அவனது வாயைப் பொத்தினாள் அன்னை.

இப்பொழுது அந்த இரட்டையர் சிறுவர்களல்லர். வயது வந்த வாலிபர்கள். மூத்தவன் பட்டணத்தில் ஏதோ ஒரு தனியார் நிறுவனத்தில் மேலாளராகப் பணி புரிகிறான். இருவருக்கும் இன்னும் திருமணம் ஆகவில்லை.

அலுவலில் ஈடுபட்டிருந்த இராமன் சில குறிப்புகளை எழுதி முடித்து விட்டுச் சோம்பல் முறிப்பதற்காக எழுந்தான். திறந்திருந்த சன்னல் வழியாகப் பார்வை எதிர் வீட்டுச் சன்னலில் விழுந்தது. அங்கே ஒரு யுவதி சன்னல் வழியாக வீதியை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தாள். இராமன் அலுவலை மறந்து அவளையே பார்த்துக் கொண்டிருந்தான். தற்செயலாக இராமன் இருந்த பக்கம் திரும்பிய அந்தப் பெண் தன்னையே கூர்ந்து பார்க்கும் இவனை உறுத்துப் பார்த்து விட்டு 'விருட்'டென்று சன்னலை அடைத்து விட்டாள்.

விக்கித்துப் போனவனாக இராமன் நாற்காலியில் அமர்ந்தான். மனத்தில் ஏதோ குறுகுறுப்பு. மெல்ல எழுந்து எதிர்வீட்டுச் சன்னலை நோக்கினான். அங்கே அவள் நின்று கொண்டிருந்தாள். இவனைப் பார்த்ததும் மீண்டும் சன்னலை அடைத்துக் கொண்டாள்.

இரண்டு நாட்கள் அவள் சன்னலை அடைத்தாள். மூன்றாவது நாள் அவள் இவனைப் பார்க்கிற பொழுது இவன் படீரென்று சன்னலை அடைத்தான். வேலை ஓடவில்லை. நேரமும் ஓடவில்லை. மனத்துக்குள் ஒன்று, இரண்டு மூன்று என்று நாலு வரை எண்ணினான். மெதுவாக எழுந்து சென்று சன்னலைத் திறந்தான். எதிர் வீட்டுச் சன்னல் மூடியிருந்தது. மீண்டும் வந்து நாற்காலியில் அமர்ந்து கொண்டு நூறு வரை ஆங்கிலத்தில் எண்ணினான். எண்ணி முடித்ததும் சன்னலைத் திறக்கச் சென்றான்.

எதிர் வீட்டுச் சன்னல் திறந்திருந்தது. அந்தப் பெண் அவளது கூரிய விழிகளால் இவனது அலுவலகச் சன்னலையே பார்த்துக் கொண்டிருந்தாள். இவனைக் கண்டதும் படீரென்று சன்னலை இழுத்து அடைத்துக் கொண்டு விட்டாள்.

அதன்பின் ஒவ்வொரு நாளும் சனி,ஞாயிறு நீங்கலாக மத்தியானத்துக்கு மேல் சாயங்காலம் வரை இந்த வேடிக்கை நிகழ்ந்து கொண்டிருந்தது. இந்த விளையாட்டை இருவருமே விரும்பினார்கள்.

இலக்குவனுக்குக் காலையில் மாத்திரம்தான் வகுப்பு உண்டு. மாலையில் வேறு ஒரு பிரிவினர் அவன் வகுப்பில் குழுமி விடுவார்கள். மத்தியானத்துக்கு மேலும் வகுப்பு இல்லையே என்பது அவனது வருத்தம். ஏனெனில் அவனது மனத்தைக் கவர்ந்த சக மாணவி சாந்தியை ஒரு நாளில் மூன்று மணி நேரம் மாத்திரம் பார்ப்பதில் அவன் மனம் நிறைவெய்தவில்லை. பிற்பகலிலும் வகுப்பு இருந்தால் இன்னும் ஓர் அரை நாள் பொழுது அவளைப் பார்த்து மனப் பசி ஆறலாமே என்பது அவனது ஆற்றாமை. சாந்தியும் அவனை நேசிப்பது போலவும் வெறுப்பது போலவும் விளையாட்டு காட்டிக் கொண்டிருந்தாள்.

காதல் எண்ணத்தில் திளைத்திருந்த சகோதரர்களை ஊரிலிருந்து வந்திருந்த தந்தையின் கடிதம் கல்யாணத்தைப் பற்றிச் சிந்திக்கச் செய்தது.

தம்பிதான் துணிச்சலாக முதலில் பேச்செடுத்தான். "நீயாவது சீக்கிரம் திருமணம் செய்து கொள், அண்ணா! இல்லாவிட்டால் அப்பா என்னையும் சம்சார சாகரத்தில் தள்ளி விடுவார்!"

"நான் மாத்திரம் அந்தச் சாகரத்தில் விழ வேண்டுமா என்ன?" என்று கேட்டான் அண்ணன்.

''உனக்குத்தான் அலுவல் என்ற பெரும் புனை இருக்கிறதே! மூழ்கிப் போய்விட மாட்டாய். படிக்கிறவன் கலியாணம் செய்து கொண்டால்தான் படிப்பிலும் தேற முடியாது. வாழ்க்கையிலும் வெற்றி காண முடியாது'' என்றான் இலக்குவன். அவனுக்குத் தனது காதல் கனியச் சிறிது காலம் வேண்டும் என்ற எண்ணம்.

இராமனின் எண்ணமும் அதுதான். இருவரும் அதனை வெளிப்படையாகச் சொல்லவில்லை. ''தம்பியின் படிப்பு முடியட்டும். இருவர் திருமணத்தையும் ஒரே சமயத்தில் நடத்திவிடலாம்'' என்று ஊருக்குக் கடிதம் எழுதி விட்டு இராமன் அலுவலகத்துக்குச் சென்றான். இலக்குவன் கல்லூரிக்குக் கிளம்பிப்போனான்.

கலியாணப் பேச்சுக் கிளம்பி விட்டபடியால் இனியும் தாமதிக்க விரும்பாத இலக்குவன் சாந்தியை மிகவும் நெருங்கினான். அவள் திருமணம் பற்றி முடிவு செய்வதற்கு அவகாசம் கேட்டாள்.

காலைப் பொழுதெல்லாம் கவலையோடு நேரத்தைப் போக்கிய இராமன் பிற்பகலில் மிகவும் ஆனந்தமாக இருந்தான். இவன் மௌனமாக செய்தால் எதிர் வீட்டுச் சன்னலில் இருந்து அவள் புன்னகை காட்டினாள். அந்தப் பெண் யாராக இருந்தாலும் சரி, அவளையே திருமணம் செய்து கொள்வது என்ற ஒரு திடமான முடிவுக்கு வந்து விட்டான் இராமன். அவள் இவனைக் காதலிக்கிறாள் என்பதில் இவனுக்குக் கிஞ்சித்தும் ஐயம் இல்லை. அவளைப் பற்றிய விவரங்களையெல்லாம் அறிய முயன்றான். ஓரளவு வெற்றியும் பெற்றான்.

எத்தனைதான் கண்டித்து அடக்கி வைத்தாலும் கன்னிப் பெண் அவள் இருப்பதைக் காட்டிக் கொள்ளாமல் இருக்க மாட்டாள். அவளே அடங்கி மறைந்து உறைந்தாலும் ஓரொரு சமயங்களில் உலகம் அவளின் இருப்பைக் கண்டு விடும். ஆனந்தமும் அப்படித்தான். மறைக்க முடியாது. இராமனும் இலக்குவனும் தாங்கள் எப்பொழுதும் போல் சகஜமாக நடப்பது போல் நடிக்க முயன்றார்கள். மன விளிம்பில் ததும்பிக் கொண்டிருந்த மகிழ்ச்சி அவர்களையறியாமலே புறத்திலும் வழிந்து கொண்டிருந்தது.

ஒருவனைப் போலவே இன்னொருவனும், மற்றவன் யாரையேனும் காதலிக்கிறானோ என்று நினைத்தான். இலை மறை காய் மறையாகத் தெரிந்த காரணம் இறுதியில் முழு அளவில் தோற்றம் கொடுத்தது. வெளிப்படையாகப் பேசித் தீர்க்க வேண்டிய நேரம் வந்து விட்டது என்பதை உணர்ந்த அண்ணன் பொறுப்புணர்ச்சியுடன், ''அந்தப் பெண் யார்? அவளைப் பற்றி விவரமாகக் கூறு'' என்று தம்பியிடம் கேட்டான்.

தம்பி வெட்கப்பட வில்லை. ஒளிவு மறைவின்றிச் சாந்தியைப் பற்றி மகிழ்வோடு பேசினான். விவரம் கேட்ட இராமனுக்கு ஏன் கேட்டோம் என்று ஆகிவிட்டது. ''உங்கள் வகுப்பில் வேறு யாரும் சாந்தி என்று இருக்கிறார்களா?'' என்று கேட்டான். ''இல்லை, அண்ணா! எங்கள் கல்லூரியிலேயே இந்த ஆண்டு இவள் ஒருத்திதான் சாந்தி'' என்று சொன்ன இலக்குவன் அண்ணனின் முகத்தைப் பார்த்துத் திடுக்கிட்டவனாக, ''என்ன அண்ணா, இந்தப் பெண்ணைத்தான் நீயும்....'' என்று படபடத்தான்.

''இல்லை. எங்கள் அலுவலக நண்பர்கள் பேசிக் கொண்டார்கள். சாந்தி, சட்டக் கல்லூரி என்று என்னென்னவோ பேசினார்கள்!''

''என்னவென்று பேசினார்கள்?''

''குறிப்பாக எதுவும் எனக்குத் தெரியாது. ஆனால் மொத்தத்தில் அந்தப் பெண் அவ்வளவு நல்லவள் இல்லை என்பது மட்டும் உறுதி'' என்றான் இராமன்.

இராமன் இலக்குவனின் மனத்தைப் புண்படுத்தி விட்டான். இவன் மனமோ ரணமாகி இருந்தது. கிணறு வெட்டப் பூதம் கிளம்பிய கதையாக இருவர் நிலையும் ஆகி விட்டது.

''இதை நான் இலேசில் விடப்போவதில்லை, அண்ணா! நீர் விசாரித்து நீ சொல்வது பொய் என்று தெரிந்தால் உன்னை....'' என்று படபடத்தான் இலக்குவன்.

இலக்குவன் விசாரிக்கவேண்டிய தேவையே ஏற்படவில்லை. மறு நாள் அவன் கல்லூரிக்குச் சென்ற பொழுது சாந்தியே அவனிடம் வந்து ஒரு திருமணப் பத்திரிகையை நீட்டினாள். அவளுக்கும் அவளது நெருங்கிய உறவினரான யாரோ ஒரு பணக்காரருக்கும் கலியாணமாம். அழைப்பிதழை அவள் முன்னாலேயே கிழித்தெறிந்தான் இலக்குவன்.

''ஆண்கள் பொறுமைக்காரர்கள். கொஞ்சம்கூட நாகரிகம் தெரியவில்லை'' என்று கூறி மொத்தமாக ஆண் வர்க்கத்துக்கே ஒரு 'டோஸ்' கொடுத்து விட்டு நழுவினாள் சாந்தி.

''அவளது திருமணம் நடப்பதைப் பார்த்து விடுகிறேன். அவள் அவனோடு வாழ்வதைப் பார்த்து விடுகிறேன்'' என்று என்னவெல்லாமோ பயங்கரமான சபதங்களெல்லாம் செய்தான் இலக்குவன்.

ஆனால் இராமன்.....?

நாளுக்கு நாள் மெலிந்து கொண்டே வந்தான். உணவை மறந்தான்; உறக்கத்தை மறந்தான். உள்ளத்துச் சாந்திக்கு உறுதி கலந்த பின்னரும் அவன் முகத்தில் மாத்திரம் என்றும் மாறாத புன்னகை இலங்கிக் கொண்டிருந்தது.

# லிஸ்டரின் ஆன்டிஸெப்டிக் அனுதினம் உங்களைக் காக்கும்

நம் வாயிலுள்ள கதகதப்பான ஈரநிலை, கிருமிகள் தோன்றிப் பெருகுவதற்கு வெகு வாய்ப்பானது. பல்லிடுக்குகளில் தங்கிவிடும் உணவுத் துணுக்குகளோ கிருமிகளை எதிர்கொண்டழைப்பவை. கிருமிகள் பெருகுவதைத் தடுத்து நிறுத்துவது ஆன்ட்டிஸெப்டிக் (நச்சுமுறி மருந்து). வாய்கொப்பளிப்பதற்கான ஆன்டிஸெப்டிக்காகிய லிஸ்டரின் உடனடியாக செயல்படுகிறது; பட்ட மாத்திரத்தில் கிருமிகளைக் கொல்வதிலே குறிதவறாத, இதமுள்ள பாதுகாப்பு மருந்து. இன்றும் என்றும் உபயோகியுங்கள் லிஸ்டரின்.





உணவருந்தி முடிந்த ஒவ்வொரு முறையும் லிஸ்டரின் கொண்டு வாய்கொப்பளித்தீர்களானால் உங்கள் மூச்சில் இனிமையும் புதுமையும் நிலவும். வெற்றிலை புகையிலை தரிப்போர் லிஸ்டரின் கொண்டு பலமாக ஒருமுறை வாய்கொப்பளித்தால் அறவே சுத்தமடையும். இன்றும் என்றும் உபயோகியுங்கள் லிஸ்டரின்.

லிஸ்டரின் உபயோகிப்போருக்கு சளி, இருமல், தொண்டைப் புண் ஆகியவற்றிலிருந்து அதிக பாதுகாப்புண்டு எனப் பரிசோதனைகள் நிரூபித் துள்ளன. ஏதும் கலவாமல் லிஸ்டரினை அப்படியே உபயோகித்து தினம் இரு முறையாவது வாய்கொப்பளித்தீர்களானால், கூடுதலான பாதுகாப்பும் பெறுவீர்கள். இன்றும் என்றும் உபயோகியுங்கள் லிஸ்டரின்.



அனுதினம் லிஸ்டரின் பழக்கம்: கிருமிகளிடமிருந்து வலிய முறையில் பாதுகாப்புக்கு வழி. பலதிறப்பட்ட பயனுள்ள, பத்திரமான நச்சுமுறி மருந்தாகிய லிஸ்டரின் இருக்கையிலே, பிணிவாராமல் காப்பதே சிகிச்சையினும் பன்மடங்கு மேல்.

உங்கள் குடும்பத்திற்கு லிஸ்டரின் பாதுகாப்பை அளியுங்கள்.

லிஸ்டரின் ஆன்ட்டிஸெப்டிக்: 3, 7 மற்றும் 14 அவுன்சு சீசாக்களிலே.

லிஸ்டரின் உமது அன்றாடப் பழக்கமாகட்டும்...

வார்னர் லாம்பர்ட் பார்மஸ்யூட்டிகல் கம்பெனி
(வரையறுக்கப்பட்ட பொறுப்பு, யு.எஸ்.ஏ.வில் இணைக்கப்பெற்றது)

WL 1368 TAM

# தான் ஆடாவிடினும்...

எஸ். பெருமாள்

"சாமீ...."

பத்து வருடங்களாகப் பழக்கப்பட்ட குரல் தான். வறுமைக்கு வடிவம் எடுத்த அவ்வுருவத்தின் குரலும் குடலும் என்றும் எப்போதும் சுருண்டு கிடந்ததால் நடுக்கமுற்றது.

நான் திரும்பிப் பார்க்காமல் நடந்தேன்.

"சாமீ...." என்னைத் தெய்வமாக்கும் போலி அழைப்பு மீண்டும் எழுந்தது.

"என்னடா சதா சாமீ.... சாமீன்னு தொந்தரவு......வேறே வேலே இடையாது உங்களுக்கெல்லாம்....?"

"அட, காசு கேக்கலே சாமி, கருணையைக் கேக்கறேன். .."

"என்னடா வார்த்தையால் விளையாடறே...." என்று கூறிக் கொண்டே நான் பின்னும் திரும்பிப் பார்த்தேன் இயல்பான எரிச்சலுடன்.

என் வெறுப்பை வேள்வித் தீயாக்கும் விசிறி அங்கே சின்னஞ்சிறு குழந்தை வடிவில் நின்று கொண்டிருந்தது.

முன் போல் கவனிக்காதது மாதிரி நடக்க முயன்றேன்; முடியவில்லே.

"கொஞ்சம் நில்லு சாமி..." ஆணையிடுவது போல் தடுத்தது அக்குரல்.

"என்னடா தொந்தரவு இது....'

"தொந்தரவில்லே சாமீ...பாவம், இந்தப் பசலைக் குழந்தை வீட்டுக்குப் போக வழி தெரியாமல் திண்டாடுது ...."

"என்னே என்ன பண்ணச்சொல்றே?"

"ஆள்வார்ப்பேட்டையிலே வீடாம்... கொண்டு போய்ச் சேத்துடு சாமீ...உனக்குப் புண்ணியமாப் போகும். பாவம், கொழந்தை கண்ணு ரெண்டும் கலங்கித் தளும்புது..."

"அவ்வளவு அக்கறையும் இரக்கமும் இருந்தால் நீயே கொண்டு போய் விடறது தானே?...."

"நான் கூட்டிக்கிட்டுப் போனால் நகைக்கு ஆசைப்பட்டு எங்கியோ கடத்திப் போகிறதா





நெனச்சு உதைப்பாங்களே ஐயா. அதுனாலேதான் உன்கிட்டே சொல்றேன்..."

அந்தப் பிச்சைக்காரனின் இதயத் திலுள்ளது போன்ற ஈரம் என் நெஞ்சில் உலர்ந்து விட்டது. ஆனாலும் உதிர்ந்து விடவில்லே.

சற்றே தயங்கினேன்.

வீட்டுக்குப் போகும் பாதை தெரியாமல் வேறு வழியில் வந்து நின்று திண்டாடும் இந்தக் குழந்தையைப் போல்தானே......?

"சே. வேற வேலே யில்லாதவன் கிட்டே போய் உன் வேண்டுகோளைச் சொல்லு...."

பிச்சைக்காரன் ஒரு கணம் என்னை ஏற இறங்கப் பார்த்துவிட்டு, "சாமீ ...உனக்குக் கொள்ளே வேலே காத்திருக்கிறது தெரியாதா, என்ன?

சாயங்கால-நேரம் வாசலிலே வந்து உக்காந்திருவாரு. ராத்திரிதானே எழுந்திரிக்கப் போவே? பொல்லாத வேலே.. எனக்காக இல்லா விட்டாலும் இந்தப் பச்சைப் புள்ளேக்காகப் போயிட்டு வா சாமீ....'' என்றான்

பிச்சைக்காரனின் கோரிக்கையிலும் அவன் சொல்லுவதிலும் உண்மை இருக்கிறது. பீச் ரோட்டிலுள்ள என் வீட்டு வாசலில் சாயங்காலம் ஈஸிசேரில் சாய்ந்தால் இரவு எட்டு மணிக்குத்தான் எழுந்திருப்பேன். வேறு வேலே ஒன்றுமில்லே. அவன் சொல்வது போல் ஆள் வார்ப்பெட்டை யுரைக்கும் போய்.....

கூடாது. போகக்கூடாது திண்டாடட்டும்; நன்றாகத் திண்டாடட்டும்.

'சாமீ. போய் வா சாமீ. வேறு யாருனுக்கும் மூணும் மனுசன் நான் போறேன்னு கொண்டு போய் எங்கியாவது திண்டாட விடாமல், பத்து வருசம் மூகம் பாத்துப் பழகின தோசத்துக்கு உன்கிட்டே சொலிறேன். நான் நல்ல நெலமையிலே இருந்தா உன் தயவே தேவையில்லே, அப்படின்னு துணிஞ்சு போவேன். நல்லவனுக இருந்தாலும் நல்ல நிலைமையிலே இல்லாத கஷ்டம். இன்னிக்குப் படறேன்....'' — பிச்சைக்காரன் அங்கலாய்ப்புடன் கூறினான்.

இதயத்தின் எந்த இரகசியப் பாதை வழியாகவும் இரக்கம் புகுந்து விடுமோ எனப் பயந்தவன் போல் மனக் கதவைக் கருங்கற் பாறையாக்கிக் கொண்டு கூறினேன்:

''என்னால் முடியாது. போடா....''

இன்னும் இரண்டடி எடுத்து வைத்து விட்டுக் காம்பௌண்டுக் கதவைத் திறக்கப் போன சமயம்......

''தாத்தா.....!''

குழந்தையின் அழைப்பு சுயமில்லே; சொல்லிக் கொடுத்து எழுந்தது. பிச்சைக்காரப் பயலுக்கு எத்தனே திமிர்?

நெஞ்சைச் சுட்ட நினைவுப் பொறி பெரு நெருப்பாகப் பற்றியெரிந்து அக்கனல் விழிகளுக்குத் தாவ. குழந்தையையும் கிழவனேயும் வெறித்தேன்.

''என்னடா சொல்லிக் கொடுக்கிறே அவனுக்கு...?''

''ஒன்றுமில்லே சாமீ உனக்கும் ஒரு பேத்திப் பொண்ணு இருந்தாள்னு, பாசத் துடிப்பு என்னன்னு புரிஞ்சிருக்கும். பாவம், பள்ளிக்கூடம் சுருக்கா விட்டுட்டாங்கன்னு தானு வீட்டுக்குப் போக நினைச்சு வழி தப்பி வந்து திண்டாடுதே. இந்தக் குழந்தையைப் பார்த்து இரக்கம் வரலியா உனக்கு?''

''வழி தவறி வந்தால் அனுபவிக்கத்தானே ஆகணும்?''

''வேணும்னு வந்துட்டா அனுபவிக்கலாம்: விவரம் தெரியாம வந்தா?''

மடக்கி மடக்கிப் பேசும் அவனுக்குச் சமதையாக நானும் நின்று பதில் சொன்னால், வருவோர் போவோர் வேடிக்கை பார்க்க நேரிடும். ஆகவே தலையைத் திருப்பிக்கொண்டு சென்றேன்.

''தாத்தா!....''



அழைப்பு என் அருகிலிருந்து எழுந்தது.

"தாத்தா! வீட்டுக்குப் போக... வழி தெரியல தாத்தா...."

"வழி தெரியாட்டா எங்கேயாவது விழுந்து சாகு...."

ஏனோ என்னையறியாமல் இரைந்து விட்டேன். யார் மீதோ உள்ள என் கோபம் இந்தக் குழந்தை மீது வடிந்தது.

"தா....சாமீ....நீயும் புள்ளே குட்டி பெத்த மனுசன்தானு? வீட்டுக்கு வழி காண்பிக்காட்டாலும், வீதிக்கு வழி காட்டு நீயே!" என்று என்னைக் கடிந்துவிட்டு அக்குழந்தையைத் தன்னருகே இழுத்துக் கொண்டான் கிழவன்.

"தாத்தா...." என என்னைப் பார்த்து அழுது கொண்டே குரலிழுத்தது அக்குழந்தை.

"தாத்தாவா....? இதோ நான் இருக்கேன் கண்ணு. உனக்குத் தாத்தா. ஆனையும் அந்தனையும் வைச்ச அவரை ஒரு 'இது'வா மதிச்சுச் சொன்னது என் தப்பு. வழி தெரியாமத் திண்டாடுற பச்சைப் புள்ளைக்கு வழி காட்டுறது சாகறதுக்கு...வாம்மா கண்ணு. நான் கூட்டிக்கிட்டுப் போறேன்."

"தாத்தா...."

தாத்தாவாம் தாத்தா. யாருக்கு வேண்டும் இந்த உறவு? உறவைப் பிறப்பிக்க இருந்தவனே என் வரையில் இல்லாதவனுகி விட்டபோது இது எதற்குப் புது உறவு?

எனக்கு நானே சிந்தித்தேன்; சிலையாக நின்றேன். நிகழ்ந்து போன செயல்களின் நினைவுச் சாயல் என் நெஞ்சுத் திரையில் நிழற்படமாய்ச் சரங்கோத்துச் சுழன்றது.

ஹூம்...!

பொய்யான உலகத்திலே பொய்களைப் பிறப்பித்து, பொய்யிலே பொய்மையைக் கலந்து, பொய்யிலே பொய்யை இணைத்து, அதற்கு உறவு, உள்ளன்பு, பந்தம், பாசம் என்னும் பலப்பல பொய்களை ஒன்றன் மீதொன்றாக அடுக்கி இறுதியில் எல்லாமே பொய்யாகி விட்ட நிலையில்.....

நினைக்க நினைக்க நெஞ்சக் குமுறல்தான் மிச்சம்.

மூடிய என் இமைகள் திறந்த போது, இதயம் மட்டும் திறக்கவே இல்லே.

"பாப்பா! மரத்தடியிலே நில்லு, நான் எதிர்ச்சாரியிலே போய் இந்தக் குவளையை வச்சுட்டு வந்துடறேன். நில்லும்மா கண்ணு...." என்று சொல்லிய பிச்சைக்காரன், இறங்கித் தெருவில் வேகமாக நடந்தான், கடந்தான்.

"லொள்....லொள்...."

சிறுமி நின்று கொண்டிருந்த மரத்துக்குப் பின்னுலுள்ள வீட்டிலிருந்து திடுமென எழுந்த நாயின் குரைப்பு அவளைப் பயப்படுத்தித் தூக்கிவாரிப் போட்டு விட்டது போலும்.....

"தாத்தோவ்......." எனப் பெரிதாக அலறிய சிறுமி.....

என்னிடம் வரவில்லே, எதிர்ச்சாரியில் நின்ற பிச்சைக்காரனை நோக்கி ஓடினாள்.

நின்றவள் சென்றாள்; சென்றவள்?

கடற்கரை ரஸ்தாவில் மூன்று மணி சுமாருக்கு ஆளில்லாத நேரம்தானே என்று அசுர வேகத்தில் வந்த கார், சென்றவளைச் சிதைத்து விட்டது.

"ஐயோ....ஓ...." எனக் கதறிய சிறுமி, கார்ச் சக்கரத்தின் டயர் நெருக்கத்திடையில் அகப்பட்டு........

பிச்சைக்காரக் கிழவன் தலையில் 'பட்பட்'டென்று அறைந்து கொண்டு ஓடி வந்தான். அடிபட்ட வேகத்தில் பிய்த்தெறியப்பட்ட மலர்ச்செண்டாய் எகிறி விழுந்த குழந்தையின் உடலைக் கட்டிக் கொண்டு கதறியழுதான். சற்று நேரத்துக்கு முன் வீட்டுக்கு வழி கேட்டவளுக்குப் பதில் சொல்ல ஆளிருந்தாலும், அழைத்துப் போக அவனே இல்லாத அவலத்தைச் சொல்லி அழுதான்.

இடமும் நேரமும் இரண்டுமே இரண்டுங்கெட்டானுகையால் நல்ல காலம் கூட்டம் சேரச் சந்தர்ப்பம் இல்லே.

காரில் வந்தவன் என் எதிரே கையைப் பிசைந்து கொண்டு நின்றான். என்ன செய்வது, எப்படிச் செய்வது என்பது அவனுக்கு மட்டுமல்ல, அனைவருக்கும் புரியவில்லே.

"சார்! இந்தக் குழந்தையின் வீடு எங்கே இருக்கிறதென்று உங்களுக்குத் தெரியுமா, சார்?" பயமும் படபடப்பும் நிறைந்த குரலிலே வினவினான் காரில் வந்தவன்.

கல் போன்று நின்ற என் கண்களிலே சொட்டுச் சொட்டாக இரத்தம் துளித்து வடிந்தது.

'தெரியும்' என்ற உண்மையைச் சொல்வதா? இல்லே, தெரியாது என்றே சொல்லித் தப்பித்துக் கொள்ளவாமா?

"ஆள்வார்ப் பேட்டையிலென்னு சொல்லுச்சு சாமீ....அதுக்குள்ளே ஆளே இல்லாமப் போயிட்டுதே ஐயய்யோ...." எனப் பிச்சைக்காரன் துடிதுடித்துக் கொண்டே கூறினான்.

யாரோ ஒருவனுக்கு இருக்கின்ற பாச உணர்ச்சிகூட அற்றவனு நான்? அட, தெய்வமே....

"எந்த இடம்னு தெரியுமாப்பா....?"—காரோட்டியின் கவலை அதிகரித்தது.

"தெரியும்" – நான், ஆம் நானேதான் பதில் கூறினேன்.

"தெரியுமா? ஏஞ்சாமி. வீடு இதுதான்னு தெரிஞ்சுங்கூட நீ போக மாட்டேன்னியா அப்போ?" என்று கதறினான் அந்தப் பிச்சைக்காரன்

" நீ எதுவுமே பேசாதேப்பா என்னிடம். முதலில் குழந்தையை என்னிடம் கொடு. போலீஸ், கேஸ் என எதுவும் நிகழ்வதற்கு முன் போக வேண்டும்."

நீட்டிய என் கரங்கள் நீண்டுதான் இருந்தன. பிச்சைக்காரன் அந்தச் சிதைந்த சிற்பத்தின் சீரழிந்த நிலையைக் கண்டு கதறினானே தவிர, என் கையில் உடனே தரவில்லே.

காரோட்டி கேட்டான்: "இதன் பெற்றோரைத் தெரியுமா, உங்களுக்கு ஸார்?"

"தெரியும். காரை எடுங்கள்...."

கார் புறப்பட்டது.

'தாத்தா' என மழலை மாறாமல் என்னை அழைத்த அந்த முத்துச் சரவாயும் மோகனப் புன்னகையும் அழிய என் மடியில் துவண்டு கிடந்தாள் சிறுமி. "என் ராசாத்தி. என் ராசாத்தி...." என அவலம் நிறைந்து அரற்றும் பிச்சைக்காரனின் குரல் காற்றிலே கலந்து தேய்ந்து மறைந்தது.

அந்த வீட்டின் முன்னுல் கார் சென்று நின்றபோது யாரும் கவனிக்கவில்லே. காரில்

வந்தவரை அங்கேயே இருக்கச் சொல்லிவிட்டு நான் மட்டும் இறங்கினேன்.

'திடுமெனக் குழந்தையைப் பார்த்தால் அதிர்ச்சியாக இருக்கும். ஆகவே, நான் சொல்லிய பின் வாருங்கள்' என்று கூறிய நான் தள்ளாடித் தள்ளாடிச் சென்றேன்.

வெளிக் கதவிலிருந்து சிறு பாதையைக் கடந்து விட்டு வாசலுக்குச் செல்லுவதற்குள் நான் பட்ட அவஸ்தை சொல்லி முடியாது.

பள்ளியிலிருந்து திரும்பும் குழந்தையின் மழலைச் சொல்லையும் அன்றையப் பாடங்களைப் பற்றியும், பிறவற்றைப் பற்றியும் அது தத்தித் தத்திப் பேசும் தன் கிள்ளை மொழியில் கூறப் போகும் செய்திகளைச் செவிமடுக்க அதன் தாய் எத்தனை ஆவலுடன் காத்திருக்கிறாளோ? நான்கு வருடங்கள் ஒன்றாக ஒட்டி ஒட்டிப் பழகிய பின், நெஞ்சின் கதையைப் பிய்த்து அனுப்பியது போல் மகனை இந்த வருடம்தான் பள்ளிக்கு அனுப்பி விட்டு அவன் வருகின்ற நேரத்தை எத்தனை ஆவலுடன் எதிர்நோக்கிக் காத்துக்கொண்டிருக்கிறாளோ?

நெருப்புத் துளிகள் நெஞ்சைத் துளைக்க ஒரு வெறி என்னைத் தள்ளிக் கொண்டு போய்க் கதவருகே நிறுத்தித் தட்டவைத்தது.

கதவைத் திறந்த கரங்கள்.....

' அடேடே. அப்பா. வாங்கப்பா உள்ளே. ராஜீ....அப்பா வந்திருக்கார் பாரு.''

கோபாலின் முகத்திலே குதூகலம் குதி போட்டது. என் முகத்திலோ.....?

''வெய்யிலில் வந்த களைப்பு. வியர்வையாகத் துளித்திருக்கிறது. உள்ளே வந்து உட்காருங்கள் அப்பா....''

'மகனே! அது வெய்யில் தந்தது அல்ல. வேதனை தந்த வியர்வை என்பதை உனக்கு எப்படியடா உணர்த்துவேன்?' எப்படிச் சொல்வது என்பதை வார்த்தையில் விளக்கத் தெரியாமல் நான் தவித்துக் கண்களை மூடிக் கொண்டேன்.

''நமஸ்காரம் செய்கிறேன் மாமா.....!'' என என் கால்களில் விழுந்தாள் ராஜீ.

''இன்றைக்கு ஆபீஸ் லீவு. இன்றைக்கு நான் வீட்டிலே இருந்தது எத்தனை நல்லதாகப் போயிற்று? ஆறு வருடங்களுக்கு அப்பால், இன்று நீங்களாகவே வந்திருக்கிறீர்கள். வைராக்கியமாக இங்கு வரக் கூடாதென்று இத்தனை வருடங்கள் வாழ்ந்து விட்ட உங்களால் என்னைப் பார்க்காமல் இருக்க முடியவில்லை. இல்லையா... நீங்களாகவே வந்தது எங்கள் பாக்கியம்தான்....'' கரை காணாத களிப்பு எக்களிக்கும் குரலில் கூறிக்கொண்டே போன கோபாலைப் பார்க்கும்போது என் நெஞ்சு படபடத்தது.

'அட விவரம் புரியாத மகனே, என்னைக் கொஞ்சமாவது பேசத்தான் விடேன்' என்று எனக்குள் சொல்லிக் கொண்டு நான் வாயைத் திறந்த போது, ''ராஜீ. நம் கல்யாணத்துக்குக் கூட வராத அப்பா இப்போது தானாக வந்திருக்கிறார். இனிமேல் இவரை வெளியே விட்டு விடக் கூடாது. குழந்தை பிறந்த போது நான் போய்க் கூப்பிட்டும் கூட வராதவர் இப்போது மனமிரங்கி, மன்னித்து வந்திருக்கிறார். ஆமாம், ராஜீ. கலா எத்தனை மணிக்கு வருவாள்?'' என்றான் கோபால்.

''கோபால், கலா வந்து விட்டாளப்பா...'' நான் — கோபாலின் தந்தை — கலாவின் தாத்தா — சொல்ல வேண்டிய விஷயத்தைக் கோடி காட்டி விட்டேன்.

''வந்து விட்டாளா. எங்கே? நம்மால் செய்ய முடியாத காரியத்தைக் கலாக் கண்ணு செய்து விட்டாளே. தாத்தாவைச் சமாதானம் பண்ணி அழைத்து வரும் வழி அவளுக்கு எப்படித் தோன்றியதோ? கலா.... கலா....'' என்று அழைத்த கோபால், அவள் கதவுக்குப் பின்னால் ஒளிந்து விளையாடுவதாக எண்ணிக் கூப்பிட்டான்.

நான் நெஞ்சம் பிழியப் பிழிய அழுதேன். என்னைப் பார்த்து, எதிரே நின்ற ராஜீ கோவெனக் கதறி அழுதாள். கோபால் கண்களில் துளித்த நீரைத் துடைத்துக் கொண்டே, ''ஆறு வருடங்கள் கல்லாக இருந்த உங்கள் மனத்தில் தானாகக் கனிவு கண்டவுடன் நீங்களே எங்களைப் பூரணமாக மன்னித்துத்தானே அப்பா வந்தீர்கள்! உங்கள் உறுதியைத் தளர்த்தி எங்களை மன்னித்து ஒன்றாக வாழ வந்ததே எங்கள் பாக்கியம் அப்பா. இத்தனை ஆண்டுகள் விலகித் தனியே வாழ்ந்து இந்தப் பாசம் தருகின்ற பயனை அனுபவிக்காமல் இருந்துவிட்டோமே என நீங்கள் வருந்துவது தெரிகிறது. அழாதீர்கள் அப்பா. சிறு குழந்தை போல் கண்ணீர் விடாதீர்கள். மாறிய உங்கள் மனம் மறுபடியும் கோணாமல் நன்கு நடந்துகொள்ள நான் உங்கள் மகன் இருக்கிறேன். மருமகள், பேத்தி எல்லோரும் இருக்கிறார்கள். கண்ணீரைத் துடையுங்கள் அப்பா....'' என்றான்.

''என்னை மன்னித்து விடடா மகனே...'' என்று அலறிய நான் சாய்ந்தேன். என்னை அருகிலிருந்த சோபாவில் உட்கார்த்தி வைத்து விட்டுத் தேற்ற ஆரம்பித்தான். முகத்தைத் திருப்பிக் கொண்டு ராஜீ விசும்பினாள்.

அவர்கள் மீது இத்தனை நாட்கள் கொண்டிருந்த கோபம் குணமடைந்து, இவ்வளவு வருடங்களாக என் கண்ணை மறைத்திருந்த அறியாமையைக் கண்டு நான் அழுகின்றேன் என்று என் மகனும் மருமகளும் நினைத்து விட்டார்கள்.

''தாத்தாவைச் சமாதானம் செய்து வீட்டுக்கு அழைத்து வந்த கலாவே, அவரது அழுகையை நிறுத்தவும் வழி செய்வாள். கலா .... கலா .... '' என்றபடியே வாசல் பக்கம் போனான் கோபால்.

இனி அங்கு என்ன நிகழும் என்பது எனக்குத் தெரியும். பொங்குமாங்கடலின் புதுப் புனல் சுழற்சியும், அலைகடலின் ஆரவாரப் பேய்க் கூச்சலும், கன்றை இழந்த பசுவின் கதறலும், மகனைப் பறி கொடுத்த மாதாவின் பரிதாபக் கூக்குரலும் அங்கே — ஒன்றன் பின் ஒன்றாக அல்ல — ஒரே சமயத்தில் எழுந்தன.

உலகம் சொல்கிறது.

'மகன் தமக்குப் பிடிக்காத இடத்தில் மணம் செய்து கொண்டான் என்பதற்காக வைராக்கியமாக அவன் முகத்தில் விழிக்காத பெரியவர், பேத்தி காரில் அடிபட்டதும் அலறித் துடித்து, தம் வைராக்கியத்தையும் உதறி அவளை வீடு வரையில் கொண்டு வந்து சேர்த்திருக்கிறாரே, உறவிலே ஒன்றுக்கொன்று விட்டுப் போய் விடுமா என்ன?'

என் கல் மனத்தின் கனிவு தானாகப் பிறந்ததல்ல, தடி கொண்டு அடிக்கப்பட்டதின் விளைவு என்பது யாருக்குத் தெரியும்?



# அன்பு வழி

சி. ஆர். ராஜம்மா

“சலோ, சலோ” என்று வாசற்காப்போனின் குரல் ரோஸிக்குத் தெளிவாகக் கேட்டது. காவல் காக்கும் அவன், தான் வாங்கும் சம்பளத்துக்குக் கடமையைச் செய்கிறான். ரோஸிக்கு இது தெரியும். ஆனால் ராஜுவுக்கு எங்கே அதெல்லாம் தெரிகிறது? உரிமைக் குரல் எழுப்பியது அது. வாசற் காப்போனிடம் நடக்குமா இதெல்லாம். தனக்கு என்று தனியாக இருக்கும் நாற்காலியில் உட்கார்ந்து ரொட்டியும் பாலும் சாப்பிட முயன்ற அதற்கு மனம் கொள்ளவில்லை. ராஜுவை வாயிற் காவலன் அடித்து விடாமல் இருக்க வேண்டுமே என்று உள்ளம் பதைத்தது. எழுந்து ஓடிப் போய் ராஜுவை வரவேற்க முடியாத நிலை. எதிர் மேஜையில் ரோஸியினுடைய எஜமானனும் சாப்பிட்டுக் கொண்டிருந்தார். குழந்தைக்கு மேலாகக் கொஞ்சும் தன்னிடம் கோபம் கொண்டு விட்டால் விரோதியை விடக் கொடுமையாக நடந்து கொள்ளத் தவற மாட்டாரே. ரோஸி உடலை ஒருமுறை சிலிர்த்துக் கொண்டது.

நிமிஷ முட்கள் நகர்ந்தன. ஜன்னல் வழியாகத் திருஷ்டியைச் செலுத்திய ரோஸிக்கு மகிழ்ச்சி தாளவில்லை. இதோ ரோஸியின் எஜமான் சாப்பிட்டு முடித்து விட்டார். ரோஸி ஒரு வாரமாகவே சரியாகச் சாப்பிடுவதில்லையாம். வந்து பார்க்க வேண்டுமாம். ரோஸியின் டாக்டருக்குப் போன் செய்கிறார் அவர். ரோஸியின் நோயை வைத்தியத்தால் கண்டுபிடிக்க முடியுமா, என்ன? இனிமேல் கொஞ்ச நேரம் ரோஸிக்கு ஓய்வுதான். எஜமான் தூங்கப் போய் விடுவார்.

வாசற்புறத்தால் வர முடியாது என்று கண்ட ராஜு பின்புறத்து மதிற்சுவர் ஏறிக் குதித்து வந்திருந்தது. தோட்டத்தில் சத்தம் போடாமல் ஆவலே வடிவாகத் தேடிக் கொண்டிருந்தது ரோஸியை.

ரோஸி ஓட்டமாக ஓடியது தோட்டத்துப் பக்கம். ராஜுவும் அதைக் கண்டுவிட்டது. இரண்டும் விநோதக் குரலில் பேசிக் கொண்டன. நாய்கள்தானே இரண்டும், உயர்ந்த முறையில் வளர்க்கப் படுவதால் மட்டும் ரோஸிக்குப் பேச வந்துவிடுமா என்ன? பாவம்! இரண்டும் ஒன்றுக்கொன்று மேலே ஏறிக் குதித்து, கட்டிக் கீழே புரண்டு விளையாடின. ஒன்றுக்கொன்று கடித்துக் கொண்டாலும் காயமோ ரத்தமோ சிறிதளவும் ஏற்படவில்லை உடலில்.

ரோஸியாகப் போய் ராஜுவை ஒன்றும் பழக்கம் செய்துகொள்ளவில்லை. எஜமான் வெளியே போகும் போது அவருடன் போகும், வரும் அது. சங்கங்களுக்கும், பொதுக் கூட்டங்களுக்கும், ஆண்டு விழாக்களுக்கும்கூடப் பலமுறை அவருடன் போயிருக்கிறது ரோஸி. எஜமானைப் பார்க்க அவரைப் போல் சம அந்தஸ்துள்ளவர்கள் வரும்போது சிலசமயம் தங்கள் நாய்களையும் அழைத்து வருவார்கள். எஜமான் அவைகளுடன் பழக ரோஸியை அனுமதிப்பார். ஆனால் ரோஸி உள்ளன்புடன் பழகுவது போல் அவைகளுடன் பழகுவது கிடையாது. தாங்களும் உயர்ந்த ஜாதி நாய்தான், பெரிய இடத்தில் பழகுகிறவர்கள் தான் என்ற தோரணையில் இருக்கும் அவை.

ஊருக்கு வெளியே எஜமானுக்குச் சொந்தமான தோட்டம் உண்டு. தோட்டத்தை வயதான கிழவனும் அவனுடைய மகளும் பொறுப்பாகக் கவனித்து வந்தார்கள். எஜமான் எப்போதாவதுமுன்பெல்லாம்போவார். அப்புறம் அடிக்கடி ரோஸியை மட்டும் அழைத்துக் கொண்டு நடந்தே போவார். கிழவனுக்கு வைசூரி வந்து கண்ணும் காதும் பனைந்துப் போய் விட்டதால் அவனுடைய மகள் மட்டும் தோட்டத்தைக் கவனித்துக் கொள்வது சரியாக இருக்காது என்ற எண்ணத்தில்தான் எஜமான் போகிறார் என்று முதலில் எண்ணியது ரோஸி. அப்புறம்தான் தெரிந்தது. தோட்டத்தை மட்டும் அல்ல, அந்தப் பெண்ணையும்கூடத்தான் எஜமான் கவனித்துக் கொள்கிறார் என்று. ரோஸிக்குப் பரம சந்தோஷம். எஜமானின் பங்களாவில் தனக்கென்று எஜமானி யாருமில்லாதது அதற்கு ஒரு குறைதான். வீடு நிறைய வேலைக்காரர்கள் இருந்தாலும் ஓர் எஜமானியைப் போல் ஆகுமா?

மரத்தடியில் எஜமான் மடிமேல் சாய்ந்து கிடக்கும் தோட்டக்காரன் மகளைக் காணும் ரோஸி. எஜமான்தான் எத்தனை சிரித்துச் சிரித்து அவளுடன் பேசுகிறார். அவருக்கேற்றவள்தான் அவள். சிரிக்கும் வாய், சிரிக்கும் கண்கள், சிரிப்பால் குலுங்கும் பூரிப்பான உடல், சிரித்து மயக்கும் அழகு; “புவனு...” என்று இடையே கயிற்றுக் கட்டிலில் கிடக்கும் கிழவனின் குரல் கேட்டதும் மின்னலென மறைவாள் அவள்.

ரோஸிக்கு அங்கேதான் ராஜுவுடன் பழக்கம் ஏற்பட்டது. ராஜு தோட்டத்தைக் காவல் காக்கும் நாய். கைதேர்ந்த பழக்கப்பட்ட சித்திரக்காரன் ஒருவன் கவனத்துடன் வரைந்த சித்திரத்தைப் போல் கம்பீரமாக இருக்கும் ரோஸி. அதைக் கண்டு அதைப் போலவே வரைய எண்ணும் கற்றுக்குட்டி ஒருவருடைய சித்திரம் போன்றது ராஜுவின் தோற்றம். ரோஸி ராஜபாளையம் நாயாம். புவனு செல்லமாக அதை அழைக்கும் பெயர் ராஜு. அதற்கு ஊர் ஏது? யாதும் ஊரே யாவரும் கேளிர் என்பதுதானோ? மயிர்கள் அடர்ந்த வாலோ, பயங்கரமான

நாக்கோ ராஜுவுக்கில்லே. மற்றப்படி இரண்டும் நாய்கள்தான். ரோஸியை விலை கொடுத்து வாங்கினர் அதன் எஜமானர். அதைக் கவனித்துக் கொள்ளவென்றே தனியாட்கள் உண்டு. ராஜு அப்படியல்ல. புவனு ஏதோ ஒரு குப்பைமேட்டிலிருந்து அதைக் கொணர்ந்து வளர்க்கிறாள். அதனால் என்ன? மற்ற நாய்களைப் போல் பெருமை பாராட்டிக் கொள்ளவில்லை ராஜு. ரோஸியைக் கண்டது முதல் அதனுடன் பழகுவது தன்னுடைய பெரும் பாக்கியமாக எண்ணிக் கொண்டது போல் நடந்துகொண்டது. ரோஸிக்கு இது ரொம்பவும் பிடித்தமான ஒன்று.

ரோஸியின் எஜமானருடைய கொள்கையை எல்லாருமே போற்றினர்கள். மனிதர் எல்லாரும் ஓர் இனம், இதிலே ஏற்றத் தாழ்வு கிடையாது என்பதாம் அவர் கருத்து. பெரிய பெரிய கூட்டங்களிலே எல்லாம் கூட இந்த ஒரு விஷயத்தை வைத்துக்கொண்டு நூற்றி முப்பது நிமிஷங்கள் வரை கூட விளாசித் தள்ளுவாராம் அவர். கூட்டத்தினரின் கைதட்டல் மேடையை அதிர வைக்குமாம்.

ரோஸியின் எஜமானர் அடிக்கடி சொல்வார். ''நம் இரண்டு பேர் உடம்பில் ஓடும் ரத்தமும் சிவப்பாகத்தானே இருக்கிறது, புவனு. நீ ஏழையின் மகள் என்பதால், அந்தஸ்தில் தாழ்ந்தவள் என்பதால் உன் ரத்தம் வித்தியாசப்பட வில்லையே? உனக்கு ஏன் என்மேல் இவ்வளவு சந்தேகம்? எட்டியிருந்தே பழகுகிறாய். ஊரைத் திருப்பப் பாடுபடும் நான் என் வாழ்க்கையில் இம்மாதிரி ஒரு புரட்சிகரமான மாறுதலை அவசியம் செய்தாக வேண்டும்'' என்பார். அவளுடைய இதயம் போலவே அந்த இமைகளும் படபடக்கும்.



ராஜுவே இப்போதெல்லாம் ரோஸியைத் தேடிக் கொண்டு வர ஆரம்பித்தது. அவளுக்குப் பல வேலைத் தொல்லைகள். அதனால் அவளைத் தேடிக் கொண்டு முன்னைப் போல் வரமுடிவதில்லை. ரோஸி அந்த நாளை வெகு ஆவலுடன் எதிர்பார்த்திருந்தது. 'அந்த வீட்டு எஜமானியாகப் புவனு ராஜு பின் தொடர வரும் நாளைத்தான் எதிர்பார்த்தது. அவள் கூப்பிட்ட குரலுக்குத் தானே ஓட வேண்டும்; அவள் இடும் வேலைகளைச் செய்வதிலேயே ஒரு பெருமை உண்டு; அவள் அந்த வீட்டுக்கு வந்த பின் எஜமானர் முன்னைப்போலவே கவனிப்பார் தன்னை; கவனிக்காது போனாலும் பாதகமில்லை; தனிமை என்பது வராது; ராஜுதான் உடன் வந்து விடப் போகிறதே. கூர்க்கா இப்போது போல் அப்போது அதை விரட்ட மாட்டான்.'

ராஜுவை எண்ணியபோது ரோஸிக்கு ஒருபுறம் பெருமை



ஆசிரியர்: பாலு! கார்டு சிவப்புக் கொடி காட்டினால் ரயில் நிற்குமா? போகுமா?

பாலு: நிற்கும் சார்!

ஆசிரியர்: பச்சைக் கொடி காட்டினால்?

பாலு: போகும் சார்!

ஆசிரியர்: இரண்டு கொடியையும் காட்டினால்....?

பாலு: நின்னு நின்னு போகும் சார்!

யாக இருந்தாலும் மற்றொரு புறம் சொல்லிக் கொள்ளமுடியாத ஒருவிதக் குறை இருக்கத்தான் செய்தது. 'ராஜுவுடன்ஜோடி சேர்ந்து நானும் சக நண்பர்களைப் போய்ப் பார்க்க முடியுமா? ஏன் முடியாது? தன் எஜமானியாக வரப் போகிறவள் மட்டும் இப்போது எப்படி இருக்கிறாள்? கண்டாங்கிச் சேலையும், அள்ளிச் செருகிய கொண்டையுமாகவா பங்களாவில் இருப்பாள்? இல்லையே. ராஜுவும் திருந்தி விடுவான் வாலைக் குழைத்துக் கொண்டு ஓட மாட்டான். கம்பீரமாகக் குரைக்கவும், தாவவும் செய்யும். என்னைப் போன்ற ஆகார வகைகள் அவன் உடம்பிலும் மினுமினுப்பை உண்டாக்கிவிடும். எச்சிற்கலை விழுந்த சத்தம் கேட்டவுடன் ஓடவும், சாம்பற் குழியில் படுத்து அரைக் கண் மூடிக் கற்பனை செய்யவும் விடக் கூடாது. சோபாவில் தன்னைப் போல் ஜம்மென்று படுத்துக் கிடக்கப் பழக்கப் படுத்த வேண்டும். எப்படியானாலும் ராஜுவின் அன்புக்கு இன்னொருவனின் அன்பு ஈடாகுமா?' என்ற இன்ப நினைப்பிலேயே ரோஸிக்குக் கண்களில் நீர் முட்டியது.

இரண்டு நாட்களாக எஜமானனைக் காண வில்லை. வேலைக்காரர்கள்தான் கவனித்துக் கொண்டார்கள் அதை. ரோஸிக்குப் பரம சந்தோஷம். ராஜுவுடன் தாராளமாக விளையாடியது. அன்று அவை இரண்டும் விளையாடிக் கொண்டே மாந்தோப்பு வரை சென்றன.

மாம்பூக்கள் பூத்திருந்த சமயமல்லவா, தோட்டத்திலே வண்டுகளின் ஆர்ப்பாட்டம் அதிகமாயிருந்தது. ஒரு மரத்தடியில் சாய்ந்த நிலையில் உட்கார்ந்திருக்கும் புவனாவைக் கண்டது ரோஸி. அவள் அழுதிருக்கிறாளோ? ஆம். அழுதிருக்க வேண்டும். கண்களிலிருந்து கன்னத்தில் படிந்திருக்கும் கண்ணீர்க் கறை தெளிவுபடுத்துகிறதே அதை. அந்தச் சிரிக்கும் கண்களுக்கு அழக் கூடத் தெரியுமா?

ரோஸியைக் கண்டதும் சாம்பிய முகம் மலர, சோர்ந்து கிடக்கும் உடல் பரபரக்க எழுந்தாள் அவள். சுற்றுமுற்றும் பார்த்தாள். ஏமாற்றத்தால் அவள் உடல் மேலும் சோர்ந்து போயிற்று. ரோஸிக்கு முதலில் அவள் செயல் விளையாட்டாக இருந்தது. அப்புறம் விசனமாக இருந்தது. தன்னைக் கண்டதும், தன் எஜமானனையும் அவள் எதிர்பார்த்ததில் என்ன தவறு? ஆனால் அவருக்குத்தான் தலை போகிற வேலை இருப்பது போல் பாடுபடுகிறாரே. 'கொஞ்சம் பொறு. உன்னைத் தன்னுடையவளாக்கி, என் எஜமானியாக்குவார்' என்று கூறத் தோன்றியது ரோஸிக்கு. ஆனால் பேச முடியுமா?

ரோஸிக்கு அன்று இருப்பே கொள்ளவில்லை. வீட்டில் வருவோரும், போவோருமாக இருந்தார்கள். கடைசியில் ரோஸியின் எஜமானர் வந்தார். கூட வருவது யார்? ஐயோ! ரோஸிக்கு உலகமே சுற்றுவதுபோலிருக்கிறதே. அந்த வீட்டின் எஜமானி இனி அவள்தானா? ரோஸிக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை. அவள் கொஞ்சமாவது லட்சியம் வைத்து அதைத் தொட்டுப்பார்க்க வேண்டுமே? ஊஹூம். புவனா கண்ணீர் விட்டதன் அர்த்தம் புரிந்தது இப்போது ரோஸிக்கு.

'லொள்..லொள்..'

அதோ ராஜுவின் குரல் கேட்கிறதே. அவன் மனிதர்களைப் போல் நன்றி கெட்டவனில்லை. அதோ தேடிக் கொண்டு வருகிறான். ஆ! அவன் பின்னால் வருவது யார்? ஆம். ரோஸி கற்பனை செய்து வைத்திருந்த மாஜி எஜமானிதான். அவள் உள்ளே வரக் காவற்காரனிடம் அனுமதி கேட்டுக்கொண்டிருப்பதும், அவன் மறுப்பதும் ரோஸிக்குத் தெளிவாகத் தெரிந்தன. ரோஸியின் ஓர் உறுமலில் வந்தவர்கள் ஓடியிருப்பார்கள் காததூரம். ஆனால் ரோஸி சும்மாவே இருந்தது.

மாடியிலிருந்து எஜமானனின் குரல் கேட்டது. அவர்களைவிடச் சொல்லிக் காவற்காரனுக்கு உத்தரவிட்டார் அவர். வீட்டின் புது எஜமானியும், அவளுடன் வந்த விருந்தினர்கள் எல்லோரும் ஊரைச் சுற்றிப் பார்க்கப் போயிருக்கிறார்களாம். கீழே இறங்கி வந்து வாசல் வராந்தாவிலேயே அவளை வரவேற்றார் அவர். ரோஸி சிலிர்த்துக் கொண்டு நின்றது. ராஜு சண்டைக்குத் தன்னைத் தயார் செய்து கொண்டது. ஆறறிவு படைக்காவிட்டாலும் அவைகளுக்கும் ஓரளவு விஷயம் புரியும் போலும்.

"கடைசியில் நீ சொன்னதுதான் பலித்தது. இந்தத் திருமணம் நடக்குமா? நடக்குமா? என்று சந்தேகப்பட்டாய். அப்படியே ஆயிற்று" என்றார் அவர் ஒய்யாரமாகச் சோபாவில் சாய்ந்து கொண்டு.

"ஏழையின் உடம்பில், பணக்காரன் உடம்பிலும் ஒரே ரத்தம் தான் ஓடுகிறது என்று நீங்கள் சொன்ன சொல் என்னவாயிற்று?" என்றாள் புவனா தைரியமாக.

ஏதோ ஒரு பெரிய ஹாஸ்யத்தைக் கேட்டது போல் அவர் பெரிதாகச் சிரித்தார். "ஆமாம், ஆமாம், நான் அப்படிச் சொன்னது உண்மைதான். ஆனால் பார். ரத்தத்தைப் பற்றி நன்றாகத் தெரிந்தவர்கள் என்ன சொல்கிறார்கள் தெரியுமா? ரத்தத்தில் கூடப் பல இனங்கள் உண்டாம். ஒரு ரகத்துடன், இன்னொரு இனமான ரத்தம் சேராதாம். ஒரு

நோயாளிக்கு ரத்தம் தேவையானால் அதே மாதிரியான ரத்தம்தான் உதவுமாம். எப்படியிருக்கிறது பார்த்தாயா விஷயம்?'' என்று கூறினார் அவர்.

அவளுடைய சிவக்கும் கண்கள் ரத்தமாகச் சிவந்தன. ''அப்படியானால் நீங்கள் கூட்டங்களில் பேசுவது, உங்கள் கொள்கை, நீங்கள் என்னிடம் பேசிய பேச்சுகள் எல்லாம்....'' உணர்ச்சியில் மூச்சடைத்தது அவளுக்கு.

கைதட்டிக் கரகோஷம் செய்ய வேண்டும் போல் இருந்தது ரோஸிக்கும், ராஜுவுக்கும். ஆனால் அப்படிச் செய்ய முடியுமா?

அவர் அவளுடைய பேச்சைக் கேட்டுவிட்டு வெகு அலட்சியமாகச் சிரித்தார். பூனை ஒன்று கண்டெலியைப் பார்ப்பது போன்ற பாவத்தில் பார்த்தார் அவளை.

''ஓ....நீ இத்தனை தூரம் தெரிந்து வைத்துக் கொண்டிருக்கிறாயா?' மற்றவர்களைப் பற்றித் தாஷண்யமாகப் பேசுகிறேன்—பரிகாசம் செய்கிறேன், கூட்டம் சேருகிறது. கை தட்டலும், பூமாலையும் கிடைக்கின்றன. கொள்கை வேறு, குடும்பம் வேறு என்று உனக்குத் தெரியாதா? ஹூம், இனிமேலாவது தெரிந்து கொள். கடைசியில் உன்னிடம் பேசிய பேச்சுகளுக்கு விளக்கம் கேட்கிறாயா? அது கடந்த கால இன்பக் கனவு என்றோ, கற்பனை என்றோ எண்ணிக்கொள். இன்னும் என்னவேண்டும்?'' என்றார் ரோஸியின் எஜமானர்.

அவள் கொஞ்ச நேரம் வரை விக்கி விக்கி அழுதாள். பெண்மையின் புனிதத் தன்மையை அவரிடம் பறிகொடுத்து விட்டு, தாய்மையைத் தாங்கி நிற்கும், அந்த ஏழைப் பெண் வேறு என்னதான் செய்ய முடியும்?

''கடைசியில் தோட்டத்தைக் காவல் காக்கும் வேலையைக் கூட எங்களிடமிருந்து பிடுங்கிக் கொள்ளப் பார்க்கிறீர்களே, இது நியாயமா? தாயற்ற நான், இந்த நிலையில், வயதான தந்தையுடன் எங்கேதான் போவது?'' என்றாள் அவள்.

''என்னிடம் கேட்டால் .... இது நீயே முடிவு செய்ய வேண்டியது. நீ இந்த ஊரில் இருப்பது உனக்கும், எனக்கும் எப்போதுமே ஆபத்து. ஒரு வார காலம் அவகாசம் கொடுத்திருக்கிறேன், நீங்கள் போக. வேண்டுமானால் என்னால் இது ஒன்றுதான் செய்ய முடியும். எடுத்துக்கொள். இதனால் சாதிக்க முடியாதது ஒன்றுமே பூமியில் இல்லை'' என்று கூறி நோட்டுக்கட்டு ஒன்றை மேசையின் மேல் விசிறிப் போட்டார் அவர், குரைக்கும் தெரு நாய்க்கு எலும்புத் துண்டு போடுவது போல்:

அவள் வெறிச் சிரிப்பு ஒன்று சிரித்தாள். ''இந்தப் பணம் இருப்பவர்களிடம் பண்பு இருக்காது. எனக்குத் தேவை பண்புதான். ஆகவே இது வேண்டாம்'' என்று கூறியவள் விருட்டென்று நடந்தாள் வெளியே.

''பெரிய பண்புக்காரி இவள்!'' என்று கூறிக் கோணல் சிரிப்புடன் அந்த நோட்டுக் கற்றையை எடுத்து உள்ளே வைத்தார் அவர். திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே பெரிய குரல் எழுப்பிக் கொண்டு ராஜு அவளுடன் ஓடியது. ரோஸிக்கும் அந்தமாதிரி மனம் விட்டுக் கதற வேண்டும் போலிருந்தது. ஆனால் அதன் எஜமானர் அதை அடக்கி விட்டார். பெரிய மனிதரிடம், நாகரிகத்தில் வாழும் அதற்கு அந்தச் சுதந்திரம் எப்படிக் கிடைக்கும்?

ஒரு வாரத்துக்குப் பின் பிரசித்தமான மிருக வைத்திய நிபுணர்கள் எல்லோரும் ரோஸியை வந்து பார்த்த வண்ணமாக இருந்தார்கள். உடல் நோய்க்கு ஊசி போட்டனர். ஆனால் உள்ளத்து நோய்க்கு.......

ராஜுவின் எஜமானி துயர மேலிட்டாள் போன பின் ரோஸியின் மனம் துடித்த துடிப்பு ....... அப்புறமும் ராஜு பலமுறை ரோஸியைத் தேடிக் கொண்டு வழக்கம்போல் வரத்தான் செய்தது. ஆனால் ராஜுவுக்குக் கிடைத்ததோ செம்மையான அடிதான். ரோஸியைக் கட்டுப்பாட்டில் வைத்தார்கள். அது உயர்ந்த ரகமாம். ராஜுவுடன் சேரக் கூடாதாம். தோட்டத்துச் செடிகளையே, நல்ல ஜாதி ரோஜா, நல்ல ஜாதிப் பிச்சிப்பூ, என்று பாகுபாடு பண்ணும் எஜமான், பழங்களிலே கூட நல்ல ஜாதிப் பழம் என்று பிரிக்கும் எஜமான் தன்னையும் ராஜுவையும் பிரிப்பதைப் பெரிதாக எண்ணவில்லை ரோஸி. ஆனால்.......

அன்று எஜமானுடன் காரில் போகும் போது வயிற்றில் சிசுவின் சுமையுடன், கந்தல் மூட்டையைத் தோளில் சுமந்து தள்ளாடும் தந்தையின் கையில் கம்பின் ஒரு நுனியைக் கொடுத்து மற்றொரு நுனியைத் தான் பிடித்த வண்ணம் ஊரைத் தாண்டிப் போகும் மாஜி கற்பனை எஜமானியைக் கண்டது ரோஸி. கூடவே அதன் கண்கள் தேடின. ராஜு இல்லை. ஐயோ! நம் இனத்துக்கு உயிரான நன்றியையும் நீ மறந்து விட்டாயா?

நான் நடந்தது எல்லாவற்றையும் கனவாக்கி, காவல் காத்து, எஜமானை மகிழ்விக்கும் கடமையைச் செய்கிறேனே என்று தன்னையும் மறந்து தன் பாஷையில் கூச்சலிட்டது ரோஸி. அதனுடைய எஜமான் அதை அடக்கி விட்டார்.

ஆனால் காரில் போகும்போது வேறு ஓர் இடத்தில் ராஜுவைக் கண்டது ரோஸி. அதுவும் காரில்தான் பிரயாணம் செய்தது. பெரிய வண்டியில் தன் இனத்தவர் பலருடன் கம்பி வழியாக ரோஸியைக் கண்ட ராஜு கத்திய கத்தல் கொஞ்சமல்ல. இந்த ஊரிலேயே அவள் இருந்தால் தனக்குத் தீங்கு என்று எண்ணிய எஜமான் ராஜுவாலும் ரோஸி இனமறிய குழந்தைக்குத் தாயாகி விடுமோ என்ற எண்ணத்தில் எழுதிப் போட்டு நாய் பிடிப்பவர்களால் அதைப் பிடிக்கச் செய்து விட்டார் என்பதைத் தெரிந்து கொள்ள வில்லை ரோஸி. ஆனால் தன் அன்பனுக்கு ஏதோ ஆபத்து என்று மட்டும் அதன் உள்ளுணர்வு கூறியது. அன்றே ஆகாரமில்லாமல் படுத்ததுதான் அது.

வைத்தியர்களின் திறமையைப் பொய்யாக்கிவிட்டு அதோ ரோஸி மெள்ளக் கண்ணை மூடிக் கொண்டிருக்கிறது. அதனுடைய எஜமான் அதே சிந்தனையில் மூழ்கியிருக்கிறார்: மமதை கொண்ட அந்த மனத்தை அதன் சாவு உருக்குகிறதா — அதை உருகச் செய்யும் மருந்தும் உண்டா? இல்லை. இதைப் போன்ற ஜாதி நாய் அழகானது. இனி எங்கே கிடைக்கும், எப்படிக் கிடைக்கும் என்று சிந்திக்கிறாரா?

# எப்படி சந்தோஷமுள்ள "முதலாளி-காரோட்டி" யாக இருப்பது?

திறமுள்ள ஸ்பார்க் ப்ளக்குகள் தரமான எஞ்சின் இயக்கத்தை உறுதிப்படுத்துகின்றன.

மோட்டார் வண்டிகளின் தரமான இயக்கத்துக்கும் சிக்கனத்துக்குமான தொழில் நுட்ப முன்னேற்றம ஸ்பார்க் ப்ளக்குகளின் மின்சார, யந்திர, ரஸாயன, அனல் திறம் வேண்டிக் கடும் கோரிக்கைகளை விதிக்கிறது.

"மைகோ" ஸ்பார்க் ப்ளக்குகள் இந்தப் பெருகிய தேவைகளைப் பூர்த்தி செய்வதுடன் தரமான இயக்கத்தையும் உறுதிப்படுத்தி 'முதலாளி-காரோட்டி'களுக்கும் மோட்டார் ஓட்டுதலைக் கவலையற்றதாக்குகின்றன.








மோட்டார் இண்டஸ்ட்ரீஸ் கம்பெனி லிமிடெட், பெங்களூர்.

தென் பிராந்திய விநியோகஸ்தர்கள்: மெஸர்ஸ் ரானே (மதராஸ்) லிட். நெ. 5, பட்டுல்லோஸ் ரோடு, மௌண்ட் ரோடு, சென்னை - 2
மெஸர்ஸ் பிரீமியர் ஏஜன்ஸீஸ், 141, ராஷ்டிரபதி ரோடு, செகந்திராபாத்

பிரபல பல்வைத்திய நிபுணர்கள் நிரூபித்துள்ளனர்

# கால்கேட் குளோரோபில்




## ஈறுகளை பலப் படுத்து கிறது

வாய் நாற்றத்தை அதி தீவிரமாய் ஒழிக்கிறது! "குள் மோல்கோப்" பரிசோதனையில், கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட், வேறெந்த சாதாரண பற்பசையையும்விட மிகத்தீவிரமாக வாய் நாற்றத்தை ஒழிக்கிறது என்பது நிருபணமாயுள்ளது.

சொத்தையாக்கும் கிருமிகளை ஒழிக்கிறது! கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட் ஒவ்வொரு முறையும் சாப்பிட்டவுடன் தேய்ப்பதால், பற்களை சொத்தையாக்கும் கிருமிகள் அழிகின்றன.

கால்கேட்டின் பிரத்தியேகமான சேர்க்கை முறையைக் கொண்ட குளோரோபிலின் பூரண பலனை அடையுங்கள்.... கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட் அல்லது கால்கேட் குளோரோபில் டூத்பவுடர் வாங்குங்கள்!

கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை தினமும் தேய்ப்பதால், தீவிரமான குளோரோபிலின் பூரண தன்மையை அடைந்து, ஈறுகள் உறுதியாகவும் ஆரோக்கியமாகவும் இருக்க உதவுகிறது. உன்னதமான இந்த குளோரோபில் டூத்பேஸ்ட், சிறந்த பற்பசை, பற்பொடி முதலியவை தயாரிப்பதில் மிக்க அனுபவங்கொண்ட உலகிலே மிகப்பெரிய ஸ்தாபனத்தால் தயாரிக்கப்படுகிறது!

வேறு எந்த பற்பசையிலும்
இதைவிட அதிக வீரிய குளோரோபில்
இல்லை — குழந்தைகள் அதன்
பெப்பர்மின்ட் வாசனையை மிகவும்
விரும்புகிறார்கள்!







CTPA-G-10 TAM.

# குறிஞ்சி மலர்



"தமிழ்ப் பெண் குலத்தின் வளை ஒலிக்கும் கைகளில் தான், வீரமும், ஈரமும், வெற்றியும், வாழ்வும் பிறந்து வளர்ந்திருக்கின்றன. அந்தக் கைகளில் வளையோடு தமிழும் வாழ்ந்தது. தமிழோடு தமிழ்ப் பண்பும் வாழ்ந்தது. தமிழ்ப் பண்போடு குடியும் வளர்ந்தது" என்று தமிழ்ப் பெண் குலத்தின் பெருமையைக் கூறிக்கொண்டு "குறிஞ்சி மலர்" என்னும் நவீனம் பிறந்தது. அதன் கதாநாயகியான பூரணி அறிவுப் புயலாய் வீசி மறைந்த அவ்வையாரைப் போலவும், நரையாத குழலும், திரையாத முகமும், குறையாத நிறைவும் கொண்டு வரையாத சித்திரம் போல் அழகுடன் கன்னியாகவே வாழ்ந்து நிறைவு கண்ட நிலவுநிலையைப் போலவும் இருந்தவள். "குறிஞ்சி மலர்" ஏனைய நவீனங்களைப் போல் வெறும் கற்பனைக் கதையாக இராமல், கருத்துக் கருவூலமாயிருப்பதால் அதை நாடக மேடையில் அரங்கேற்றுவது அவ்வளவு எளிதான காரியமல்ல. மேலும் "கல்கி"யில் தொடர் கதையாக வந்து வாசகர்களின் உள்ளங்களில், நிறைந்து விட்ட சிறந்த நவீனம் அது.

அடுத்து வரும் புதிய தலைமுறையினருக்கு எழுத வேண்டிய புதிய சரித்திரத்தில் எந்தத் தமிழ்ப் பெண்ணைப் பற்றி எழுதுவது? எப்படி எழுதுவது? எதை எழுதுவது என்ற சிந்தனையின் அடிப்படையில் திரு நா. பார்த்தசாரதி அவர்கள் "குறிஞ்சி மலரை" எழுதத் தொடங்கினார். அந்தச் சிந்தனை, நூல் வடிவில் வெற்றி பெற்று விட்டதனாலேயே மேடையில் வெற்றி பெற்றுவிடும் என்று என்னால் நம்ப முடியவில்லை. ஆனால் மேடையில் பூரணியைப் பார்த்ததும் எனக்குப் பூரண நம்பிக்கை பிறந்து விட்டது. குமாரி சசிகலா அந்தப் பாத்திரத்தை ஏற்று மிகப் பொருத்தமாக நடித்தார். தமிழின் சிறப்பை எடுத்து மேடையில் விளக்கிய போதும், அரவிந்தனோடு உள்ளம் ஒன்றிய போதும் அவர் நடிப்பு நம்முடன் ஒன்றி விட்டது.

பிரசுரகர்த்தர் மீனாட்சிசுந்தரம். பூரணி–அரவிந்தன் காதலை வளர்த்ததோடு "குறிஞ்சி மலர்" கதையையும் வளர்த்தவர். அவரையன்றிக் கதையில்லை. அந்தப் பாத்திரத்தை ஏற்க ஜி. முத்துதான் தகுந்தவர் என்பது மேடையில் நன்கு நிரூபணமாகி விட்டது.



அரவிந்தன் பாத்திரம் மிகவும் அழகானது என்பதோடு நெறி பிறழாத ஓர் உத்தமனுடையது என்பதையும் நினைவில் வைக்க வேண்டும். எம். கோவிந்தராஜன் அதை ஏற்றுத் தகுந்த முறையில் நடித்தார். கே.டி.கே. துரைராஜ் அரவிந்தனின் தோழன் முருகானந்தமாக வருவதற்கு மிக மிகப் பொருத்தமானவர் என்பது அவரது நடிப்புத் திறமையின் மூலம் நன்கு வெளிப்பட்டது.

வசந்தாவாக வரும் மீனுவின் தொடிப்பும், துடிப்பும், சாகஸமும், ஆங்கிலப் பேச்சும் மிகவும் கவர்ச்சியாயிருந்தன. மங்களேசுவரி அம்மாளின் பாகம் மிகவும் கம்பீரமானது. அதை ஜானகி ஏற்று அழகாக நடித்தார்.

டைரக்ஷன் பொறுப்பு நாடக மேடையில் மிகவும் சிரமமானது. நாடக டைரக்டர் கே. எஸ். நாகராஜன் அந்தப் பொறுப்பை நிறைவேற்றி விட்டார். ஹரிஹரன், கோதண்டம் இருவரும் நாடகத்தின் இன்றியமையாத இசை மழை தூட்டி இனிக்கச் செய்தனர். பாட்டுக்குச் சுருதி எத்தனை அவசியமோ அத்தனை அவசியம் நாடகத்துக்குக் காட்சி அமைப்பு. "குறிஞ்சி மலர்" நாடகத்தில் அது அதியற்புதமாய் அமைந்து விட்டது. அரவிந்தன்–பூரணி காதல் காட்சி அதற்கு ஓர் எடுத்துக்காட்டு.

சோகரஸம் ததும்பும் நாடகத்தில் சாரநாத், சீனிவாசன் இருவரும் ஹாஸ்ய விருந்தளித்தார்கள்.

"குறிஞ்சி மல"ரை நாடகமாக்கியவர், மாலி. நாடக வசனம் நன்று யிருந்தது. ஆனால், அரவிந்தனுக்கு அமரத்வம் அளிக்க ஆசிரியர் விஷ ஜுரத்தைப் பயன்படுத்திக் கொண்டார். நாடகத்தில் அவனை மகாத்மா சிலைக்கெதிரில் யாரோ குத்திக் கொன்று விடுவதாகக் காட்டப்படுகிறது. நாடக ஆசிரியர் நாடகத்துக்கு இந்த மாற்றம் அவசியமெனக் கருதினார் போலும்,

எப்படியிருந்தாலும் நல்ல கதையை எடுத்துக் கொண்டு நல்ல முறையில் நாடகமாக்கி அதைச் சிறப்பாகவும் அரங்கேற்றிய திருவேட்டீசுவரன்பேட்டை, துர்க்கா நாடக மன்றத்தாரை மனமாரப் பாராட்ட வேண்டியது தான்.

— காந்தன்

# தாயின் நினைவில் அரிய பணி

“புதல்வரால் பொலிந்தாள் (உ)தந்தை” என்று ஓர் அரிய அடி கம்பராமாயணத்தில் வருகிறது. டாக்டர் சந்தோஷம் அவர்களின் பெற்றோரையும் பற்றி அப்படித்தான் கூற வேண்டியிருக்கிறது.

சென்னையிலிருந்து இருபது மைல்களுக்கு அப்பால் தாம்பரத்துக்கு அருகில், டாக்டர் சந்தோஷம் அவர்கள் தமது தந்தையாரின் பெயரில், டி.பி. என்னும் க்ஷய வியாதியஸ்தர்களுக்குச் சிகிச்சை செய்ய 1946-ல் ஓர் மருத்துவ விடுதியைத் தொடங்கினார். அதில் இதுவரை கிட்டத்தட்ட மூவாயிரம் வியாதியஸ்தர்கள் சிகிச்சை பெற்றிருக்கின்றனர் என்று தெரிகிறது!




இப்பொழுது அவருடைய தாயாரின் பெயரால், அம்மாக்கண் கிராம இலவச மருந்தகமும், பிரசவ நிலையமும், சந்தோஷபுரத்தில் ஏற்படுத்தியிருக்கிறார். சென்ற ஜூலை 28-ம் தேதி மாலை ராஜாஜி அவர்கள் இந்த இலவச மருத்துவ மனையைத் திறந்து வைத்தார். சுகாதார மந்திரி ஸ்ரீமதி ஜோதி வேங்கடாசலம் அம்மையார் இவ்வைபவத்துக்குத் தலைமை வகித்தார்.

வரவேற்புரை வாசித்த டாக்டர் எம். சந்தோஷம் அவர்கள், இந்த டி. பி. வைத்திய விடுதி ஏற்பட்ட வரலாற்றை வெகு ரஸமாகச் சொன்னார். இந்தக் கரம்பு பூமியை ரூ. 2500 கொடுத்து வாங்கினோம். நிலத்துக்கு உடைமையாளருக்கு ரூ. 800 தான் போய்ச் சேர்ந்ததாம். மீதி இடையிலிருந்த தரகர் வாய்க்குப் போயிற்று!

“இந்த இடத்துக்குத் தண்ணீர் கிடையாது. மின்சார வசதி கிடையாது; பஸ் போக்குவரத்து வசதி கிடையாது. ஆனால் அந்த அந்த இலாக்காக்களைச் சேர்ந்த உத்தியோகஸ்தர்கள் இந்த ஸானிடோரியத்தின் உதவியை நாடத் தொடங்கினர். அதிலிருந்து எல்லா வசதிகளும் ஒன்றன் பின் ஒன்றாக வரத் தொடங்கின” என்றார் டாக்டர் சந்தோஷம்.

தமது தந்தையாரைப் பற்றி மிக உருக்கமாகக் குறிப்பிட்டார். அவர் தந்தை குழந்தைகளுடன் பிரார்த்தனை செய்யும் போது, “ஆண்டவனே! இந்தக் குழந்தைகளைத் தாங்கள் வளர்க்கக் கொண்டுவந்திருக்கிறேன். தாங்கள் எது நேர்மையானதெனக் கருதுவீர்களோ, அதற்காகப் போரிடும் படை வீரர்களாக வளர்ப்பீராக. ஏழை, எளிய, அனாதைகளுக்கு முன் வந்து உதவும் உபகாரிகளாக விளங்கும்படி வளர்ப்பீராக!” என்று கூறுவார். அந்த வார்த்தையை மெய்ப்பிக்கவே, டாக்டர் சந்தோஷம் அவர்கள் தமது தாயாரின் பெயரில் இலவச மருத்துவ, பிரசவவிடுதி ஏற்படுத்தியிருப்பதாகக் கூறினார்.

இந்த இலவச வைத்திய உதவிக்கு, பிரோபகார உள்ளம் படைத்த பணக்காரர்களிடமிருந்து பணம் வேண்டாம்; சர்க்காரிடமிருந்து மான்யம் வேண்டாம் என்கிறார். யாராகிலும் டாக்டர்கள், நர்ஸ்கள், வைத்திய மாணவர்கள் இலவசமாகத் தொண்டாற்ற முன்வந்தால் மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொள்ளப்படும் என்கிறார்.

இந்த மாதிரி விழாக்களுக்கு மந்திரிகள் தலைமை வகித்தால், உடனே சர்க்கார் உதவி செய்ய முன்வர வேண்டும் என்று கேட்பது சம்பிரதாயம். அந்தச் சம்பிரதாயத்துக்கு மாறாக டாக்டர் சந்தோஷம் நடந்து கொண்டு பிரமிப்பில் ஆழ்த்தி விட்டார்!

ஆனால் டாக்டர் சந்தோஷம் அவர்களோ, சுதந்திரக் கட்சியில் தாம் இருந்து கொண்டு போதிய அளவு அரசியலுக்குச் செலவழிக்க முடியவில்லை என்று மன்னிப்புக் கோரும் வகையில் பேசினார். சுதந்திரக் கட்சியின் – காந்தி மகானின் – தர்மகர்த்தாக் கொள்கை என்னவென்பதை நடைமுறையில் காட்டும் இப்பணியை விடச் சிறந்த பணியை, ராஜாஜியின் அரசியல் கொள்கையை, யார் செய்ய முடியும்?

அன்று திருவாளர் தான், டாக்டர் சந்தோஷம் அவர்களின் அரிய பெற்றோர்களைப் பற்றி நெஞ்சம் நெகிழும் வண்ணம் நினைவுகூர்ந்தார்.

ராஜாஜி அன்று டாக்டர் சந்தோஷம் தம்பதிகளை மனமாரப் பாராட்டினார். அதைவிட, ‘ஈன்ற பொழுதின் பெரிதுவக்கும் தன் மகனைச் சான்றோன் எனக் கேட்ட தாய்!’ என்றார் குறளாசிரியர். அந்தத் தாயின் மகிழ்ச்சியோடு ராஜாஜி சென்னைக்குத் திரும்பினார் என்றால், டாக்டர் சந்தோஷத்தை அவர் எவ்விதம் கருதுகிறார் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ!

## இருமல் மற்றும் ஜலதோஷத்திலிருந்து பூர்ண நிவாரணம் பெற





# ஸிரோலின் 'ரோஷ்' அருந்துங்கள்




இருமலுக்கும் ஜலதோஷத்திற்கும் ஏற்ற இந்தியாவின் குடும்ப மருந்து

இருமல் அல்லது ஜலதோஷமிருந்தால் அசட்டை செய்யாதீர்கள்—ஸிரோலின் அருந்தி அபாயமின்றி துரிதமாக பூர்ண நிவாரணம் பெறுங்கள். ஸிரோலின் இருமலை நிறுத்துவதோடு மட்டுமல்லாமல் இருமலை உண்டுபண்ணும் கிருமிகளைக் கொல்லவும் செய்கிறது. ஸிரோலின் தொண்டைப் புண்களுக்கு சமனமூட்டுகிறது. கபம் மற்றும் சளியை போக்குகிறது. அது எவ்வளவு கடுமையான இருமலிலிருந்தும் அபாயமின்றி துரிதமாக நிவாரணமளிக்கிறது. அபாயமற்ற, நிவாரணமளிக்கும் தன்மையையும் மற்றும் இனிய ருசியையும் ஸிரோலின் பெற்றிருப்பதால் குடும்பத்திலுள்ள அனைவரும் அதைப்பெரிதும் விரும்புகிறார்கள். ஸிரோலின் என்றால் குழந்தைகளுக்கு ஒரே குஷி!

உங்கள் வீட்டில் எப்பொழுதும் **ஸிரோலின்** வைத்திருங்கள்

'ரோஷ்' தயாரிப்பு — சோல் டிஸ்டிரிப்யூட்டர்கள்: வால்டாஸ் லிமிடெட்

# யாரோ ஒருவருக்கு

"மளிகைக் கடைக்குத்தானே போகிறீர்கள்?" என்றாள் என் மனைவி. 'ஆம்' என்பதற்கு அறிகுறியாக நான் தலையை ஆட்டினேன். "அப்படியானால் உயர்ந்த ரகக் காப்பிக்கொட்டையாகப் பார்த்து ஸ்பெஷலாக ஒரு வீசை வாங்கிக் கொண்டு வாருங்கள். மறந்து போனால் மறுபடியும் கடைக்குப் போக வேண்டியிருக்கும்" என்றாள் அவள்.

அவள் குரலில் கண்டிப்பு ஒலித்தாலும், அவள் மறைக்க முயன்று கொண்டிருந்த விஷமச் சிரிப்பை நான் ஓரக் கண்ணால் பார்த்து விட்டேன். எனக்கென்னவோ அவளுடைய இந்தப் பிரத்தியேகத் தேவையின் அவசியத்தைப் புரிந்துகொள்ள முடியவில்லை.

"ஏன் நான் குடிப்பதைவிட உயர்ந்ததாகக் காப்பி குடிக்க வேண்டும் என்ற ஆசை உனக்குத் தோன்றியிருக்கிறதோ?" என்று கிண்டலாகவே கேட்டேன்.

"அந்த ஆசை எனக்குத் தோன்றவில்லை! நம் வீட்டு வேலைக்காரி பொன்னம்மாவுக்குத் தோன்றியிருக்கிறது! நம் வீட்டுக் காப்பி நன்றாக இல்லையாம். நாம் குடிப்பதைவிட உயர்ந்த ரகக் காப்பியாகச் சாப்பிட ஆசைப்படுகிறாள், பாவம்!" என்றாள் என் மனைவி.

நான் தலையில் அடித்துக் கொண்டேன். "அப்போதே சொன்னேனே நான், கேட்டாயா? தினசரி காப்பி வேண்டும் என்ற கண்டிஷன் போடும் வேலைக்காரியை வைத்துக் கொண்டால் இப்படித்தான்!" என்றேன்.

"அவர்கள் காப்பிக்கு ஆசைப்படக் கூடாது என்றால் நான் அப்புறம் வேலைக்காரி வைத்துக் கொள்ளவும் ஆசைப்படக் கூடாதுதான்!" என்று முத்தாய்ப்பு வைத்து விட்டு அவள் உள்ளே போனாள்.



நகர வாழ்க்கையில் நடுத்தர வர்க்கத்தினருக்கு வீட்டு வேலை செய்து கொடுக்க வேலைக்காரியைத் தேடி அமர்த்துவது சாதாரணப் பிரச்னை இல்லை; மாபெரும் பிரச்னை. வேலை தேடிப் போகிறவர்கள், எம்ப்ளாய்மெண்டு எக்சேஞ்சில் பெயரைப் பதிந்து வந்து யாராவது, எந்த ஸ்தாபனமாவது, தங்களுக்கு அழைப்பு அனுப்ப மாட்டார்களா என்று ஏங்குவது போல், இங்கு, யாராவது தகுந்த வேலைக்காரப் பெண்கள் வேலை ஏற்றுக் கொள்ள வந்து சேர மாட்டார்களா என்று ஏங்கிக் கொண்டிருக்கும் இல்லத்தரசிகள் பலர் உண்டு.

"இந்தாங்கம்மா! சம்பளம் எட்டு ரூபாய் கொடுத்துடணும். கருக்கலிலே அஞ்சு மணிக்குப் பாத்திரம் தேய்க்க வந்துடுவேன். அப்புறம் எட்டு மணிக்கு வீடு கூட்டித் துணி தோய்க்க வருவேன். சாயங்காலம் மூணரைக்கு டாண்ணு வந்துடுவேன். நீங்க தயாரா இல்லாட்டி நான் போயிடுவேன். எட்டு மணிக்கு வரப்போ ஒரு டம்ளர் காப்பி கொடுத்துடணும்" என்பதுதான் நூற்றுக்குத் தொண்ணூறு வேலைக்காரப் பெண்மணிகளின் வேலை ஏற்பு அறிக்கையாக இருக்கும். எந்த ஓர் அயிட்டத்துக்கு ஆட்சேபனை எழுப்ப முயற்சி செய்தாலும் நம் பேச்சைக் கேட்க அவள் அங்கு நின்று கொண்டிருக்க மாட்டாள். வாசற்படி தாண்டித் தெருவில் இறங்கிவிட்டிருப்பாள்.

என் வீட்டில் கொஞ்ச நாளைக்கு முன் லட்சுமி என்ற அம்மாள் வேலை பார்த்து வந்தாள். "இந்தாம்மா! சாதத்தை இன்னும் கொஞ்ச முன்னாடியே வடிச்சு இறக்கக் கூடாது? ரொம்பக் குழைய விட்டுட்டியே! பிச்சைக்காரனுக்குப் போட்டேன்!" என்று என் மனைவியிடம் சொல்லிக் கொண்டிருந்தது என் காதில் விழுந்தது. என் மனைவியின் மாமியாரம்மாள் கூட இப்படித் தைரியமாகப் பேசிவிட முடியாது. ஆனால் வேலைக்கார லட்சுமி தனக்கு மறு நாள் மிஞ்சி வரும் சாதம் நன்றாக இருக்க வேண்டும் என்ற அக்கறையில் அப்படிக் கேட்டாள். என் மனைவியும் 'ஆகட்டும்' என்று தலையை ஆட்டினாள். வேறு ஏதாவது பதிலைச் சொல்லி வைத்தால் மறு நாள் அந்த லட்சுமி வேலைக்கு வருவாள் என்பது நிச்சயமில்லையே!

அப்படியே ஏதாவது சொல்லி வைத்தால் மாலை மூன்று மணிக்கு அந்த வேலைக்காரத் திலகம் வர மாட்டாள். நான்கு மணிக்கு ஓர் ஐந்து வயது வாண்டுச் சிறுமி வந்து நிற்கும். "எங்க அம்மாவுக்கு உடம்பு சரியில்லையாம்! வேலைக்கு வர முடியாதுன்னு சொல்லிச்சு. சம்பளப் பணத்தைக் கணக்குப்பார்த்து வாங்கிட்டு வரச் சொல்லிச்சு" என்று நீட்டி முழக்கும்.

வேலைக்கு அத்தனை மதிப்பு. வாங்கும் சம்பளத்துக்கு அத்தனை மதிப்பு! அவர்களுடைய மிரட்டலுக்குப் பயப்படுகிறவர் பயந்துகொண்டேதான் இருக்க வேண்டும். பயப்படாதவர்கள் வேறு வேலைக்காரியைத் தேடிக்கொண்டேதான் இருக்க வேண்டும்!

வாசலில் இருந்த கார்ப்பொரேஷன் குப்பைத் தொட்டி இரண்டு நாட்களாகவே நிரம்பி வழிந்து கொண்டிருந்தது. பக்கத்து வீட்டுக்காரர்கள் ஏதோ இடிந்த செங்கல் சுண்ணும்பு குப்பை கூளங்களைக் கொண்டு கொட்டி விட்டிருந்தார்கள். இரண்டு நாட்களாகத் தெருவில் குப்பை சேகரித்து எடுத்துப் போகும் கார்ப்பரேஷன் வண்டிக்காரன் அந்தக் குறிப்பிட்ட தொட்டியை வேண்டுமென்றே புறக்கணித்தான். அவன் வழியை மறித்து ஒரு நாள், "இந்தாப்பா! இந்தத் தொட்டியைக் கொஞ்சம் கவனி. இரண்டு நாட்களாக நிரம்பி வழிகிறது. தெருவைப் பார்க்கக் கஷ்டமாக இருக்கிறது" என்றேன்.

"அதைக் காலி பண்ண நம்மால் முடியாதுங்க! இந்த வண்டி இங்கேயே ரொம்பிப் போனுல் இன்னும் இரண்டு தெரு 'க்ளீன்' பண்ணணும்" என்ருன் விரைப்பாக.

"அப்படியானுல் இந்தத் தொட்டிக்கு இனிமேல் விமோசனமே இல்லை! அப்படித்தானே!" என்றேன் சற்றுக் காரமாகவே. குப்பை அள்ளுவதில்கூட அளந்து நிறுத்து வேலை செய்வது இன்றைய பாஷன்! "வண்டி இன்னிக்கு லோடு குறைஞ்சு வருதோ, அன்னிக்குப் பார்க்கலாம்" என்று சொல்லி விட்டுப் போனுன் அந்த ஆள்.

ஒரு வாரம் கழித்து, பிரஸ்தாபப் பேட்டையின் கவுன்சிலரைக் கண்டு பிடித்துத் தேடி விஷயத்தைச் சொல்லிச் சரிப்படுத்த மேலும் பதினைந்து நாட்கள் ஆகிவிட்டன.

சமூகத்தில் எந்தத் துறையில் இருப்பவர்களாக இருந்தாலும் சரி, என்ன பணி ஆற்றுபவர்களாக இருந்தாலும் சரி, அவர்கள் தங்களால்தான் அந்தப் பணி சிறப்புறுகிறது என்று மார் தட்டுகிறர்களே தவிர அந்தப் பணிதான் தங்கள் வாழ்க்கையின் ஜீவாதாரம் என்பதை மறந்து விடுகிறர்கள்.

அந்த மார்தட்டும் உணர்ச்சி, அவர்களிடம் ஓர் அகங்கார உணர்ச்சியைத் தோற்றுவிக்கிறது. அவர்களிடம் இருக்கும் இன்சொல் பேசும் குணத்தைக் கூட விரட்டி விடுகிறது. இந்தக் காலத்தில் எந்தத் தொழிலாளிகளைப் பார்த்தாலுமே, முதலில் அவர்களிடம் ஒரு வித வெடுவெடுப்பு உணர்ச்சிதான் தோன்றுகிறது. எந்த ஊதியமுமே, அவர்களுடைய வேலைக்குத் தகுதியாக அமைவதில்லை என்ற போலி எண்ணம் தோன்றி விடுகிறது.

எந்த நெருக்கடியான நிலையிலும் தன் கஷ்டத்தை மறந்து பிறரிடம் இன்முகம் காட்டியோ, எப்போதும் பிறருடைய மனம் சோர்வடையாமல் பேசி, தான் செய்யும் பணிக்கும் வாங்கும் ஊதியத்துக்கும் மதிப்புக் கொடுத்தோ, வாழும் நபர்களை விரல்விட்டு எண்ணி விடலாம்.

இந்த எண்ணம் எழும்போதெல்லாம் எனக்கு ஜார்ஜ் போல்ட் என்னும் அமெரிக்க இளைஞரின் நினைவு வரும். ஜார்ஜ் போல்ட் பிலெடல்பியா நகரில் ஒரு சாதாரண ஹோட்டல் மானேஜராக இருந்தார். ஒரு நாள் இரவு அங்கு தங்குமிடம் தேடி ஒரு வயோதிகரும் அவர் மனைவியும் மூட்டை முடிச்சுகள் இல்லாமல் வந்தார்கள். நகரிலே அப்போது மூன்று மகாநாடுகள் நடந்து கொண்டிருந்தன. ஹோட்டல் நிரம்பி வழிந்தது. இடம் கொஞ்சம்கூட இல்லை.

"பெரியவரே! தங்களுக்கு வசதியாக இடம் கொடுக்க முடியாததற்கு வருந்துகிறேன். ஓர் அறைகூடக் காலி இல்லையே!" என்று தயக்கத்துடன் கூறிய போல்ட் தொடர்ந்து, "உங்களுக்குக் கஷ்டம் இல்லாமல் இருந்தால் இன்றைய இரவை என் சொந்த அறையில் கழியுங்கள். எனக்கு இங்கே இரவு முழுதும் வேலையிருக்கிறது" என்ருர்.

"மிகுந்த வந்தனம். அமெரிக்காவிலேயே பெரிய ஹோட்டல் ஒன்றுக்கு மானேஜராக இருக்கும் தகுதி உங்களிடம் இருக்கிறது. ஒரு வேளை நானே உமக்கு அப்படி ஒரு ஹோட்டல் நிர்மாணித்துத் தருவேனே என்னவோ?" என்ருர் முதியவர். முதியவரின் நல்ல எண்ணத்தை போல்ட் ரசித்தார். அதோடு அந்த நினைவை மறந்து விட்டார்.

ஆனுல் பத்து வருடங்கள் கழித்துத் திடீரென்று போல்ட்டுக்கு ஓர் அழைப்பு வந்தது. நியூயார்க் நகரில் புதிதாக எழுப்பப்பட்ட வால்டார்ப் அஸ்டோரியா ஓட்டலுக்கு மானேஜராகப் பதவி ஏற்க வந்தார். அப்போதுதான் அந்த ஹோட்டலை எழுப்பியவர் முன்பொரு நாள் தம் அறையில் வந்து தங்கிய முதியவரான வில்லியம் வால்டார்ப் அஸ்டார் என்று தெரிய வந்தது.

இன்முகமும் கடமை உணர்ச்சியும், தொழில் மதிப்பும் என்றுமே நற்பலனை அளிக்கும் என்பதற்கு இந்த உதாரணம் போதாதோ?

யாரோ எழுதியது

# வாட்டர்பரீஸ் வைட்டமின் காம்பவுண்ட்




## திட ஆரோக்கியத்துக்கும் தென்புக்கும்

**நல்லதென்பதற்கு 4 காரணங்கள் இதோ...**

1. எந்த சீத வெப்ப நிலையிலும் எப் பருவத்திலும் முதியோர், சிறுவர் யாவரும் சுவைத்துப் பருகுவதற்கு இனிய, உடல் நலனுக்கு உகந்த டானிக் இதுவே.
2. இரத்த விருத்தி செழிக்கச் செய்து, நரம்புகளுக்கு வலுவூட்டுகிறது.
3. பசியின்மைக் கோளாறுகளுக்கும், பிணியாறும் பருவத்திற்கும் பிரத்தியேகமாக உரித்தானது.
4. பொது பலவீனம், ஊட்டக் குறைவு, சோர்வு, உணவிலே உலோகப் பொருள் குறைபாடு, மிதமிஞ்சிய உடல் தளர்ச்சி, உள்ளத் தளர்ச்சி யாவினுக்கும் உகந்த நிவாரணமாகச் சிபாரிசு செய்யப்படுகிறது.

**வாட்டர்பரீஸ் வைட்டமின் காம்பவுண்ட்**

வார்னர் – லாம்பர்ட் பார்மஸூடிகல் கம்பெனி.
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு. எஸ். ஏ.வில் இணைக்கப்பெற்றது)

# நினைப்பதெல்லாம்...



மிஸ். சரோஜா பி. ஏ. பி. டி. உடுத்துக் கண்ணாடி முன் நின்று முகப்பூச்சு பூசிக் கொண்டிருந்தாள். தெருவில் கார் ஹாரன் சத்தம் கேட்டது. ஜன்னல் வழியாய் அவள் எட்டிப் பார்த்தாள்.

"நான் உள்ளே வரலாமா?" என்று கேட்டவாறு கௌசல்யா அறைக்குள் வந்தாள்.

"வாங்க. குட் மார்னிங்! இன்று என்ன இத்தனை சீக்கிரம்...இன்னும் என் வேலைகள் முடியவில்லையே? எத்தனை சீக்கிரம் புறப்பட்டாலும் அரை மணி நேரமாகும்" என்றாள்.

"இன்று என் பெரியப்பா பெண்ணும் மருமகனும் வந்திருக்கிறார்கள். அவர்களுடன் உறவினர்கள் வீடுகளுக்குச் செல்ல வேண்டும். அப்பாவும் அம்மாவும்தான் ஊரில் இல்லையே. அண்ணனாவது இருந்தாலும் தேவலை. இந்தச் சமயம் பார்த்து இவர்கள் வந்திருக்கிறார்கள். நான் உன்னை அழைத்துச் செல்ல வரவில்லை. இன்று பள்ளிக்கு வரமாட்டேன். அதைச் சொல்லத்தான் வந்தேன். ஹெட்மிஸ்டரம்மா! தயவு செய்து...." என்னும்போதே "குறும்புக்காரி! லீவ் லெட்டரை வேலைக்காரியிடம் அனுப்புவதுதானே? ஏன் இத்தனை தூரம் வந்தாய்! சரி, சரி. சீக்கிரம் போ. எனக்கு அடுப்பில் வேலையிருக்கிறது" என்று கூறி அவள் முதுகில் தட்டினாள்.

"சிங்கநல்லூர் போகிறேன். இந்த வழி வாய்த்ததாலே செல்ல வேண்டுமென்று நானே வந்தேன். இந்தா! லீவ் விண்ணப்பம்" என்று கூறி "காரில் என் அக்காவும் அவள் கணவரும் இருக்கிறார்கள். வாயேன்" என்று அவள் கையைப் பிடித்து இழுத்தாள். சரோஜா கௌசல்யாவின் பின் சென்று காரருகில் நின்றாள். காரில் அமர்ந்திருக்கும் காதலர்களைப் பார்த்ததும் திடுக்கிட்டாள் சரோஜா. இமைப்பொழுதில் தன்னைச் சமாளித்துக் கொண்டு கௌசல்யாவைப் பார்த்தாள். "இவள்தான் என் அக்கா அபர்ணா தேவி. எம். ஏ., பி. எச் .டி. இவர் இவள் கணவர் நஞ்சப்பன், எம். எஸ்ஸி. எம். இ. அமெரிக்காவிலேயே நிலைத்து விட்டார். இவரின் பெற்றோர்கள்....." என்னும்போதே, சரோஜா அதி மென்மையாய் "வயதுக் காலத்தில் நிம்மதியாய்க் கிராம வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கிறார்கள் போலும்" என்று அவர்கள் இருவரையும் பார்த்துக் கரங்குவித்தாள்.

"வணக்கம், நான் யாரென்று கௌசல்யா சொல்லி விருப்பாள். எனக்கு நேரமாகி விட்டது. வருகிறாயா, கௌசல்யா!" என்று பரபரவென்று உள்ளே சென்றாள் சரோஜா.

நஞ்சப்பன் முகத்தில் அசடு வழிந்தது. அபர்ணா தன் தங்கையைப் பார்த்து "கௌசல்யா! நீ வழிமுழுதும் உன் ஹெட்மிஸ்டரைப் பற்றிச் சொன்னபோது என் மனம்

எம்.எஸ். கமலா

அதை ஏற்கவில்லை. உண்மையில் நேரில் பார்த்ததும் தான் நீ சொன்னதில் மிகைப் படுத்திச் சொல்லவில்லை என்றறிந்தேன். அவளுக்கென்று யாருமே இல்லையா? இவள் மணம் முடித்துக் கொள்வதாயிருந்தால் எத்தனை கனவான்கள் வந்து இவள் காலருகே தவம் கிடப்பார்கள்?''; என்றான் அபர்ணா.

''இந்தப் பெண் ஜென்மங்களுக்கே மற்றப் பெண்களைப் பற்றி விமர்சனம் செய்வதில் வெகு சிரத்தை. அவள் மனமற்று இயற்கை யழகு குன்றாது புனிதமாயிருப்பது உனக்கு வேதனையா யிருக்கிறதா? எவ்வளவு நாகுக் காய் நமக்கு விடை கொடுத்துச் சென்றாள். உலகில் ஒன்றியாய் வாழக் கற்ற மேதை'' என்றான் நஞ்சப்பன். அவன் குரல் மாறுபட்டுச் சொற்கட் கடக்கட வெளி வந்தன. இரு மங்கைகளும் அவனைப் பார்த்தனர். அவன் கண்களை மூடிக் கொண்டான். அபர்ணா தன் கணவனிடம் தோன்றிய மாற்றத்துக்குக் காரணம் புரியாது திகைத்தாள். கார் கனவேக மாய்ப் பறந்தது.

க்

**கா**ரிலிருந்த டிரேன்ஸிஸ்டர் ''நினைப்ப தெல்லாம் நடந்து விட்டால்'' என்று இரைப் பட இசையை இசைத்துக் கொண்டிருந்தது. உள்ளே சென்ற சரோஜாவின் காதில் ரேடியோ விலிருந்து ''நினைப்பதெல்லாம் நடந்து விட் டால்....'' என்ற பாட்டு கேட்கவே ரேடியோ வின் குரல் வளையை அழுத்திவிட்டுக் கட்டிலில் சாய்ந்தாள். அவள் சிந்தனை வழியில் எத் தனையோ சம்பவ மைல் கற்கள் ஓடும் ரயில் முன் வரும் இயற்கைக் காட்சிகளை வேகமாய்ப் பின்னுக்கு தள்ளுவதைப் போல் ஓடி மறைந்தன. ஒவ்வொரு கல்லும் சொல் லிய உருக்கமான செய்திகள் எத்தனையோ மன மேடையில் டெலிபிரிண்டரைப் போல் காட்சியளிக்கத் தொடங்கின. என்ன இருந் தாலும் இன்ப துன்ப உணர்ச்சிகள் ஆண் பெண் இருபாலாருக்கும் ஒன்றுதானே!

அப்பொழுது சரோஜா பதின்மூன்று வயதுச் சிறுமி. அவள் தந்தை சித்தப்பன் முந்திரிப் பருப்பும், அபரக்கும் வியாபாரம் செய்து, கொண்டு விஜயவாடாவில் செல்வத்தைத் திரட்டிக் கொண்டிருந்தார். திடீரென்று அவர் காலமாகி விட்டார். அவர் சகோதரி சம்பகம் தன் கணவனுடனும் ஒரே மைந்தன் நஞ்சப்ப னுடனும் வந்தார். சித்தப்பன் விட்டுச்சென்ற வியாபாரத்தை நஞ்சப்பனின் தந்தை தொடர்ந்து நடத்தினார். நஞ்சப்பனின் தந்தைக்குச் சொந்த சுதந்திரம் இல்லை. சிறு மளிகைக் கடை வைத்திருந்தார். மைத்துனர் காலமானதும் அந்த வியாபாரத்தை அவ ரால் பார்த்துக் கொள்ள முடிந்தது. அச்சம யம் நஞ்சப்பன் எஸ். எஸ். எல். ஸி. பரீட்சை எழுதியிருந்தான். சரோஜாவின் தந்தை காலமானதும் அவள் தாய் மன வேதனையால் கணவனிறந்த மூன்றும் மாதம் அவரைப் பின் பற்றிச் சென்று விட்டாள். சரோஜாவின் போஷணைக்காகவும், தன் சகோதரனின் வியா பாரம் நல்ல முறையில் நடத்தவும் சம்பகத் தம்மாள் விஜயவாடாவில் தன் குடும்பத் துடன் நிலைத்து விட்டாள்.

சரோஜா பெற்றோர்களை இழந்து துடிக்கும் போது நஞ்சப்பன் அவளுக்கு எத்தனையோ ஆறுதல் வார்த்தைகள் கூறுவான். அவளுக்குப் படிப்பு சொல்லிக் கொடுப்பான். அவளுக்கு எல்லா விளையாட்டுக்களும் சொல்லிக் கொடுப் பான். அவன் கலாசாலை மாணவனாகிய பின் அவளுக்குப் புரியுமோ புரியாதோ தான் படிக் கும் பாடங்களை யெல்லாம் அவளுக்குக் கற்பிப் பான். அவளும் பாடங்களை யெல்லாம் முத்து முத்தாய் எழுதி வைப்பாள். அவள் உலகம் அவன். அவள் பொழுதுபோக்கு சாதனம் அவன். சரோஜா செல்வத்தில் பிறந்த செல்லப் பெண். அவளிடம் சண்டித்தனம் அதிகம். ஒருவர் பின் ஒருவராய்ப் பெற் றோர்கள் மறைந்ததும் அவள் சண்டித்தனமும் செத்து மடிந்தது. அவளிடம் பொறுமை குடி கொண்டது. சிரத்தையாய்ப் படிக்கத் தொடங்கினாள்.

நஞ்சப்பன் எம். எஸ்ஸி. முடித்து மேல் நாடு சென்றான். சரோஜா பி. ஏ. தேறி பி.டி. யில் சேர்ந்தாள். அவள் படிக்க நினைக்கவில்லை. நஞ்சப் பன்மேல்நாடு சென்றதும் அவளுக்குத் துணைவனை இழந்தாற் போல் தோன்றியது. அத்தையைக் கேட்டாள். அத்தம்மாளுக்கு மருமகள் மேல் மட்டற்ற ஆசை. அழகு, படிப்பு, செல்வம் அனைத்தும் சரோஜாவின் காலடியில் சரணடைந்து கிடந்தன. அவ ளால்தான் தன் மகன் உயர்தரக் கல்வி கற்க மேனாடு போக முடிந்தது. பிறக்கும்போதே தன் மருமகளாகப் பிறந்தவள் என்ற பெருமை அவளுக்கு. நஞ்சப்பனும், சரோஜா

# கோவிந்தனுடைய புதியவீடு

"கேள்விப்பட்டீர்களா? கோவிந்தன் புதிய வீடு கட்டுகிறாராமே?"

செங்கற்களாலும், சுண்ணாம்புச் சாந்தாலும் சுவர் எழுப்பி, புத்தம் புதிய ஓடுகள் வேய்ந்து கட்டப்பட்ட கோவிந்தனுடைய புது வீட்டைப்பற்றி ஊரெங்கும் ஒரே பரபரப்பு.



"இதைக்கட்டி முடிக்க ரூ. 4,000/-செலவாகியது."

"நம்ப முடியவில்லையே. இவ்வளவு பணம் கோவிந்தனுக்கு எப்படிக் கிடைத்தது?"

"அவனுடைய ஆயுள் இன்சூரன்சுப் பாலிசியிலிருந்து கிடைத்தது. பாலிசி இந்த வருஷம் தான் முதிர்வடைந்தது"

கந்தன் ஒரு இளம் விவசாயி.

கோவிந்தனைப் போலவே தானும் ஒரு வீடு கட்டிக் கொள்ள தனக்குள்ளாகவே தீர்மானித்துக் கொண்டார். இதற்காக எல்.ஐ.சி. ஏஜண்ட் ஒருவரை நாடுகிறார்.

"நீங்கள் ஒரு ஆயுள் இன்சூரன்சுப் பாலிசி எடுப்பதின் மூலம் சில வருஷங்களுக்குப்பின் பெருந்தொகையொன்றைப் பெறமுடியும். எளிய, சுலபமான தவணைகளில் பிரீமியங்களைச் செலுத்தலாம்"

ஆயுள் இன்சூரன்சுப் பாலிசி ஒன்று எடுத்திருப்பதைப் பற்றி கந்தன் இன்று பெருமைப்படுகிறார். சில வருஷங்களுக்குப்பின் கோவிந்தனைப் போலவே கந்தனுக்கும் புத்தம் புதிய வீடு ஒன்று சொந்தமாகிவிடும்.





ஆதரவளிக்கும் கரங்கள் ஆயுள் இன்சூரன்சுக் கரங்களே!

ASP/LIC-

# மில்க் ஆப் மக்னீஷியா என்பது என்ன?

**இது மெக்னீஷியம் ஹைட்ராக்ஸைடின் எமல்ஷன். அமில நாசினியும் மலமிளக்கியுமான இது இரைப்பை சம்பந்தமான (அஜீரணக்) கோளாறுகளின் சிகிச்சையில் ஏராளமாக உபயோகப்படுத்தப்படுகிறது.**

மில்க் ஆப் மக்னீஷியாவிற்கு, மெக்னீஷியம் ஹைட்ராக்ஸைட் மிக்ஸ்சர் B.P., மெக்னீஷியா மாக்மா யு. எஸ். பி., க்ரீம் ஆப் மக்னீஷியா B. P. போன்ற பெயர்களும் உண்டு. எப்பெயரால் அழைக்கப்பட்டாலும் இதன் அடிப்படையான பொருள் ஒன்றே. மேலும் ஒரு அங்கீகாரமான ஔஷதகரண விதியின் கண்டிதமான நியதிக்கும், பிரமாணத்திற்கும் தக்கபடி இது உற்பத்தி செய்யப்படுகிறது. இது எந்த வர்த்தகப் பெயரில் விற்பனை செய்யப்பட்டாலும் சரி அப்பெயர் தயாரிப்பாளரை சுட்டிக் காட்ட அனுகூலமாகுமே தவிர இதன் தரத்தை உயர்த்தவோ, தாழ்த்தவோ செய்யாது.

இருந்த போதிலும், விற்பனைப் பெயர், வாடிக்கையாளரை பொறுத்த மட்டில் மிகவும் முக்கியம். ஏனென்றால் நன்கு தெரிந்த ஒரு பெயர் அவருக்கு தயாரிப்பாளரின் நம்பகத்தன்மையைப் பற்றி உறுதியளிக்கிறது. இக்காரணத்தினால் தான் கணக்கற்ற வாடிக்கையாளர்கள் அன்றாடம் 'மந்த்' (MandH) மில்க் ஆப் மக்னீஷியாவை வாங்குகிறார்கள். இது யுனைடெட் ஸ்டேட்ஸ் ஔஷதகரண விதிகளின்படி தயாரிக்கப்பட்டு குணத்திற்கும் தரத்திற்கும் நன்கு பரிசீலனை செய்யப்படுகிறது. ஆகையால் இதன் தரமும், தூய்மையும் கேள்விக்கு இடமற்றதாக விளங்குகிறது. எல்லாவற்றிற்கும் மேலாக, மற்ற எல்லா 'மந்த்' (MandH) தயாரிப்புகளைப் போலவே, மருந்துகள் தயாரிப்பதில் 50 வருடங்களுக்கு மேலாக உள்ள அனுபவத்தின் சிறப்பையும் பெற்றுள்ளது.

மார்டின் & ஹாரிஸ் (பிரை) லிட்., மெர்கண்டைல் பில்டிங்ஸ், லால்பஜார், கல்கத்தா-1

M/P/1 TA

வும் சேர்ந்து விளையாடும் போதும், ஒன்றும் உண வருந்த அமரும் போதும் பார்த்து அகமகிழ் வாள். மகன் மேனாட்டி லிருந்து வந்ததும் சரோஜாவை அவனுக்கு மணம் செய்து வைத்து மகிழ வேண்டுமென்று சம்பகத்தம்மாளும் அவர் கணவனும் திட்டமிட்டிருந்தனர்.

பருவ மங்கை சரோஜாவைப்பற்றி சொல்ல வேண்டாம். அவள் மனத்தில் தான் எத்தனை மதுர எண்ணங்கள், தன் அத்தான் மேல் நாட்டிலிருந்து வரும்போது நம் நாட்டுப் பழக்க வழக்கங்களைத் துறந்து வருவாரோ? அப்படி வந்தால் தானும் அவரைத் துறக்க நேருமோ? அதைப் பற்றி எண்ணும் போது அவள் உள்ளம் பெருங் காற்றில் துடி துடிக்குக் குலுங்கும் கொடியைப் போல் குலுங்கும்.

**கா**லக் கருவில் நாட்கள் தளிர்த்து, மாதங்கள் அரும்பி, வருடங்கள் இரண்டு மலர்ந்தன. நஞ்சப்பன் டாக்டர்பட்டத்துடன் விஞ்ஞான மேதை என்ற பட்டத்தையும் பெற்று நாடு திரும்பினான். அவன் வரும் நாளை ஆவலுடன் எதிர்நோக்கிய சரோஜாவின் மன விண்ணில் ஆசைப் பறவை சிறகடித்துப் பறந்தது.

அன்று அவன் வருகிறான். அவன் பிரிவால் தான் எத்தனை வேதனை யடைந்தாள் என்பதை அவன் அறிய வேண்டும். அதைத் தன் செய்கைகளில் வெளிப்படுத்தி அவன் தன்னிடம்...

இப்படிக் கஷ்டமில்லாது காற்று மேடையைக் கட்டிய வாறு, தான் இயற்கையுடன் இருந்தால் 'போது மென்று. அவனுக்கு விருப்பமான உணவுப் பதார்த்தங்களைச் சமைக்கத் தொடங்கினாள். சம்பகத்தம்மாள் அவளை அலங்கரித்துக் கொண்டு ஸ்டேஷனுக்குப் போகச் சொன்னாள். அதற்கு அவள் இசையவில்லை. ஹைதராபாத்தில் விமானத்தில் வந்திறங்கும் பிள்ளையை வரவேற்க நஞ்சப்பனின் தந்தை மட்டும் சென்றிருந்தார்.

வாசலில் கார் வந்து நின்ற ஓசை. சமையல் அறைக் கதவருகில் பதினைந்தாம் நூற்றாண்டுப் பாவையொருத்தி வாரி முடித்த கூந்தலும் நெற்றியில் நயாபைசா அளவு குங்குமமாய் நகைத்த படி நின்றிருந்தாள். நஞ்சப்பன் கல்வியின் பொலிவு முகத்தில் ஒளி வீச ஒய்யாரமாய் உள்ளே வந்தவன் சரோஜாவைப் பார்த்ததும், ''இதென்ன? அணுகுண்டு யுகத்தில் அடிமை சிங்காரமும், பத்தாம் பசலி வேடமும்?'' என்று புன்முறுவல் பூத்த படியே, சரோஜா அருகில் சென்று ''இப்படியும் நீ வெகு அழகாய்த் தானிருக்கிறாய். நவீன மோஸ்தர் அலங்காரங்களைக் கண்டு அலுத்த கண்களுக்குக் குளிர்ச்சியாயிருக்கிறது'' என்று அவள் கன்னத்தில் மெல்லத் தட்டினான். அவள் கன்னங்கள் குபீரென்று சிவந்தன. அவள் சிட்டாய் உள்ளே ஓடினாள். ''நஞ்சப்பா! இன்று அவள் அடுக்களை ராணியாம். அத்தானுக்கு வேண்டியதெல்லாம் இன்று அவள்தான் செய்தாள்'' என்று பெருமை தாங்காமல் சொல்லியபடி தாய் மகனைப் பார்த்தாள். அவன் சோபாவில் வந்து அமர்ந்து கொண்டான்.

''ஆம், நஞ்சப்பா! நீ வரும் செய்தி அறிந்ததிலிருந்து அவள் முகத்தில் அற்புதமான ஒளி வீசுகிறது. அவள் பெற்றோர்கள் செல்வத்தையும் செல்வியையும் விட்டுச் சென்றது பெரிதல்ல. அவள் தெரிவையாகி, பண்புமிக்க பாவையாய் உன் சேவையைத் தான் மிக மிக விரும்புகிறாளெனத் தெரிகிறது. அடுத்து ஒரு நல்ல நாள் பார்த்து உங்கள் திருமணத்தை முடித்து...'' என்று தந்தை சொல்லும் போதே ''அப்பா!'' என்றான் நஞ்சப்பன் மெல்லிய குரலில் அழுத்தமாய்.

அச்சமயம் அவனுக்குக் காப்பியும் பலகாரமும் பரிவுடன் எடுத்துக் கொண்டு வந்த சரோஜா நஞ்சப்பன் பேச்சைக் கேட்டு நின்றாள்.



பத்து நாள் லீவு எடுத்து வெளியூர் போன உபாத்தியாயர் திரும்பி வந்தார். உடனே ஒரு மாணவன் அவரை நெருங்கித் தனக்கு நான்கு நாட்கள் லீவு கேட்டான். உடனே உபாத்தியாயர் சொன்னார்:

''நாலு நாள் லீவு எடுத்து ஜாலியாக இருக்கலாம் என்று எண்ணமோ...ஏன்! நான் லீவில் இருந்தபோது நீங்க ஜாலியாக இருந்தது போதாதோ?''



''என் மாப்பிள்ளை எந்த நேரமும் ஏதாவது கேட்டுக் கொண்டே யிருக்கிறான். போன மாதம்தான் மோதிரம் வாங்கிப் போட்டேன். இப்போ ஸ்கூட்டர் வேணுமாம்!''

''என்னமோ அந்தமட்டும் நான் அதிர்ஷ்டம் செய்தவன். இப்படி யெல்லாம் என் மாப்பிள்ளை அது வேணும் இது வேணும் என்று தொல்லை கொடுப்பதில்லை. சொத்தையே எழுதி வாங்கிக் கொண்டு விட்டான் கலியாணத்தின்போது!''

"யார் யாரை மணப்பது? மாமன் இறந்ததும் நாம் இங்கு வந்தபோது சரோஜா அழுததை நினைத்தால் இன்றும் என் மனம் துடிக்கிறது. பெற்றோர்களை இழந்த அவளுக்கும் பெற்றோர்களாய் வந்து பொறுப்பை ஏற்றபோது அவள் உங்கள் பெண். நான் அவளுக்கு உடன்பிறந்தவன். இதுவரையில் சற்று முன் நீங்கள் சொல்லும் வரை சரோஜாவுக்கு இந்த எண்ணமிருக்கிறதென்று நான் அறியேன். அப்பா! அந்த எண்ணத்தை அவளுக்குத் தோன்றும்படி செய்தது யார்? அம்மா என் மருமகள், மருமகள் என்று சொல்லும் போதெல்லாம் தன் சகோதரனின் மகள் என்று கூறுவதாக நினைத்தேன்" என்று தாயின் முகத்தைப் பார்த்தான்.

"டேய் நஞ்சே! உன் நெஞ்சைத் தொட்டுப் பாரடா! உங்கப்பனின் மளிகைக்கடை உன்னை உலகைச் சுற்றும் மேதையாக்கவில்லை. இன்று நீ மினுமினுப்பது என் அண்ணனின் அரகத் தொழிலடா! சரோஜாவுக்கென்ன குறை? குணக்குன்று. பூமியில் மாவிட ஜீவனுப் பிறந்த ஒரு குறைதானடா! அவள் அல்லாது......அவள் என் மருமகளாய் வராது போனால்....."

"அவள் பிறக்கும் போதே உன் மருமகள் தானம்மா! அந்த உறவை முறிக்க முடியாது. உரிமையைப் பிரிக்க முடியாது....." அதற்கு மேல் அவன் சொல்வதைக் கேட்க விரும்பவில்லை. சரோஜா வந்த சுவடு தெரியாமல் உள்ளே சென்றாள். கையில் கொண்டு வந்தவற்றை அடுக்களையில் வைத்து மூடினாள். முகத்தைக் கழுவி நன்கு உடுத்துக் கொண்டு, "அத்தை!" என்றழைத்தாள்.

"நஞ்சப்பனுக்குப் பலகாரம் கொண்டு வரவில்லையாம்மா?" என்றாள் நஞ்சப்பனின் தாயார்.

"நான் குளித்து உடை மாற்றிக் கொண்டு தான் மறுவேலை. சரோஜா, இன்னும் அரை மணி நேரம் பொறுத்திரு" என்றான் நஞ்சப்பன் கெஞ்சியபடியே.

"அப்படியானால் நான் கனகதுர்க்காவைத் தரிசித்து வருகிறேன்" என்றாள் சரோஜா.

"மாலை எல்லோரும் போகலாம். நஞ்சப்பனும் வருவான்" என்றாள் அத்தை.

"இல்லை, சரோஜா! மாலை நான் விசாகப் பட்டினம் புறப்பட வேண்டும். நீ இப்பொழுதே போய் வா!" என்றான் நஞ்சப்பன்.

அவன் அத்தையிடமும், மாமாவிடமும் விடைபெற்று நேராய்த் தன் தந்தையின் நண்பர் 'மோசெர்ல கப்பாராவ்' என்ற சட்ட நிபுணரிடம் சென்று தன் சொத்து சுதந்திரம் முழுதும் தன் அத்தை, மாமன் இருவருக்கும் சேர வேண்டியதென்றும் அதை அவர்கள் விருப்பப்படி எப்படியும் உபயோகிக்கலாம் என்றும் எழுதிக் கொடுத்து விட்டு நேரே ஸ்டேஷனுக்குச் சென்றான். சென்னை செல்லும் வண்டி தயாராய்க் காத்திருந்தது. அதில் ஏறினான். அவன் அன்புக் கோட்டை தகர்ந்திடினும், அவன் அறிவுக் கோட்டை வலிவுற்றது. தென்னாடு முழுதும் சுற்றினான்.

கோவையில் அவன் சிநேகிதனை எதிர்பாராது சந்தித்தான். அவனுடன் பஞ்சாலை

கனைப் பார்க்கச் சென்ற போது சரோஜா தன் தந்தையின் நண்பரைச் சந்தித்தாள். அவர் அவளைப் பற்றி யோகக்ஷேமம் விசாரித்தார். "கோவை அரசாங்கப் பெண்கள் உயர்நிலைப்பள்ளியில் தலைமையாசிரியை பதவி காலியாயிருக்கிறது. பஞ்சாலையைப் பிறகு பார்க்கலாம், என்னுடன் வாம்மா!" என்று அழைத்துச் சென்றார்.

ஏழாண்டுகளாய் வெகு திறமையாய்ப் பள்ளியை நிர்வகித்து வருகிறாள் சரோஜா. தன் வேலைகளைத் தானே செய்து கொள்கிறாள். மாலையில் தன் இல்லத்தில் தன்னை வந்து அணுகும் மாணவிகளுக்கு இலவசமாய்க் கல்வி போதிப்பாள். அவள் மனத்தைக் கட்டுப்படுத்திய மாமேதையாயினும் இன்று நஞ்சப்பனைக் கண்டதும் பழைய நினைவுகள் அலை பாய்ந்தன. ஸ்டவ்வில் கொதித்துக் கொண்டிருந்த குழம்பு கண்டித் தீய்ந்த நாற்றம் வீசியது. தன் சிந்தனையிலிருந்து விடுபட்டு எழுந்தாள். அடுத்த வீட்டு ரேடியோவில், "நமக்கும் மேலே ஒருவனடா! அவன் நாலும் தெரிந்த தலைவனடா!" என்று இசைத்தட்டு முழங்கியது.

ஸ்டவ்வை நிறுத்திவிட்டு, பரபரவென்று நான்கு புடவைகளை எடுத்துப் பெட்டியில் வைத்துக் கொண்டு பணப் பையுடன் பள்ளிக்குச் சென்றாள். இரண்டு மாதங்களுக்கு லீவ் எழுதிவைத்து, இரண்டு மாதங்களுக்குப் பள்ளிக்கூடம் எப்படி நடக்க வேண்டுமென்பதையும் எழுதி வைத்துவிட்டுச் சென்றாள்.

**மா**லை நஞ்சப்பன் சரோஜா வீட்டை அடைந்த போது அவள் வீட்டு வாயிலில் கனத்த பூட்டு தொங்கியது. அவன் வேதனையுடன் சினிமாவுக்குச் சென்றான். அங்கும் அவனால் இருக்க முடியவில்லை. நேராய் வீட்டுக்கு வந்தான். கௌசல்யா அபர்ணாவிடம் எதைப் பற்றியோ சுவாரசியமாகப் பேசிக் கொண்டிருந்தாள். நஞ்சப்பனைக் கண்டதும் அபர்ணா குதூகலமாய் "எங்கு சென்றிருந்தீர்கள்? என் தங்கை நாளையிலிருந்து ஹெட்மிஸ்ட்ரஸ்ஸாம். காலையில் நாம் பார்த்தோமே அந்த அம்மாள் ஏதோ அவசர காரியமாய் இரண்டு மாத லீவில் சென்றிருக்கிறாளாம்" என்றாள்.

"காலையில் நாம் பார்த்தபோது சொல்லவில்லையே!" என்று கௌசல்யாவைப் பார்த்தான் நஞ்சப்பன். அவன் மனம் மாத்திரம் தன்னை அவள் பார்க்க விரும்பாததால்தான் அப்படிச் செய்திருக்கிறாள் என்று கூறியது.

"அவள் பெரிய மர்மப் பெண். காதலில் வீழ்ச்சி அடைந்தவள் என்கிறார்கள் சிலர். கொழுத்த பணக்காரி என்கிறார்கள் சிலர். நான் அறிந்த மட்டும் அவள் சேவைக்காகப் பிறந்த தூய கன்னிகை. தான் ஈட்டும் பொருளில் தன் தேவைக்கு வேண்டியதை மட்டும் எடுத்துக் கொண்டு மற்றவைகளை ஏழை மாணவிகளுக்குப் பகிர்ந்து விடுகிறாள். அவள் எதையும் வாய் திறந்து வெளியிட மாட்டாள்; செய்கையில்தான்காட்டுவாள். சரி, வாருங்கள் சாப்பிடலாம்" என்று கௌசல்யா கூறிக் கொண்டே சாப்பாட்டுக் கூடத்துக்குச் சென்றாள்.

# புது வெள்ளம் - உங்கள் கருத்து

'புது வெள்ளம்' போல் அகிலன் புதுப் புதுக் கற்பனையால் மேன்மைக்குரிய பாத்திரங்களைப் படைக்கிறார். அவர் வாழ வேண்டும். வாலிபப் பருவம் எய்தியிருக்கும் 'கல்கி' தொடர்ந்து மலர் தரும் மரமாக வளர வேண்டும்.

இலங்கை
9-8-62
ம. இரத்தினராக

அகிலன் அவர்களின் உள்ளத்தில் தோன்றிய ஓர் உணர்ச்சிக் காவியம்தான் புது வெள்ளம்.

திருவனந்தபுரம்
10-8-62
எஸ். எஸ். மணி

திரு அகிலன் அவர்கள் தம் ஒவ்வொரு பாத்திரத்தின் மூலமும் பல்லாயிரக்கணக்கான மக்களை வியப்படையச் செய்திருக்கிறார்.

ஒரு தந்தை தன் மகனின் நல் வாழ்வுக்காகப் பாடுபடுவதையும் அந்த மகன் பிறருக்கென்றும் கேவலமாக உழைப்பதையும் கண்டவுடன் உயிர் துறக்கும் அன்னையைக் காண்கிறோம். எத்தகைய துன்பந்தான் வரினும் சத்தியத்தை உறுதியாகக் கடைப்பிடித்து, இரக்க உணர்ச்சி கொண்ட முருகையன் ஓர் உயர்ந்த படைப்பு. அகங்காரமும், கர்வமும், அடக்கமின்மையும் கொண்ட பெண் வர்க்கத்துக்குள்ளே சாந்தா ஒரு நல்ல எடுத்துக்காட்டு. தேசநலனே தன் உயிர் மூச்சாயும், நாட்டு மக்களின் நல்வாழ்வே தன் வாழ்வாகவும் கொண்ட பெருமாள்சாமி ஒவ்வொருவர் மனத்திலும் நாட்டுப் பற்றையும், தியாக உணர்ச்சியையும் ஏற்படுத்தியதோடு நம் உள்ளத்திலும் நீங்கா இடம் பெற்று விட்டார்.

காரைக்கால்
10-8-62
ஆ. சிவகாமி

முருகையன் நேர்மைக்காக வாழ்ந்தான். பதவி கிடைத்தபோதிலும், இனிய வாழ்வு அவனை எதிர் நோக்கி நின்ற போதிலும் நேர்மையை விட்டு விலகவில்லை. மனிதனை மனிதனாக மதித்த முருகையன் சாந்தாவுடன் என்றும் வாழ்வானாக.

சென்னை 27
9-8-62
ஆ. ஜெய கிருஷ்ணன்

அகிலன் அவர்களின் சிந்தனைச் சிகரத்தினின்றும் உதித்துப் பொங்கிப் பரவி வந்த புது வெள்ளத்துக்கு இவ்வளவு சீக்கிரம் மடைவிட்டு, எங்கள் இன்பப் பெருக்குக்குத் தடைவிடுவார் என்று நான் எதிர்பார்க்கவில்லை. எளினும் முருகையனின் உறுதிபாய்ந்த வைர உள்ளமும், பண்பின் சிகரம் சாந்தாவின் பொலிவும், செல்வரத்தினத்தின் பண்பாடும், சித்திராவின் நிலையற்ற அன்பு நிலையும் ஆசிரியரால் வெகு அழகான நடையில் சித்திரிக்கப் பெற்றுள்ளன.

புதுதில்லி
9-8-62
ராஜாமணி

'புது வெள்ளம்' நம் நாட்டில் பெருகி வரும் கலப்படம், மோசடி முதலியவைகளுக்கு ஒரு சவுக்கடி போலாகும். இதைப் படித்தோ, அல்லது கேட்டோ பலர் திருந்தினால் மிகவும் மகிழ்ச்சியாக இருக்கும். இம்மாதிரி பல புதிய கருத்துக்களைக் கொண்ட தொடர்கதைகளை அடிக்கடி பிரசுரித்தல் நலம்.

சென்னை-5
9-8-62
வி. ஆர். ஜயலட்சுமி

"கல்கி" ஏட்டில் அகிலன் அவர்களின் "புது வெள்ளம்" என்ற அறிவிப்பைக் கண்ட சில நாட்களில் நாட்டில் வெள்ளம் வந்தது.

காவிரி வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட நாங்கள் சிந்தியது கண்ணீர்தான். புதுவெள்ளத்தால் அடித்துச் செல்லப்பட நாங்கள் இப்போது சிந்திக் கொண்டிருப்பது இதயத்தினின்று சொட்டும் இரத்தத் துளிகள்.

"கல்யாணியின் கண்ணீரைத் துடைப்பதற்கு ஆயிரக்கணக்கான பெண்கள் அங்கே அன்போடு காத்திருந்தார்கள்" என்று கூறும் அகிலன் எங்களுடைய விழிகள் சிந்தும் நீரைத் துடைக்க யாரை அனுப்பப் போகிறார்?

'புது வெள்ளம்' வற்றி விட்டது. அது கண்ட இடத்தை மறுபடியும் 'வெள்ளம்' என்று காவிரிக் கரையில் எங்களைப் பயமுறுத்திக் கொண்டிருக்கிறது.

அலையின் புதுவெள்ளத்தை ஏட்டிலே தாங்கி நாட்டிலே ஓட விட்ட 'கல்கி' வாழ்க!

தஞ்சை
10-8-62
பல்லவன்



"டேய்! மேலே மேலே வார்த்தையை விடாதே! அப்புறம் அந்த வார்த்தை கள்ளே விழுங்கும்படியா செய்துவிடுவேன்!"

அப்படியா! போடா குஞ்சாலாடு, மைசூர்ப்பாகு, இட்லி, மசால்வடை!"

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited, at the Kalki Press, Kilpauk, Madras-10. Managing Editor, T. Sadasivam.



# சிங்கப்பூருக்கு

# ஜெட்

## ஸர்வீஸ்!

சிங்கப்பூருக்குச் செல்ல
வாரம் 2 முறை
புதிய ஜெட் ஸர்வீஸ்!

*பிரதி வியாழக்கிழமை:* மதராஸ் . சிங்கப்பூர்

*பிரதி சனிக்கிழமை:*

பம்பாய் . மதராஸ் . சிங்கப்பூர் . ஜாகர்த்தா

**ஏயர்-இந்தியா**

பி. ஓ. ஏ. ஸி. மற்றும் கன்டாஸ் ஒத்துழைபபுடன்

JWT-AIL-3478-II (R)

REGISTERED No. M. 4392

Registered as a Newspaper in Ceylon